# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்! — சுவாமி விவேகானந்தர்

பிங்கள ௵ ஆடி ௴

தொகுதி 57 | சிறப்பு மலர் | இதழ் 7



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-600 004

# M's own Condensed English Version of the Gospel of Sri Ramakrishna

*It is a fact that you will never be able to hear the Master (Sri Ramakrishna) in person now. Yet, here is a chance to listen to what he has to tell mankind.*

Mahendranath Gupta, one of Sri Ramakrishna's disciples, known popularly as 'M' took note of many of his conversations in Bengali, and these have been translated into English under the name of the

*Gospel of Sri Ramakrishna*

by Swami Nikhilananda.

Before this complete translation came out, M (Mahendranath Gupta) had written and published, not as a translation but as an independent writing, in his own English, a condensed volume of the Gospel. As this has been out of circulation after the complete

translation came out, we propose to revive it as the *condensed edition of the Gospel.* In M's own English, it has got its own unmatched charm.

The Ramakrishna Math is a world-wide movement organised by Swami Vivekananda with its headquarters at Belur Math, Howrah, West Bengal, whose motto is 'renunciation and service', as lived and taught by Sri Ramakrishna and Swami Vivekananda.

Sri Ramakrishna Math, Madras, is a branch of this world-wide spiritual, cultural, educational and philanthropic organisation. One of the important activities of the Math is the publication of books in English, Telugu, Tamil and Sanskrit on the eternal, spiritual and philosophical heritage of India on a non-commercial and non-profit basis.

Among the publications of this Math, there is this great book referred to above—M's *condensed English version of the Gospel.*

We are anxious to bring out a subsidised edition of this, which could be priced low so as to be within the purchasing capacity of even the low income group.

The whole scheme, to be successfully carried out, will require several thousand copies to be printed, and may cost about a lakh of rupees.

We therefore request you to be so good as to give a substantial donation for this worthy cause.

Thanking you,

Swami Tapasyananda
*President*

Sri Ramakrishna Math
Mylapore, Madras-600 004
India



## ஒரு வேண்டுகோள்

★ அன்பர்கள் தங்களுடைய சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் சிலரை சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இதன் மூலம் நமக்கும் மற்றவர்களுக்கும் நாம் நன்மையைச் செய்து கொள்கிறோம்.

★ தனிப்பிரதி விற்பனையோ, சந்தா சேர்க்கும் ஏஜண்டுகளோ குறிப்பிடத் தக்க அளவுக்கு இல்லாததால், வாசக அன்பர்களே நண்பர்களைச் சந்தாதாரர்களாக்கி ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

★ ஒவ்வொரு ஆண்டும் சந்தாவைச் செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக, எப்போதும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும் வகையில் ஆயுள் சந்தாதாராகச் சேர்ந்து விடுவது நலம். ஆயுள் சந்தாதாரராக வசதி இல்லாத அன்பர்கள், சில ஆண்டுகளுக்குச் சேர்ந்தாற்போலவும் சந்தாவை முன்னதாகச் செலுத்தலாம்.

★ சந்தாதாரர்களை அதிகப்படுத்துவதில் தீவிர முயற்சி செய்து வருகிறோம். அன்பர்கள், தங்களின் பங்காக இந்தத் தெய்விகக் கைங்கரியத்தில் கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது மாதந்தோறும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகும்.

★ நண்பர்களுக்கும், அபிமானிகளுக்கும் பத்திரிகை போகும்படி செய்தால் ஒவ்வொரு மாதமும் அவர்களுக்கு நல்ல வெகுமதி அளித்ததாக அமையும்.

★ பந்துக்களுக்கும், குமாரத்திகளுக்கும் பத்திரிகை அனுப்பச் செய்தால் மாதந்தோறும் தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த சன்மானமாகும்.

★ பெரியோர்கள், இந்த வேண்டுகோளைத் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணித்துவிடாமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

### சந்தா விவரம்:

**வருட சந்தா (சிறப்பு மலர் உட்பட) ரூ. 7-00; தனிப்பிரதி 70 காசு; ஆயுள் சந்தா: ரூ. 100 (ஆயுள் சந்தாவைப் பகுதிப் பகுதியாகவோ, மாதம் ரூ. 10 ஆகவோ, மொத்தமாகவோ செலுத்தலாம்.)**

★ சந்தாதாரராக விரும்புபவர்களும் பத்திரிகை விற்பனையாளர்களும் பின்வரும் முகவரிக்குத் தொடர்பு கொள்ளலாம்.

புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது, புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள், தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியலாயம்



**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

மயிலாப்பூர் : : சென்னை-600 004

விலைப் பட்டியல்

# எங்கள் தமிழ் நூல்கள் வெளியீடு

| I ஸ்ரீ ராமகிருஷ்ணர் : | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 11 | 00 |
| ,, ,, காலிகோ | 12 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம் (முதல் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டாம் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டு பாகமும்) | 15 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரது திவ்விய சரிதப் பாடல் | 4 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 8 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கதைகள் | 2 | 75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபநிஷதம் | 1 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | 2 | 00 |
| குருதேவர் வாக்கியம் | 1 | 25 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கதை | 0 | 35 |
| **II சுவாமி விவேகானந்தர்:** | | |
| இந்தியப் பிரசங்கங்கள் | 4 | 50 |
| ,, ,, காலிகோ | 6 | 00 |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 3 | 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 1 | 25 |
| சுவாமி விவேகானந்தர் (ரா. கணபதி) | (அச்சில்) | |
| சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள் | 6 | 00 |
| ,, ,, காலிகோ | 7 | 00 |
| இராஜயோக உரைகள் | 2 | 50 |
| அருளுரை | 1 | 75 |
| கல்வி | 2 | 50 |
| நமது தாய்நாடு | 1 | 00 |
| பாரதப் பெண்மணிகள் | 2 | 50 |
| கருமயோகம் | 2 | 00 |
| பக்தியோகம் | (அச்சில்) | |
| தற்கால இந்தியா | 1 | 00 |
| நம்மவர் நாட்டு ஞான வாழ்க்கை | 0 | 25 |
| எனது வாழ்வும் பணியும் | 0 | 50 |
| எனது குருநாதர் | 1 | 25 |

| | ரூ. | பை |
|---|---|---|
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 | 60 |
| எனது போர்முறை | 0 | 75 |
| சிகாகோ பிரசங்கம் | 1 | 00 |
| விவேகானந்தர் பாதையிலே... | 0 | 50 |
| விவேகானந்தரின் கதை | (அச்சில்) | |
| **III ஸ்ரீ சாரதாதேவியார்:** | | |
| ஸ்ரீ சாரதாதேவியார்—அவரது வரலாறும் திருவாக்கும் | 3 | 25 |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 1 | 50 |
| தூய அன்னையார் ஸ்ரீ சாரதாமணி தேவியார் | 1 | 25 |
| **IV இதர நூல்கள்:** | | |
| ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளின் வரலாறும் ஞானோபதேசமும் | 3 | 00 |
| சுவாமி ராமகிருஷ்ணானந்தர் | 3 | 50 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 | 50 |
| திரு அருள் மொழி | 6 | 00 |
| வேதாந்தக் கதைகள் (புதிய நூல்) | (அச்சில்) | |
| நாரதர் கலகம் | (அச்சில்) | |
| இந்துமத ஸாரம் | 3 | 00 |
| பக்தி ஸாரம் | 2 | 25 |
| பக்தி மார்க்கம் | 1 | 00 |
| கடோபநிஷதம் (நாடகம்) | 2 | 00 |
| வேதாந்த ஸாரம் | 1 | 25 |
| காலிகோ | 2 | 00 |
| பஜனாவளி | 5 | 00 |
| ஆத்ம நிவேதனம் | 2 | 00 |
| நடராஜ வடிவம் | 0 | 35 |
| ஸ்ரீ ராமநாம ஸங்கீர்த்தனம் | 0 | 20 |
| ஆராத்ரிகம் | 0 | 20 |
| **V முரசு நூல்கள் : (பாக்கட் சைஸ்)** | | |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞான முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சாரதாதேவியாரின் அன்பு முரசு | 0 | 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீர முரசு | 0 | 80 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோக முரசு | 0 | 80 |
| புத்தரின் அற முரசு | 0 | 80 |
| இயேசு கிறிஸ்துவின் அருள் முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சங்கரரின் வேதாந்த முரசு | 0 | 80 |

சந்தாதாரராகுங்கள்

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் (மாதப் பத்திரிக்கை) ஆண்டு சந்தா ரூ. 7–00
ஆயுள் சந்தா ரூ. 100; தனிப்பிரதி 70 காசு (ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதியாகவோ, மாதம் பத்து ரூபாயாகவோ செலுத்தலாம்)

---

**சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம்: சுடர்கள் 1—10**

சுவாமி விவேகானந்தர் பேசியவை, எழுதியவை—அனைத்தும் அடங்கிய 10 பகுதிகள்.
ஒவ்வொரு பகுதியும் 500 பக்கங்களுக்குக் குறையாதது.

**சாதா பைண்டு விலை ரூ. 5–00** **காலிகோ பைண்டு ரூ. 6–50**



## ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

**மயிலாப்பூர் : : சென்னை 600004**

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்


| தொகுதி—58 | பிங்கள ஷூ ஆடி மீ | இதழ் 7 |
| --- | --- | --- |


## பொருளடக்கம்

பக்கம்







# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்

| தொகுதி 57 | பிங்கள ஹூ ஆடி மீ | இதழ் 7 |
| --- | --- | --- |


## பிரார்த்தனை

सर्ववेदान्त-सिद्धान्त-गोचरं तमगोचरम् ।
गोविन्दं परमानन्दं सद्गुरुं प्रणतोऽस्म्यहम् ॥

—विवेकचूडामणिः

*ஸர்வவேதாந்த-ஸித்தாந்த-கோசரம் த-மகோ சரம்!*
*கோவிந்தம் பரமானந்தம் ஸத்குரும் ப்ரண தோ (அ)ஸ்ம்யஹம்*

— விவேகசூடாமணி

**வா**க்குக்கும் மனதுக்கும் எட்டாதவரும், எல்லா வேதங்களின் முடிவான சித்தாந்த வாக்கியங்களிலிருந்து தெளிந்த புத்தியால் அறியக்கூடியவரும், சிறந்த ஆனந்த ரூபியும் நல்ல குருவும் ஆகிய கோவிந்தரை நான் வணங்குகிறேன்.

*கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே!*
*காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே!*

*வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே!*
*மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே!*

*நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுவில் நின்ற நடுவே!*
*நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலம்கொடுக்கும் நலமே!*

*எல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற சிவமே!*
*என்னரசே! யான்புகலு மிசையுமணிந் தருளே!*

— வடலூர் வள்ளலார்





# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

கடவுளிடம் பக்தி செய்; அதுதான் இப்போது நீ உடனே செய்ய வேண்டிய கடமை.

வெறும் சாஸ்திர ஞானத்தால் மட்டும் என்ன பயன் ஏற்படும்? பண்டிதர்களுக்கு சாஸ்திரங்களிலும் சுலோகங்களிலும் வேண்டுமானால் நல்ல பழக்கம் இருக்கலாம். ஆனால் அவைகளைத் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பதால் என்ன நன்மை ஏற்படும்? சாஸ்திரங்களில் சொல்லியிருப்பவைகளை எல்லாம் ஒருவன் தன்னுடைய அனுபவத்தில் உணர வேண்டும். ஒருவனுக்கு எவ்வளவு காலம் உலகப்பற்று இருக்கிறதோ, அதாவது காமகாஞ்சன ஆசை இருக்கிறதோ, அதுவரையிலும் கேவலம் வெறும் சாஸ்திரப் படிப்பு மட்டும் ஞானத்தையும் தராது. முக்தியையும் தராது.

சாஸ்திரங்களைப் படிப்பதால் கடவுள் பக்தியை ஒருவன் பெற முடியுமா? இந்துக்களுடைய வருஷவாரி பஞ்சாங்கத்தில், இந்த தேதியில் இவ்வளவு மழை பெய்யும் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆனால் அந்தப் பஞ்சாங்கத்தை நீ கசக்கிப் பிழிந்தால், ஒரே ஒரு சொட்டுத் தண்ணீர் கூட உனக்குக் கிடைக்காது. அதேபோல சாஸ்திரங்களில் பல நல்ல விஷயங்கள் அடங்கி இருக்கின்றன. ஆனால் அவைகளை வெறுமனே படிப்பதால் மட்டுமே, ஒருவன் மத வாழ்க்கையை அனுஷ்டிப்பவனாகி விட மாட்டான். ஆண்டவனிடம் பக்தியைப் பெறுவதற்கு, அத்தகைய சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள அறிவுரைகளைப் பின்பற்றி நடக்க வேண்டும்.

ஈஸ்வரனுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு, காந்தத்திற்கும் இரும்புக்கும் உள்ள தொடர்பு போன்றதாகும். என்றாலும், பகவான் ஏன் மக்களை ஆகர்ஷிப்பதில்லை? கனமான மண் மூடிய இரும்புத்துண்டைக் காந்தம் இழுக்காது. அதைப் போலவே, மாயையால் கனமாக மூடப் பட்டுள்ள ஜீவன், எப்போதும் இருந்து கொண்டிருக்கும் பகவானின் கவர்ச்சிக்கு உட்படுவதில்லை. இரும்பை மூடியுள்ள மண்ணை, தண்ணீர்விட்டுக் கழுவி நீக்கி விட்டால், உடனே அது காந்தத்தால் இழுக்கப்பட்டு விடும். அதைப் போலவே ஜீவனை உலக வாழ்க்கையில் கட்டுப்படுத்தும் மாயையாகிய மண்ணை, இடைவிடாமல் கண்ணீர்விட்டுப் பிரார்த்திப்பதாலும் வணக்கத்தாலும் நீக்கினால், அந்த ஜீவன் உடனே பகவானால் கவர்ந்து இழுக்கப்படுவான்.

கடவுளின் திருவடிகளில் பக்தியைப் பெறுவதற்கு ஒருவன் ஆத்ம சாதனங்களைப் பழகத்தான் வேண்டும்; கொழுந்து விட்டெரியும் அருள்தாகத்துடன் முழு மனதுடன் கசிந்துருகிக் கண்ணீர் விட வேண்டும். பல விஷயங்களிலும் சிதறியோடும் மனதைச் சிதறவிடாமல் தடுத்து இறைவனிடத்திலேயே நிலைத்திருக்கும்படி செய்ய வேண்டும். ஈசுவரன் வேதத்திலோ, வேதாந்தத்திலோ அல்லது அவை போன்ற வேறு எந்த சாஸ்திரங்களிலோ இருக்கிறான் இல்லை. கடவுளுக்காகவே இதயபூர்வமாக ஒருவன் ஏங்கி ஏங்கி அழுதால் அன்றி, ஆண்டவனை அடையவே முடியாது.



ஓம்




## தாயகத்தின் காவல் தெய்வம்

'நீலத்திரைக்கடல் ஓரத்திலே நின்று நித்தம் தவம் செய் குமரி' என்று பாட்டுக்கொரு புலவனுகிய பாரதி அன்று பாடினுன்.

இன்றோ நிலைமை வேறுவிதமாக மாறிவிட்டது. நித்தம் தவம் செய் குமரித்தாயையும் தாண்டி, நமது தாயகத்தின் ஈடுஇணையற்ற காவல் தெய்வமாக விவேகானந்தர் நின்று கொண்டிருக்கிறுர்.

ஒவ்வொரு கிராமத்திற்கும் காவல் தெய்வமாக ஒரு கிராம தேவதை உண்டு. அதுபோல இந்தியா முழுமைக்குமாக காவல் தெய்வமாக விவேகானந்தர் இருந்து கொண்டிருக்கிறுர் என்று சொல்வது பொருந்தும்.

குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்குமிடம் என்பார்கள். விவேகானந்தரும் ஒரு விதத்தில் குமரக்கடவுள் போன்றவர்தாம். இருவரைப் பற்றியும் நினைக்கும்போது இளமையும் அழகும் நினைவில் எழுகின்றன. குமரக்கடவுள், வேலைக் கரத்தில் தரித்தவர் என்கிறுர்கள் பௌராணிகர்கள். சுவாமிஜியின் வரலாறு, அவரைக் குறித்து தண்டம் கரத்தில் ஏந்தியவர் என்று கூறுகிறது. எது எப்படி இருப்பினும் இருவரும் உலகை வலம் வந்ததிலும், தமிழ் மண்ணேடு நெருக்கமாக உறவு கொண்டதிலும், ஞானப் பழமாக விளங்குவதிலும் ஒற்றுமை கொண்டு விளங்குகிறுர்கள்.

பக்தர்கள் பரமேஸ்வரன், பார்வதி ஆகியோருடன் கூடிய முருகப்பெருமானை வணங்குகிறுர்கள். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், அன்னை ஸ்ரீசாரதாமணிதேவியார் ஆகியோருடன்கூடிய விவேகானந்தரையும் வணங்குகின்றனர்.

'இந்திய மண்தான் எனது சொர்க்கம். அதன் ஒவ்வொரு துளியும் எனக்குப் புனிதம் மிக்கது' என்றும், தம்மைக் குறித்துக் குறிப்பிடும்போது 'பாரத பூமியின் சுருங்கிய வடிவம்' என்றும் விவேகானந்தர் குறிப்பிட்டதுண்டு. தம்மீது அன்பு செலுத்தும் விருப்பத்தைத் தெரிவித்தவர்களை நோக்கி'இந்தியாவை நேசிப்பதன் மூலம் தம்மை நேசிக்கலாம்' என்றவர் விவேகானந்தர்.

அன்ருெருநாள், அந்த மகான் கன்னியாகுமரியின் கடற்கரையில் மெல்ல உலாவியபடி ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பரமஹம்சரின் ஸ்தூல மறைவிற்குப் பிறகு இந்தியா முழுவதும் கால்நடையாகவே அவர் சுற்றித் திரிந்து கொண்டிருக்கிறுர். அவரது கால்கள் மட்டுமல்ல, அவரது உள்ளம்கூடச் சிந்தனை வயப்பட்டு ஓயாமல் ஒழியாமல் சுழன்றபடி இருந்தது. கடலின் பேரிரைச்சலையும் விஞ்சும் எண்ணங்கள் ஆயிரமாயிரமாக அவர் நெஞ்சில் குமிழிட்டுக் கிளம்பி வெடித்தபடி இருந்தன.

எதிரிலே கடலின் நடுவே கண்ணுக்கெட்டிய தொலைவில் ஒரு பாறை தென்பட்டது. சஞ்சாரமற்ற அங்கு செல்ல விரும்பினுர் அந்தத் துறவி. ஆனுல் கையிலே பணம், காசு தொடுவதில்லை என்ற உறுதிபூண்டு பரிவ்ராஜக வாழ்வைத் துவக்கி இருந்த அவரிடம் படகுக்காரனுக்குத் தர ஏது பணம்? என்றுலும் தளர்ச்சியுறவில்லை அத்துறவி. அஞ்சாமை, ஆண்மை, ஆன்மபலம் ஆகியவற்றை அணிகலனுகக் கொண்ட அவர் அலைகடலுள் பாய்ந்து, 'சமுதாயத்தில் எதிர் நீச்சலிட்டேனும் கருதியதைச் சாதிப்பேன்' என்பது போலப் பாறையை நீந்தி அடைந்தார்.

அன்றைய தினம் விவேகானந்தர் தமது திருவடிகளைப் பதித்தபோது, அந்தப் பாறைக்கே ஓர் பூரிப்பு ஏற்பட்டிருக்கும்! நேற்றுவரை அது வெறும் பாறையாக இருந்திருக்கலாம். ஆனுல்

இன்றோ அது சரித்திரத்தில் சாகாவரம் பெற்ற பாறையாகி விட்டது! புத்தனையும் போதிமரத்தையும் நினைவுகூர்ந்து, 'போதி மரமே, உனக்குக் கிடைத்த வரலாற்றுப் புகழை, உயிரற்ற ஜீவனாகிய எனக்கும் நமது தாயகச் செல்வன் வாங்கிக் கொடுத்திருக்கிறார்! புனிதப்புரட்சியைத் தோற்றுவித்த புண்ணிய புத்தன் போன்று தூய்மையை, அறிவை, ஆற்றலை, அன்பை—இவை அனைத்திற்கும் அடிப்படையாக ஆன்மிகத்தையும் இணைத்துப் புதிய புத்தன் விவேகானந்தன் தற்கால விஞ்ஞான இயந்திர சமுதாயத்தை முன்னின்று வழி நடத்தப் போகிறார்' என்றெல்லாம் எண்ணமிட்டு, அந்தப் பாறை பூரிப்புக்கொண்டிருக்கும்; புளகாங்கிதம் கண்டிருக்கும்!

ஆனால், குன்றினை அடைந்தாலும் குமரனின் உள்ளக்குமுறல்களாகிய சூறைக்காற்று ஓயவில்லை. எண்ணற்ற சிந்தனைகள் பல அடுக்கடுக்காக எழுந்து நிழற்படம் போன்று அவர் சிந்தையில் விரிந்தன. போராட்டம், புயல், பூகம்பம் அவ்வளவும் அந்த இளம் சன்னியாசியின் இதயத்தில் எழுந்து உக்கிர தாண்டவம் புரிந்தன.

அப்படி அந்தப் பாறையிலே, கப்பறை ஏந்திய அந்த இளம் சன்னியாசி என்னதான் எண்ணமிட்டார் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

**வி**வேகானந்தர் உண்மையான ஆன்மிக வாழ்க்கையைக் கேலிக்குரியதாக்கி, ஆன்மிக வாழ்க்கை என்றாலே இயற்கையின் நடைமுறைகளுக்கு வேறுபட்ட ஒரு செயற்கை என்ற ஒரு தோற்றத்தை உண்டுபண்ணிச் சமய வாழ்க்கையை மலினமடையச் செய்யும் திட்டங்கள் எதையும் மணிக்கணக்காக அந்தப் பாறையிலே உட்கார்ந்து தீட்டிக் கொண்டிருக்கவில்லை. மாறாக, அவரது நெஞ்சில் இந்திய மக்களின் உண்மை நலத்தை நாடும் உண்மை அவா நிறைந்த உயிர்ச் சக்தியுடன் துடிதுடித்துக் கொண்டிருந்தது. இந்தப் புண்ணிய பூமியின் கண்மணிகளாகிய ஆத்மஞானிகள், முக்த புருஷர்கள் ஆகியோரால் கண்டறிந்து அனுபவிக்கப்பட்ட இணையற்ற ஆன்மிக அனுபூதி ஞானமும் அதை நடைமுறைப்படுத்தப்பட வேண்டிய வழிமுறைகளையும் அவர், ஆழ்ந்து ஆழ்ந்து துருவித்துருவி மூன்று நாட்கள் அந்தப் பாறையிலே அமர்ந்து ஆராய்ந்தார்.

**சு**வாமிஜியின் வாழ்க்கைப் பணி—அல்லது வேறுவிதமாகச் சொல்வதாயின், விழிப்புற்று எழுந்தே தீரவேண்டிய புதிய பாரதத்தின் வருங்காலச் சாதனைகள் — அவரது மனக்கண் முன்விரிந்தன. தமது பரிவ்ராஜக வாழ்க்கையின்போது கிட்டிய அனுபவங்களை ஒட்டுமொத்தமாக இணைத்துத் தொகுத்து அவர் பார்த்தார். சமுதாய ஆன்மிகக் கண்ணோட்டம் உட்பட பல்வேறு கோணங்களிலிருந்து பாரதத்தை நுணுக்கமாக அவர் ஆராய்ந்து பரிசீலித்தார். மொழி, கல்வி, கலை, பண்பாடு, பொருளாதாரம் போன்ற பல்வேறு துறைகளில் வேறுபாடுகள் காணப்பட்டாலும், பாரமார்த்திகப் பெருவாழ்வு ஒன்றேதான் இத்தாய்த்திருநாட்டின் அடிப்படை என்பதைத் தீர்க்கதரிசனமாக அவர் தெளிவாகக் கண்டார்.

தேசத்தின் தாழ்விற்கான காரணங்களை அடிமுதல் அந்தம்வரை ஒவ்வொன்றாக ஆராய்ந்தார். நமது நாட்டின் ஆக்கப்பூர்வமான மறுமலர்ச்சி படிப்படியாக எப்படி எல்லாம் அமைவ்து, வலிமை தருவதாக அமையும் என்று அப்பெருமகன் சிந்தித்தார். சிலர் நினைப்பது போன்று மூளையை மழுங்கச்செய்து மனிதனைப் பேதை ஆக்குவது சமய வாழ்வு அல்ல; உண்மையில் கேடுகளுக்குக் காரணம், தெளிந்த சிந்தனைகளோடு கூடிய உண்மையான ஆன்மிக வாழ்வு நடைமுறைப்படுத்தப் படாததுதான் என்ற சிந்தனைகளில் அவர் தோய்ந்தார்.

பாதசாரியாகப் பாரதத்தை வலம் வந்த போது, தாமே நேரில் கண்முன் கண்ட மக்களின் வறுமையும், அறியாமையும் அவர் உள்ளத்தை வருத்தின. இறுதியில், தேசிய வாழ்வின் பல்வேறு துறைகளிலும் அடிமைப்பட்டுத் தாங்களும் மனிதர்கள்தாம் என்பதையே ஏறத்தாழ மறந்து மிகமிகத் தாழ்ந்து, தாழ்வின் பாதாளத்தையே தொட்டுக் கொண்டிருக்கும் தமது ஒருதாய் வயிற்றுத் தாயக மக்களை, எப்படி எல்லாம் சுதந்திரராக்குவது என்ற வினா விஸ்வரூபம் எடுத்து அவர் உள்ளத்தில் மேலெழுந்து நின்றது.

இந்தியாவின் வளவாழ்விற்கான திட்டங்கள் அவரது அடிநெஞ்சினின்றும் ஊற்றுக்கண்கள் திறக்கப்பெற்ற நீர்ச் சுனையைப் போலப் பொங்கின. 'வயிறு காய்ந்தவர்களிடையே சமயப்

பிரச்சாரம் செய்வது பொருளற்றது; அது பெரிய பாவம்! வறியோரின் பொருளாதார விமோசனத்திற்கு முதலில் அடிகோல வேண்டும்—**தர்மம் ஒன்றுதான் பாரதப் புண்ணிய பூமியின் உயிர்நாடி.** அது தழைத்தோங்கிய காலங்களில் எல்லாம் தேசத்தில் எல்லா நன்மைகளும் சிறப்புற்று மிளிர்ந்தன. அது குறையவே கேடுகள் பல இன்று நேர்ந்துள்ளன. மேலைநாட்டு நாகரிகம் என்ற வெற்று மயக்கமும், போலித்தனமான ஆடம்பரமும் இடைக் காலத்தில் நாட்டினுள் வேர்விட்டுப் பரவி, ஆக்ரமித்து, எளிதில் கண்களுக்குப் புலப்படாத வகைகளிலே நலிவிழைக்கத் தொடங்கியிருக்கிறது. அதனிடமுள்ள குணங்களை எல்லாம் ஏற்றுக்கொண்டு குற்றங்களை அறவே புறக்கணித்துக் களையவேண்டும்......' இத்தகைய அருங்கருத்துக்கள் பல அந்த வீரத்துறவியின் வீறுகொண்ட உள்ளத்தில் கடலினும் மேலாக இறைச்சலிட்டு நின்றன.

இதனை விவேகானந்தரே பிற்காலத்தில், 'நான் சிகாகோ சென்றது இந்து மதத்தின் பெருமையை உலகறியச் செய்வதற்காகத்தான் என்று பலரும் நினைக்கிறார்கள். இங்கே எனது மக்கள் வறுமைத் தீயில் வாடுகின்றனர். துன்ப வெள்ளத்தில் மூழ்கி அலைகழிக்கப்படுகின்றனர். அவர்களின் துன்பங்களைக் காணும்போதெல்லாம் எனது நாடி நரம்புகள் விதிர்ப்புற்று எழும். இரத்த நாளங்களில் குருதி அலைஅலையாய்ப் பாய்ந்து செல்லும். உதவ மனம் விழைந்தும், உதவ வகையறியாமல்தான், நான் அமெரிக்கா சென்றேன். அங்கு சென்றாவது இதற்கு ஏதாவது விமோசனம் தேட முடியுமா என்று எண்ணித்தான் நான் அமெரிக்கா சென்றேன்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

இவ்விதம் போதி மரத்தடியில் அமர்ந்து ஞானம் பெற்ற புத்தபிரான், தமது தர்ம சக்கரப் பிரவர்த்தனத்தைத் துவக்கியது போல, பாறையில் விவேகானந்தர் சிந்தனைப் புயல் ஓய்ந்து தீர்க்க முடிவுடன் அமைதி பெற்றுத் தியானத்தில் ஆழ்ந்து எழுந்தபோது, அற ஆழியை அவனியிலே திறம்பட உருட்டுவதற்கான அற்புதத் திட்டத்துடன் எழுந்தார். அந்தப் பாறையிலே அமர்ந்து, அருமைப் பாரதத்தின் ஆன்மிகப் புதல்வரான அவர் தீட்டிய திட்டங்கள்தாம், பிற்காலத்தில் சொல்லால் இழைத்த களம்கண்ட கவிதைகளாக அவரது திண்ணிய நெஞ்சினின்றும் வெடிகுண்டெனப் பீறிட்டெழுந்தன. அவை எத்தனை எத்தனையோ பல வெற்றிகளை ஈட்டின என்பது உண்மைதான். ஆனால் இந்திய வரலாறு என்பது அத்துடன் முற்றுப்பெறவில்லை.



நாளும், புற்றீசல்கள் போன்று பல்கிப்பெருகும் கணக்கிலடங்காப் பிரச்சினைகளைத் தீர்க்கத் தளபதி போன்று குமரிமுனையில் நின்று இன்றும் விவேகானந்தர் அழைப்பு விடுத்தபடி இருக்கிறார். இன்றைய தினம் கன்னியாகுமரி செல்பவர்கள், அங்கு குன்றின்மீது குடிகொண்டுள்ள தமது காவல் தெய்வத்தை வழிபட்டு ஊக்கம் பெற்றுத் திரும்புகிறார்கள்.

இனி நமது தலையாய பணி, அப்பெருமானின் நெஞ்சிலே விரிந்த எண்ணங்களை அவரவர் உள்ள இடத்தில் நின்றும், தக்கவரோடு இணைந்தும் செயலாற்ற முனைய வேண்டுவதே ஆகும். போலி அரசியல்வாதிகளின் பின்னால், தரமற்ற எழுத்தாளர்களின் பின்னால், உதவாக்கரை சினிமாக்காரர்கள் பின்னால், இந்நாடு செல்ல ஆரம்பித்து இதுவரை குட்டிச்சுவரானது போதும்! போதும்!! தேச பக்தியை

யும் தெய்வ பக்தியையும் இரு கண்களாக மதித்துப் பூவுலகிலே பொன் உலகைச்சமைக்க வேண்டுமேயானால், விவேகானந்தர் விடுத்த செய்திகளை நடைமுறைப்படுத்தப்பட வேண்டு வதொன்றே வழி. ஆம், இந்தியாவிற்கு இதைத் தவிர வேறு வழியே கிடையாது.

வான்புகழ்கொண்ட தமிழகம் தமது பணிகளை முன்னின்று நடத்தவேண்டும் என்ற அவா உடையவர் விவேகானந்தர். எனவேதான் அவர் தமிழ்நாட்டிற்கு வரைந்த கடிதங்களில் தமது உணர்ச்சிகளைக் கொட்டி எழுதினர். அவற்றில் சில பகுதிகள் வருமாறு:—

'சென்னையைப் பற்றி எனக்கு எப்போதுமே மிகப்பெரிய நம்பிக்கை. இந்தியாவையே மூழ்கடிக்க இருக்கிற மிகப்பெரியதோர் ஆன்மிகப் பேரலை, சென்னையிலிருந்தே கிளம்பி வரப் போகிறது. இந்த நம்பிக்கை எனக்கு உறுதியாக இருந்து வருகிறது.

'சுயநலமற்ற, முழு ஆற்றலையும் கொண்டு பணி புரியவல்ல—உயிர்போகும் வரையிலும், பாடுபடத் தயாராக இருக்கும் எத்தனை பேரைச் சென்னை தந்துதவ ஆயத்தமாயிருக்கிறது?

'கல்கத்தாவிலே ஆயிரக்கணக்கானவர்கள் நமது இயக்கத்தை ஆதரிக்கிறார்கள். என்றாலும், நான் அவர்களிடம் வைப்பதை விடச் சென்னைவாசிகளான உங்களிடம் அதிக நம்பிக்கை வைத்திருக்கிறேன். எதையும் உங்களால் சாதிக்க முடியும் என்று நம்புவீர்களாக. இறைவன் நமது சார்பில் இருக்கிறான் என்பதை அறியுங்கள். எனவே, தைரியமுள்ள ஆண் மக்களே! முன்னேறிச் செல்வீர்களாக!

'எனது இளைஞர்களே! தீரமிக்க, உத்தம குணம் வாய்ந்த நல்லோர்களே! செயல் சக்கரத்தை உருட்ட வாருங்கள். சக்கரத்தை இயக்க உங்கள் தோள்களைக் கொடுத்து உதவுங்கள். பெயருக்காகவோ, புகழுக்காகவோ, அவை போன்ற பொருளற்ற வேறு எந்த அற்ப விஷயத்திற்காகவோ திரும்பிப் பார்க்க நில்லாதீர்கள்! சுயநலம் என்பதைத் தூர எறிந்துவிட்டு வேலை செய்யுங்கள். உங்கள் அனைவரின்மீதும் ஆண்டவனின் ஆசிகள் பொழியுமாக.

'நெருப்புச் சுவாலை போன்றிருக்கும் இளைஞர் குழு ஒன்றிற்குப் பயிற்சி தந்து, அதனை ஆயத்தப்படுத்துங்கள். உங்களிடம் இருக்கும் ஊக்கத் தீயை அவர்களிடம் செலுத்துங்கள்.

''சென்னைவாசிகளான உங்களுக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறேன். சென்னை மக்கள் என் தகுதிக்கெல்லாம் மீறிய வகையில், தங்கள் சக்திக்கெல்லாம் அதிகமான அளவில் எனக்கு உதவி புரிந்திருக்கிறார்கள்.

'சென்னை வாலிபர்களுக்கு என்றென்றும் எனது நன்றி. கடவுள் அவர்களை எப்போதும் காப்பாராக. நான் எப்போதும் சென்னை அன்பர்களுடைய நலனுக்காக ஆண்டவனை வேண்டுகிறேன். சென்னைவாழ் மக்கள் அனைவருக்கும் கடவுளின் ஆசி. எனது இளைஞர்களே! வேலையைச் செய்யத் தொடங்குங்கள். அதற்கான வேகத் தீ உங்களை வந்தடையும்! வாழ்நாள் குறுகிய அளவானது. பெருங்காரியம் ஒன்றின்பொருட்டு அதைத் தியாகம் செய்துவிடுவீர்களாக! பணி புரிவீர்களாக! பணிபுரிவீர்களாக!!

'தைரியம் மிக்க என் இளைஞர்களே! நீங்கள் அனைவரும் மகத்தான காரியங்களைச் சாதிப்பதற்காகப் பிறந்தவர்கள் என்று நம்புங்கள். தைரியம் மிக்க, சுயநலமற்ற எனது குழந்தைகளே! நீங்கள் அனைவரும் நல்ல முறையில் பணி ஆற்றியிருக்கிறீர்கள். நான் உங்களைப் பற்றி மிகுந்த பெருமை கொள்கிறேன். சென்னையிலுள்ள என் நண்பர்கள் அனைவருக்கும் நான் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறேன் என்பதைச் சொல்லி முடியாது. நமது நாடு வீரர்களை வேண்டி நிற்கிறது. வீரர்களாகத் திகழுங்கள்! எனது நம்பிக்கை எல்லாம் சென்னையிடமே இருக்கிறது. தங்கள் பணியைச் செய்து முடிப்பதற்காகத் தீயில் குதிக்க வேண்டியது அவசியமானல், அப்படியே செய்வதற்கும் என் குழந்தைகள் தயாராக இருக்க வேண்டும்.

'நீங்கள் உண்மையில் எனது குழந்தைகளானல், எதற்குமே அஞ்சமாட்டீர்கள்! சிங்கங்களாகத் திகழ்வீர்கள்! இந்தியாவையும் உலக முழுவதையும் நாம் விழித்தெழச் செய்யவேண்டும். கோழைத்தனம் கூடவே கூடாது.

'உயிரே போவதானாலும் நேர்மையுடன் இருப்பீர்களாக!

'நெருப்புப் பிழம்பு போன்ற இலட்சியப் பணியாளர்களின் கோஷ்டி ஒன்று இப்போது எனக்குத் தேவை.

'சென்னையிலிருந்துதான் புதிய ஒளி எழுந்து இந்தியாவெங்கும் பரவியாக வேண்டும். இந்த நோக்கத்தை மேற்கொண்டு நீங்கள் உழைத்து வர வேண்டும்.

'சென்னை எப்போது விழித்தெழும் என்றால், அதன் கல்வி பயின்ற இளைஞர்களின் உருவத்தில், அதன் இரத்தமே போன்றவர்களுள், குறைந்தது நூறுபேர் உலகத்திலிருந்து தனித்து நின்றவர்களாய்ச் சத்தியப் போரை நடத்துவதற்கு எப்போது தயாராக இருப்பார்களோ, அப்போதே சென்னை விழித்தெழும்.'

இவ்விதம் கடிதங்களில் தமது உணர்ச்சிப் பெருக்கை வெளியிட்ட விவேகானந்தர், தமிழக மண்ணில் புகழ்பெற்ற பல சொற்பொழிவுகளை நிகழ்த்தி வளரும் தலைமுறையினருக்கு அழைப்பு விடுத்தார். ''அறிவாற்றல் பொருந்திய தூய்மைமிக்க ஒரு நூறு இளைஞர்கள் முன் வாருங்கள். இந்த உலகையே மாற்றி அமைக்கலாம்'' என்று அறைகூவி அழைக்கிறார் அவர்.

அந்த நூறு இளைஞர்களுள், தம்மையும் ஒருவராக ஒப்படைத்துப் பாரதத்தின் நலனுக்காகக் களபலியாகத் தம்மை அர்ப்பணித்துக்கொள்ள தமிழக இளைஞர் குழாம் திரண்டெழுவதாகுக!

தமிழகமே! தவச்செல்வன் கேட்கிறான்!

நீ எத்தனை பேரைத் தந்துதவ ஆயத்தமாக இருக்கிறாய்?

வாழிய நலம்! வாழிய உலகெலாம்!



# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

ஜூலை 4

சுவாமி துரியானந்தர்: அவனுடைய (கடவுளுடைய) சங்கற்பத்தின்படியே எல்லாம் நிகழ்கின்றன என்பதை நாம் இன்றைக்கும் என்றைக்குமாக (உறுதியுடன்) அறிய வேண்டும். அநேக சாமர்த்தியசாலிகள் இவ்வுலகில் பிறந்தார்கள். ஆனால் அவர்களுடைய முடிவு என்ன? அவன் இச்சைப்படியே அனைத்தும் தோன்றுகின்றன, பிறகு அழிக்கப் படுகின்றன. நமது இந்த ஸ்தாபனம் — இது மட்டும் சாசுவதமாக இருக்கப் போகிறதா? இல்லை. ஒரு காலத்தில் இதுவும் தாழ்நிலை அடையும். பிறகு பகவான் மீண்டும் அவதரிக்கும்படி ஆகும்.



சுவாமி துரியானந்தர்

''பிராம்மணன் என்பவன் ஆன்மிகப் பிச்சைக்காரன். அவன் இரண்டு நாளுக்காகக்கூடச் சேர்த்து வைத்துக்கொள்ளக்கூடாது. அவன் இறைவனிலேயே எப்போதும் பூரணமாக அடக்கமாகியிருக்க வேண்டும்.

''மாதருடன் வாழ்பவர்களைப் பற்றிக் குரு மகராஜ் மட்டமாகவே நினைத்து வந்தார். அவர்களிடம் சாரம் எதுவும் இல்லை (வெறும் சக்கையாக இருக்கிறார்கள்) என்று அவர் சொல்வது வழக்கம்.

''நன்றாகப் பகுத்து ஆராயும் திறனற்றவர்கள் வெகு எளிதில் ஒருதலைப்பட்சமாகச் சாய்ந்து விடுகிறார்கள். (அறிவால்) விளக்குவது'

(மனதால்) உணர்வது இரண்டிலுமே சுவாமி ஜிக்கு (விவேகானந்தருக்கு) சமமான திறன் இருந்தது. மனிதர்களின் குறைபாடுகள் அவருக்குத் தெரியும்; ஆயினும் அவர்களை மன்னித்து வந்தார்.''

சீடர்: ''மனம் என்பது தன்னுல் உன்னிப்புடன் இருந்து தன்னையே விழிப்புறுத்திக் கொள்ள முடியாதா?''

**சுவாமி துரியானந்தர்:** ''அப்படிப்பட்ட நிலை தானுகவே எப்படி ஏற்பட முடியும்? நீ முதலில் அப்பியாசம் செய்ய வேண்டும். முதலில் நீ மனப்பூர்வமாக உன்னைத் திருத்திக் கொள்ள முயற்சி செய். அதன்பின் உன் மனமானது தனக்குத்தானே போதித்துக் கட்டுப்படுத்துவதைக் காண்பாய். அந்த நிலையை உடனடியாக அடைய மக்கள் விரும்புகிறுர்கள். உன்னில் உள்ள சுத்தமான பாகம் சாக்ஷாத் இறைவனே; அசுத்தமான பாகம்தான் நீ. 'நான்' என்னும் போதெல்லாம் நீ அந்த அசுத்த பாகத்தையே குறிப்பிடுகிறுய். நீ எவ்வளவுக்கெவ்வளவு அவனை ஸ்மரிக்கிறுயோ அவ்வளவுக்கவ்வளவு அவன் உன்னில் வளருவான்; கடைசியில் (அவனுன சுத்த பாகமே முற்றும் வளர்ந்து) அசுத்த பாகம் அடியோடு மறைந்து போகும்.

''சிலர் (திறந்த மனமின்றி) மிகவும் விலக்கமாக இருக்கிறுர்கள். அவர்கள் தங்களைச் சுற்றியே பெரிய சுவர் எழுப்பிக்கொண்டு, தங்களுக்கு உள்ளே எவரும் பார்வை செலுத்த அனுமதியாமல் இருக்கிறுர்கள். இது மிகவும் மோசமானதாகும். வெளிப்படையாகவும், மனப்பூர்வமாகவும் இருந்தாலன்றி ஒருவன் இறைவனை சாட்சாத்கரிக்க முடியாது.''

**ஜூலை 7**

**சுவாமி துரியானந்தர்:** ''எத்தனைக்கு நீ உன்னை அகம்பாவத்திலிருந்து விடுவித்துக் கொண்டு, பகவானின் கருவி மாத்திரமாக ஆகிறுயோ, அத்தனைக்கு நீ சாந்தியை உணர்வாய். பகவான்தான் கர்த்தா, நீ அல்ல என்பதை நீ உணர உணர, அந்த அளவுக்கு உன் இதயம் சாந்தியால் நிரப்பப்படும்.''

**ஜூலை 9**

**சுவாமி துரியானந்தர்:** ''ஆரம்பத்தில் நாங்கள்கூட நிர்வாணம்தான் அனுபூதியின் உச்சநிலை என்று எண்ணி வந்தோம். இதற்காக குருமகராஜ் எங்களை அடிக்கடிக் கண்டித்து வந்தார். அது ஒரு நீசமான கொள்கை என்று சொல்வது அவரது வழக்கம். நிர்வாணம் என்பது ஒரு நீசமான கொள்கை என்று அவர் சொல்வதைக் கேட்க எனக்கு வியப்பாக இருக்கும்.''*

**ஜூலை 18**

''வேதாந்த தத்துவம்'' என்ற தலைப்பில் சுவாமி விவேகானந்தர் ஆற்றிய உரை படிக்கப் பட்டது. சுவாமி துரியானந்தர் கூறினுர்:

''அவருடைய வார்த்தைகள் காற்றிலே கரைந்து லயமாகி உள்ளன. இத்தனை தியாகம் செய்திருந்தும், இத்தனை படித்திருந்தும் நீ என்ன செய்து கொண்டிருக்கிறுய்? நாட்கள் ஓடிக்கொண்டே இருக்கின்றன. ஆனுல் நீ வெறுமனே சோம்பலில் காலத்தைக் கழிக்கிறுய். ''ஹே அம்மா, மேலும் ஒரு நாள் போய்விட்டது, இன்னமும் உன்னைக் கண்டேனில்லையே!'' என்று ஒவ்வொரு தினம் முடியும் போதும் குருமகராஜ் கதறியதுபோல் எவர் உணருகிறோம், கதறுகிறோம்? கதகதப்பின்றி, ஜீவனின்றி, செயலின்றிக் கிடக்கிறுய். சுவாமிஜியின் வாக்குகளைப் படிக்கும் போது உன் ரத்தம் கொதித்தெழுவதாக நீ உணரவில்லையா? 'நடைபிணம் என்பது என்ன? முயற்சி இல்லாமலிருப்பவன் தான்'. உனக்கு இருபத்தியேழு வயதாகிறது! சுவாமிஜி தமது இருபத்தியொன்பதாம் வயதிலேயே தான் எல்லா ஆன்மிக முன்னேற்றங்களையும் சாதித்துவிட்டதாகச் சொன்னுர்.

''ஆனுல் உன்னைக் குற்றம் சொல்லிப் பயனில்லை. நீ பார்ப்பது என்னவோ அதைப் பொறுத்தே உன் காரியமும் அமைகிறது. நாங்களும்கூடத்தான் போதுமான அளவுக்கு கடுமையாக உழைப்பதில்லை. எங்களுக்கு வயதாகிவிட்டது, உடல் நலம் போதவில்லை என்கிறோம். ஆனுல் இதுவெல்லாம் பிதற்றலும், நொண்டிச்சாக்கும்தான். சுவாமிஜி அந்திமம் வரையில் கடுமையாக உழைத்ததை நாங்கள் பார்த்திருக்கிறோம். அவரது கடைசி நோயின் போது, அவர் சுவாசக் கஷ்டத்துக்குச் சற்று ஆசுவாஸமாக ஒரு தலையணையை மார்பில் அழுத்திக்கொண்டிருப்பார். ஆனுல் அந்நிலை

*இதன் விளக்கத்தை ஜூலை 20—ஆம் தேதியிட்ட உரையின் பிற்பகுதியில் காண்க.

யிலும், 'எழுக! விழிப்புறுக! என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' என்று கர்ஜித்தபடி இருப்பார். உடம்பு அழிய வேண்டுமெனில், உழைத்துக் கொண்டே அழியட்டும். உன்னில் தெய்விகத்தைத் தட்டி எழுப்பிக்கொள்வது, பிறரது தெய்வத்தன்மையையும் தட்டி எழுப்புவது—இதுவே லட்சியம்.

''இதன் உண்மையில் உனக்கு உறுதி உள்ளதாகில் சுறுசுறுப்புடன் இயங்கிச் செயலாற்றுக. **இப்போதே வெளியே போ.** மற்ற எல்லாவற்றையும் ஒதுக்கித் தள்ளு. **இப்போது இல்லையாயின் எப்போதும் இல்லை.** உத்தரகாசிக்குப் போ. கங்காதீரத்தில் வாசம் செய். 'அம்மா, எனக்கு நீ மட்டுமே வேண்டும், வேறெதையுமே நான் விரும்பவில்லை' என்று அம்பிகையிடம் கூறிக் கதறு. இப்படிப்பட்டதொரு வாழ்வு நடத்த இப்போதே மனதைத் தயாராக்கிக் கொள். பணியையும் மற்ற எல்லா விஷயங்களையும் பிற்பாடு பார்த்துக்கொள்ளலாம்.

**ஜூலை 20**

**சுவாமி துரியானந்தர் :** ''உன் மனதை நீயேதான் செயற்படுத்த வேண்டும். உனக்காக இந்த காரியத்தைப் பிறர் செய்ய முடியாது. 'நீ சிறிது முயற்சி செய்தேயாக வேண்டும். அப்போதுதான் குரு மெய்ப்பொருளை வெளிப்படுத்துவார்' என்று குருமகராஜ் திரும்பத் திரும்பக் கூறி வந்தார். எமது சொந்த அனுபவத்திலிருந்து உனக்குச் சொல்கிறேன்: இறைவனை நோக்கி எவனேனும் ஒரே ஓர் அடி வைத்து முன்னே சென்றாலும், அவன் பத்து அடிகள் வைத்து இவனை நோக்கி வருகிறான். இது எங்கள் பிரத்தியட்ச அனுபவம். நீ முயற்சியே செய்யாவிடில், உனக்காக எவரும் எதுவும் செய்ய இயலாது.

''மகான்கள் வழியைக் காட்டுகிறார்கள். அது அற்ப சொற்பமான உதவியா என்ன? உன் சிரமங்களைச் சொன்னாயானால் நாங்கள் உனக்கு உதவி புரிய முடியும். நாங்களும் இதே பாதையில் யாத்திரை செய்தவர்தாம். எனவே அதைப் பற்றி உனக்கு நாங்கள் சொல்ல முடியும். வெண்ணெயை (இன்னொருவர்) கடைந்தெடுத்துத் தன் உதட்டின் முன் பிடிக்க வேண்டும் என்று ஒருவன் ஆசைப்படுகிறானா? ஆனால் (இப்படி அவன் உதட்டருகே வெண்ணெயைக் கொண்டு வைத்தாலும்) வாயை மூடிக் கொண்டே இருக்கிறானே! நாங்களே அவனுக்கு அதை ஊட்டவும் வேண்டுமா என்ன? இது மூளைக்கோளாறுதான், முழுச் சோம்பேறித்தனம்தான் — அதாவது மனமானது ஒரு முயற்சியும் செய்ய மறுக்கிற நிலைதான்.''

'தனது பக்தர்களுக்காக பகவானே ஏதும் செய்யமாட்டானா?' என்கிறாயா? ஆம், அவன் செய்வான். ஆனால் முதலில் நீ பக்தனாக வேண்டும்; அவனிடம் அன்புணர்ச்சியுடன் பழக நீ கற்றுக்கொள்ள வேண்டும். பக்தி என்பது ஏதோ அற்பமான விஷயமல்ல. உன் மனம், ஜீவனம், சகலத்தையும் நீ அவனுக்கு அர்ப்பணிக்க வேண்டும். இதைச் செய்ய முடியாவிடில், அவனிடம் அன்பாக இருந்து அவனை அடைய முடியவில்லையே என்று அவனிடமே அழு. பணம் சம்பாதிப்பதானால் மக்கள் அதற்காகக் குடம் குடமாக அழ வேண்டியிருக்கிறது. இதையே நீ பகவானுக்காகச் செய்ய மாட்டாயாகில், பகவான் மட்டும் ஏன் உனக்காக எதுவும் செய்யவேண்டும்? அவனுக்கு இது சற்றும் லட்சியமில்லை. பகவான் நமக்குக் கிடைக்கவில்லையே என்ற துக்க உணர்வு உனக்கு உண்டாகிவிட்டால், அவன் உனக்கு வெகு அருகிலேயே இருக்கிறான் என்று அறிவாய். விரைவிலேயே உனக்கு அவனது தரிசனம் கிடைக்கும்; சீக்கிரமே எல்லையில்லாத ஆனந்தத்தை அடைவாய்.

''உன் மனதை வெகு ஜாக்கிரதையாக அலசிப் பார்த்துக்கொண்டேயிருக்க வேண்டும். என்னிடம் குருமகராஜ், என் காமத்தை முடிவேயின்றி வளர்த்துக்கொள்ளுமாறு கூறினார். அதைக் கேட்க எனக்கு ஆச்சரியமாயிருந்தது. அவர் இப்படி விளக்கினார் : 'காமம் என்பது என்ன? ஒன்றை அடைய வேண்டும் என்ற விருப்பமே காமம். அவ்வாறெனில், இறைவனை அடைய வேண்டும் என்ற விருப்பத்தை உண்டாக்கிக்கொண்டு அதைப் பெரிதாக வளர்த்து பலப்படுத்தி வா....'

''ஒவ்வொருவனும் தன்னுடைய நல்ல அம்சத்தை வெளிப்படுத்திக்கொள்ளவும், குறைபாடுகளை மூடி மறைத்துக்கொள்ளவும் விரும்புகிறான். எவனால் தன்னுடைய தவறுகளை வெளிப்படச் சொல்ல முடிகிறதோ, அவன் அந்த தவறுகளிலிருந்து விடுபடுவான். தன்

பலவீனங்களை வெளியிடுவது எளிதல்ல. அப்படிச் செய்ய ஒருவனால் முடிகிறதெனில் அவனிடம் சரக்கு உள்ளது என்று புரிந்துகொள்.

''நீ அனைவரையும் உன் சொந்த மனிதராக்கிக்கொள்ள வேண்டும். பகவானை நீ நெருங்க நெருங்க, நீ மேன்மேலும் திறந்த மனத்தவனாக, அக ஈடுபாடுள்ளவனாக, பெருந்தன்மை உள்ளவனாக ஆவாய். நம் குருமகராஜ் நிஷ்கபடத்தன்மைக்கும், அந்தரங்க ஈடுபாட்டுக்கும் வார்ப்பு வடிவமாகவே இருந்தார்.

''சகுணப் பிரம்மத்தைப் பிரத்தியட்சத்தில் உணர்ந்த ஒருவன், அவன் விரும்பினானாகில், நிர்குணப் பிரம்மத்தையும் சாட்சாத்கரிக்க முடியும். ஆயினும் அநேகமாக அவன் (சகுண மான) இறைவனின் அன்பையும் இன்பையும் சுவைக்கும் பொருட்டுத் தனது 'நான்' என்பதை வைத்துக்கொள்ளவே செய்கிறான். (நிர்குண ஞான உபாசனைப்போல்) இவனது இதயக் கிரந்திகளும் (முடிச்சுகளும்) கூட அறுபட்டுவிட்டவைதாம். (அதாவது அவனது பூர்வகர்மாவும், வாஸனைகளும் அடிபட்டுப் போயிருக்கும்). (ஞானி போலவே) இவனும் தனது ஸர்வ—ஸ்வரூபத்தை உணர்ந்தவனே. (ஆயினும்) இவன் (உலகமே சூனியமாகிவிட்ட) நிர்வாண நிலையை நாடவில்லை. இவனுக்கு உலகத்திடமிருந்து எவ்வித அச்சமும் இல்லை. நிர்வாணத்தை விரும்புகிறவன் எப்போதும் உலகிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்வதில் கவலையுடன் லட்சியத்தை நோக்கி மிகவும் சிரமப்பட்டு தன் பாதையை அமைத்துக் கொள்கிறான். ஆனால் எதைப்பற்றியும் அஞ்சாதிருப்பது இதனிலும் சிலாக்கியமல்லவா?

''பகவானின் பக்தனுக்குக் கோபம், சந்தோஷம் இரண்டும் ஏற்படலாம். அகம்பாவம் பிடித்தவர்களைக் காணவும் தமக்குச் சகிக்கவில்லை என்று குருமகராஜ் கூறுவது வழக்கம். நிர்வாணத்தை நாடாமல் இறைவனிடம் செல்கிறவர்கள் ஈச்வர கோடியர் ஆவர்.''

அன்று சுவாமி துரியானந்தர், பக்தர் ஒருவருக்கு எழுதிய கடிதத்திடையே இவ்வாறு மொழிந்தார்: ''நாம் இறைவனை அனுபவித்தறியவில்லையே என்பதால் நீ தவித்துத் துக்கிப்பாயாகில், இந்த மனோபாவம் எவ்வளவுக்கு வளருகிறதோ அவ்வளவுக்கு நீ அவன் அருளைப் பெறுவாய். இதை மேலும் அடர்த்தியாக்கிகொள். ஆனால் உன் துயரம் வேறு காரணங்களால் ஏற்பட்டதெனில், அதைக் கவனமாக உதறித்தள்.''



உலகிலுள்ள செல்வத்தை எல்லாம் தன்னுடையதாக்கிக்கொண்டு பிறருடன் போட்டி போடாதே. அது உன்னை அல்லாவிடமிருந்து ஒதுக்கித் தள்ளிவிடும்.

பணத்தைச் சேர்த்துக் குவித்து அதை எப்போதும் எண்ணிக் கொண்டிருப்பவனை எவ்வளவு கண்டித்தாலும் தகும்.

அவன் தன் பொருளே தன்னைக் கடைத்தேற்றிவிடும் என்று எண்ணிக்கொண்டிருக்கிறான். ஆனால் அவன் கடுமையான தண்டனை பெறப்போவது உறுதி.

—இஸ்லாம்

தேவர்களும், மனிதர்களும், மிருகங்களும், பறவைகளும், பூச்சிப் புழுக்களும், மரங்களும் ஆகிய இவை எல்லாம் அளவு கடந்த விஷ்ணுவின் வடிவமே; வெவ்வேறானவை போலத் தோன்றுகின்றன. அசைவதும் அசையாததுமாகிய இவ்வுலகனைத்தும் விசுவரூபம் கொண்ட விஷ்ணுவின் வடிவமேயாதலால் அறிவாளியால் இது ஆத்மாவாகவே காணப்பட வேண்டும். இவ்விதம் அறியப்பட்டால் ஆதியற்றவனும் பகவானும் பரமேசுவரனுமாகிய அச்சுதன் அருள் புரிவான்.

—விஷ்ணு புராணம் 1. 19. 47-49

பழங்கள் நிறைந்த மரம் எப்போதும் கனத்தினால் தாழ்ந்து தொங்கும். நீ மேன்மையடைய விரும்பினால் பெரியோரிடம் பணிவாய் இரு.

—பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்

# திருப்புகழில் ஒரு பாடல்

திருமுருக கிருபானந்தவாரியார்

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம்வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்மயக்க முறுவேனோ
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி
வேளை செப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே
கடகபுய மீதிரத்ந் மணியணிபொன்
மாலைசெச்சை
கமழுமண மார்கடப்ப மணிவோனே
தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணுநெய்த்த வடிவேலா.

—ஸ்ரீ அருணகிரி சுவாமிகள்

**பொழிப்புரை:** கைலாய மலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் பெற்றருளிய குமாரக் கடவுளே! வஜ்ர கடகங்களை யணிந்துள்ள புயங்களின்மீது, இரத்தினங்களிழைத்த திருவாபரணங்களையும் பொன் மாலைகளையும், வெட்சி மலர் மாலையையும் தரித்துக்கொண்டிருப்பவரே! நெய் பூசப்பெற்றதும் கூர்மையுடையதுமாகிய வேற்படையையுடையவரே! சிவந்த இதழ்களையுடைய தாமரை மலர் போன்ற தேவரீருடைய திருவடிகளை நாள் தோறும் நாவாரத் துதிக்க அருமையான செந்தமிழ் புலமையைத் தந்தருளிய மயில் வாகனத்தையுடையவரே!

பற்பல அதிசயங்களையுடைய பழநி மலைமேல் அருட்கோலங்கொண்டு விளங்கும் கட்டழகுடையவரே! திருவேரகம் என்னும் சுவாமி மலையில் எழுந்தருளியுள்ள முருகக் கடவுளே! தாமரைக்கு நிகரானதும், ஆன்மாக்கள் ஒடுங்குமிடமுமாகிய தேவரீருடைய திருவடியை, அரை நிமிஷ நேரமாகிலும் ஒருமுகப்பட்டுப் புலன்களை அடக்கி தவமுறைப்படி தியானம் செய்யும் தன்மையுணராதவனும், அறிவில்லாதவனும், குற்றமுடையவனும், மூடனும் மட்டியும் பிறவிக்குக் காரணமாகிய தீவினையால் பிறந்துழலுபவனுமாகிய அடியேன் அருட்செல்வமற்ற வறுமையால் மயக்கத்தையடைந்து துன்புறுவது முறையோ?

கருணைக் கடலாகிய தேவரீர் அடியேன்மீது கருணை செய்யாமலிருப்பதற்குக் காரணம்—என் மீதுள்ள குற்றம் யாது? இந்த வேளையில் திருவாய் மலர்ந்தருளுவீர், ஐயா! திருவருள் புரிவதற்கு இது நல்ல தருணம்; மிகுந்த பெருமையுடைய, இறுதியற்ற பேரின்பத்தையும், எல்லா வகையான செல்வங்களுடன்கூடிய பெருவாழ்வையும், தகுதியையும், பகுத்தறிவையும், பிறவாப் பெற்றியாகிய மோட்ச நலத்தையும் தேவரீர் தந்தருளி உதவி புரிந்தருள்வீர்.

## விரிவுரை

**சரண கமலாலயம்:—**

ஆலயம் – தங்குமிடம்; உயிர்கள் பிறவித் துன்பத்தாலுண்டாகிய இளைப்பு நீங்க அடையும் இடம், முருகவேளுடைய திருவடியேயாம். ''காவிக் கமலக் கழலுடன் சேர்த்தென்னைக் காத்தருள்வாய்'' ''எனக்கிடம் உனது பதச் சரண்'' ''திருவடியிலணுக வரம்அருள்வாயே'' என்ற சுவாமிகள் திருவாக்குகளை உய்த்துணர்க. ''இறைவன் திருவடி நீழலெய்தினர்'' என்று உலகங்கூறும் உபசார வழக்கும் இது பற்றியேயாம். அத்தகைய திருவடியை அரைக்கணமேனும் நினைத்து தவமுறைப்படி தியானம் செய்ய வேண்டும்.

**தவமுறை தியானம்:—**

தவமுறையாவது, உற்ற நோய் நோற்று உயிர்க்கு உறுகண் செய்யாது, பொறி புலனடக்கி, மனதை ஒருமுகப்படுத்தி, சித்திர தீபம் போல் அசைவற்று நின்று, உயிராவணமிருந்து, உள்ளக் கிழியில் அவன் உருவெழுதி உற்று நோக்கி இருக்கும் நிலையாம்.

**மிடியால் மயக்க முறுவேனோ:—**

மிடி–வறுமை. இங்கே அருட்செல்வமின்மையைக் குறிக்கிறது. அருட்செல்வமுடையாரே செல்வராம். ஏனைய பொருட்செல்வ முதலியன இருக்கினும் வறுமையாளரேயாம்.

''அருட் செல்வஞ் செல்வத்துட் செல்வம்
பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள''

—திருக்குறள்

''திருவருளின்மையால் உண்மைநெறி யீதென்றுணராது மயக்கமுறுகின்றேன்'' என்றார்.

**கருணை புரியா திருப்பதெனகுறை:—**

முருகவேள் கருணை வடிவினர்; கருணாகரர்; கருணைக்கடல்; கருணை மேகம்; அவருடைய ஆறு திருமுகங்களிலும் குற்றால நீர்வீழ்ச்சியினும் பல்லாயிர மடங்கு மிகுதியாகக் கருணை பொழிந்துகொண்டிருக்கிறது.

''கருணைபொழி கமலமுக மாறும்''
—(ஒருவரையும்) திருப்புகழ்

''உனதுமுக கருணைமல ரோராறும்''
–(உறவின்முறை) திருப்புகழ்

''மறுவறு கடலென மருவுப னிருவிழி
வழிந்த அருளே பொழிந்ததொருபால்''
—திருவகுப்பு

''கருணை மேகமே தூய கருணை வாரியே ஈறில்
கருணை மேருவே தேவர் பெருமாளே''
–(அமலவாயு) திருப்புகழ்

''முகம்பொழி கருணை போற்றி'' என்ற அருமைத் திருவாக்குகளை யுன்னுக. ''இத்தகைய கருணைக் கடவுளாக இருந்தும் கருணை புரியாமல் இருப்பதற்கு யான் செய்த குற்றம் யாது? தன் குற்றம் தனக்குத் தெரியாதாதலினால் தேவரீரே இந்த வேளையில் 'நீ இன்ன குற்றத்தையுடையவன்' என்று சொல்லியருளினால், ஆண்டவனே! அக்குற்றத்தினின்றும் விடுபட்டு அடியேன் உய்வேன்''என்று சுவாமிகள் வேண்டுகின்ற திறம் எத்துணை அருமைப்பாட்டினையுடையதாக இருக்கின்றது என்பதை நினைக்க நினைக்க நெஞ்சம் நெகிழ்கின்றது. உள்ளுந்தோறும் உள்ளம் உருகுகின்றது.

**கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே:—**

கயிலாயபதியாகிய கண்ணுதற்கடவுள் குற்றமே செயினுங் குணங்களாகக் கொள்ளுமியல்பினர். குருத் துரோகியாகிய சந்திரனையும், கயிலாய மலையைத் தூக்கிய இராவணனையும், வில்வக் கிளையுதிர்த்த வெய்ய முசுக்கலையையும் ஆட்கொண்ட அருட்கடல்; கொல்ல வந்த பாம்பை அணிகலனாகக் கொண்டவர்; பன்றிக் குட்டிகட்கும் பால்கொடுத்த பரம கருணை வள்ளல்.

மற்றுநான் பெற்றதார் பெறவல்லார்
வள்ளலே கள்ளமேபேசிக்
குற்றமே செயினுங் குணமெனக்கொள்ளுங்
கொள்கையால் மிகை பலசெய்தேன்
செற்று மீதோடுந் திரிபுர மெரித்த
திருமுல்லைவாயிலாய்அடியேன்
பற்றிலேன் உற்ற படுதுயர் களையாய்
பாசுபதா பரஞ்சுடரே.
—சுந்தரர்

வெறுப்பனவே செய்யுமென் சிறுமையைநின்
பெருமையினால்
பொறுப்பவனே அராப் பூண்பவனே
பொங்கு கங்கை சடைச்
செறுப்பவனே நின்றிருவரு ளாலென்
பிறவியைவேர்
அறுப்பவனே யுடையா யடியேனுன்
அடைக்கலமே.
—மாணிக்கவாசகர்

இத்தகைய குற்றத்தைக் குணமாகக்கொள்ளும் குன்ற வில்லியாரீன்ற புதல்வராதலால் தேவரீரும் என் குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும் என்பது குறிப்பு.

**கடகபுயமீதில்......அணிவோனே:—**

பொன்மலையைக் கையிலேந்தி வெள்ளிமலையில் வாழும் விடையவன் புதல்வராதலால் உம்முடைய பெருமிதத்திற்குத் தக்கவாறு நவரத்னாபரணங்களும் பொற்கலன்களும் மலர் மாலைகளும் அணிந்து கொண்டிருக்கிறீர். அடியேன் மிடியால் துன்புறுகின்றேன். ஆதலால், அடியேனை யாள்வது உமக்கே கடன்'' என்று விளக்குகின்றனர்.

**தருண மிதையா:—**

தருணம் இது ஐயா என்று பிரித்துக்கொள்க. ''திருவருள் பெறுவதற்கு இது நல்ல தருணம்'' என்கின்றார். மனிதப் பிறப்பாதலினாலும் இறைவனை நினைக்கும் பேறுடைமையினாலும் நல்ல தருணமாகிறது.

**சகல செல்வ யோக மிக்க பெருவாழ்வு:—**

மக்கட் செல்வம், மனைச்செல்வம்,பொருட் செல்வம், அருட்செல்வம், சொற் செல்வம், செவிச் செல்வம், கல்விச் செல்வம் முதலியன. இவைகள் இம்மைப் பயன்கள்.

**தகைமை சிவஞான முத்தி பரகதி:—**

இவைகள் மறுமைப் பயன்கள்.

**அதிசய மநேகமுற்ற பழநிமலை:—**

பழநிமலையில் பற்பல அதிசயங்கள் காணப் படுகின்றன; அங்கே ஆண்டவனுக்கு வள்ளி தேவசேனை யில்லை; ஆயினும் பள்ளியறையுண்டு. கண்ணிலார்க்குக் கண் தருவதும், பிணியுற்றோர் பிணி தீர்வதும் அங்கே கண்கூடு. பழ நிமலை எனப் பிரித்து, பழையவளாகிய அம்பிகை யிடம் தோன்றி விளங்கும் அழகன் எனவும் பொருள்கொள்ளலாம்.

**அரிய தமிழ் தானளித்த மயில்வீரா:—**

உலகில் பேசப்படும் மொழிகளுக்குள் தலை சிறந்தது தமிழ்மொழியேயாம். இறைவனருளை எளிதில் பெறுவதற்கு ஏற்ற மொழியும் தீந் தமிழேயாம். இறைவன் சங்கப் புலவரில் தானும் ஒருவனாயிருந்து தமிழ் ஆராய்ந்தமை யாலும், பெற்றான் சாம்பான்பொருட்டு உமா பதி சிவத்தினிடம் சீட்டு எழுதியனுப்பியது தமிழிலே யாதலானும், சுந்தரருக்கும் சேக்கிழா ருக்கும் அருணகிரியாருக்கும் அடியெடுத்துக் கொடுத்தது தமிழிலேயே என்பதனாலும், இதன் பெருமை நன்கு விளங்குகின்றது. முதலைவாய்ப் பட்ட மகனுக்கு உயிர் கொடுத்தது தமிழ்; கற்புணையை நற்புணையாக்கியது தமிழ்;எலும் பைப் பெண்ணாக்கியது தமிழ்; இறைவனை இர வில் இருமுறை நடந்து தூது போகச் செய்தது தமிழ்; குதிரைச் சேவகனாக வரச் செய்தது தமிழ்; கற்றூணில் காட்சி தரச் செய்தது தமிழ்; பற்பல அற்புதங்களைச்செய்யவைத்தது தமிழ்; இயற்கையான மொழி தமிழ்; பேசுந் தொறும் பேரின்பத்தை வழங்குவது தமிழ். ஆதலால் நம் அருணகிரியார் ''அரிய தமிழ்'' என்று வியக்கின்றார். மயில்வீரா என்றதனால் தமிழுக்கும் மயிலுக்கும் சம்பந்தம் உண்டு. தமிழ் ஓங்கார வடிவத்தைக் காட்டியாடுவது மயில். ஏனைய மொழிகளின் ஓங்காரத்தை அது காட்டுவதில்லை. ஆதலால் மயில் வீரா என்று விளித்தனர்.

**கருத்துரை:—**

சிவகுமாரரே! இரத்தினாபரணரே! வேல வரே! தமிழளித்த மயில் வீரரே! பழநியிலும் ஏரகத்திலும் விளங்குபவரே! நின் திருவடித் தியானமின்றி மிடியால் மயங்கி அடியேன் அழியாவண்ணம் இகபர சௌபாக்கியத்தைத் தந்தருள்வீர்.

**குறிப்பு:** இத்திருப்புகழ் அன்பர்கள் நாள் தோறும் அவசியம் பாராயணம் செய்ய வேண் டிய அருமைப்பாடல். ஊனும் உடலும் உள்ள மும் உயிரும் உணர்வும் உருகஓதி கந்தவேள ருளைப் பெறுவதற்கு இத்திருப்புகழ் மிகச்சிறந்த தாகும்.



ஆனந்தம் பொங்கி அறிவோடிருப்போர்க்கு ஞானந்தான் ஏதுக்கடி?

—குதம்பைச் சித்தர்

உண்மையிலும் உத்தமமான காரியங்களிலும் மேன்மை பெறுவதற்கு எப்போதும் நீங்கள் பாடுபடுங்கள்.

—முகமது நபி(சல்)

மனித பரம்பரையின் மாபெரும் செல்வமாகிய கருணையை இழந்துவிட்டால், நம் கண் பார்வை இழந்து குருடாகி விடுவோம். உலகம் இருளில் மறைந்துவிடும்.

—புத்தர்

எவனுடைய சிரவணமும் கீர்த்தனமும் புண்ணியமானதோ, எவன் சாதுக்களுக்கு நண் பனோ, அந்தக் கிருஷ்ணன் தனது கதையைக் கேட்பவர்களின் இதயத்தில் இருந்துகொண்டு கெட்ட வாசனைகளைப் போக்கிவிடுகிறான்.

—பாகவதம் 1, 2, 17.

வாள் தன்னை ஆக்கச் சொல்லவில்லை. தன்னை உபயோகிப்பவனைத் தடுக்கவில்லை. தான் உடைந்துபோனாலும் ஒதுக்கி வைக்கப்பட்டாலும் வருந்தவில்லை. ஆக்கப்படுவதிலும் ஆனந்தம் உண்டு. உபயோகிக்கப்படுவதிலும் ஆனந்தம் உண்டு. ஒதுக்கிவைக்கப் படுவதிலும் ஆனந்தம் உண்டு. அந்த ஸமமான ஆனந்தத்தைக் கண்டுகொள்வாய்.

—ஸ்ரீ அரவிந்தர்

# ஆன்மிக வாழ்க்கை

**சுவாமி இராமகிருஷ்ணனந்தர்**

**சுவாமி இராமகிருஷ்ணனந்தரின் கடிதங்களிலிருந்து, தொகுக்கப்பட்ட சில உபதேசங்கள் இந்தப் பகுதியில் இடம் பெறுகின்றன.**

இந்த உலகச் சிக்கல்களிலிருந்து எப்படி விடுபடுவது என்பதைப் பற்றி என்னிடம் அறிவுரை கேட்கிறீர்கள். பல கோடிப் பிறவிகளால் ஏற்பட்ட ஒன்றை ஒரேநாளில் ஒழித்துவிட முடியாது என்பதே இதற்கு பதில். இதை உங்களுக்கு நினைவு படுத்துகிறேன்.

ஆம். நீங்கள் கூறுவது சரிதான். இந்த நிமிடமே இந்த சம்சார வலையிலிருந்து தப்பிவிட வேண்டும். ஏனென்ருல், நாம் கொஞ்சிக்குலாவிக்கொண்டிருக்கும் நமது குடும்பத்திலிருந்து எப்போது மரணதேவன் நம்மைக் கொண்டு போய் விடுவானே? அது யாருக்குத் தெரியும்? என்ருலும் அதன் காரணமாக, நமது வாழ்க்கைத்துறையில் திடீரென்று நாம் ஒருமுடிவுக்கு வந்துவிட வேண்டும் என்பது அதன் பொருளல்ல. வெற்றியடைவதற்குச் சிறந்த வழி என்னவென்ருல், உங்களைப் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் எந்த நிலையில் வைத்திருக்க விரும்புகிருரோ, அந்த நிலையிலேயே மகிழ்ச்சியுடன் இருந்து, ஒரு சிறுவன் உதவிக்கு எப்போதும் தனது பெற்ருேர்களை எப்படி எதிர்பார்த்துக் காத்திருக்கிருனே, அதைப் போலவே உள்ளத்தைக் கடவுளிடம் திருப்பியிருப்பதே ஆகும்.

பகவான் உங்களை எந்த இடத்தில் வைக்கிருரோ, அங்கேயே மகிழ்ச்சியுடன் தங்கியிருங்கள். பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்களைப் படித்து அவைகளைக் குறித்து ஆழ்ந்து சிந்தனை செய்யுங்கள். ''ஒரு செடியை ஆரம்ப காலத்தில் ஆடுகள் தின்றுவிடாமல் இருப்பதற்காக, அதைச் சுற்றிலும் வேலியிட்டுக் கவனமாகப் பாதுகாக்க வேண்டியது அவசியம். ஆனல் அதே செடி வளர்ந்து பெரிய மரமாகி விடும்போது, அதன் விரிந்த கிளைகளின்கீழ் நூற்றுக்கணக்கான ஆடுகள் (மழையிலும் காற்றிலும் அடிபடாமல்) ஒதுங்கிக் கொள்ளலாம்'' என்று சொல்கிருர்.

ஆகவே, அதிர்ஷ்டவசமாக ஒருவனின் உள்ளத்தில் சிறிதளவு சிரத்தையும் தியாக மனப்பான்மையும் உதித்தால், அத்தகையவன், இலெளகிக மக்கள் அனைவரிடமிருந்தும் விலகியிருந்து, அப்படிப்பட்ட தெய்விக இயல்புகளை மிகமிகக் கவனமோடு பாதுகாத்து வளர்க்க வேண்டும். ஆனல், ஒருமுறை அவை உள்ளத்தில் ஊன்றிப் பதிந்துவிட்டால், பிறகு ஒருவரும் அவைகளை அசைக்க முடியாது.

ஒரு மனிதனுக்கும் விலங்குக்கும் உள்ள முக்கியமான வேறுபாடு இதுதான். உண்ண உணவும் இருப்பதற்கு இடமும் கிடைத்து வரும் வரையில், விலங்கு இயல்புடையவன் தன்னுடைய நிலைமையை மாற்றிக்கொள்ள விரும்புவதில்லை.

ஆனல் ஒரு மனிதன், அதாவது ஓர் உண்மையான மனிதன், எப்போதும் உயர்ந்தவைகளையே பெற முயற்சி செய்தபடி இருக்கிருன். உயர்ந்த இலட்சியங்களையே சதாசர்வ காலமும் தொடர்ந்து நினைப்பதுதான் ஒரு உண்மை மனிதனுடைய இயல்பாகும்.

நல்லவர்களாகவும் உயர்ந்தவர்களாகவும் இருக்க விரும்புபவர்கள் அனைவரும், பின்வரும் அமுத வாக்கியத்தைப் பின்பற்றி நடப்பதைத் தலையாய நோக்கமாகக் கொண்டு வாழவேண்டும். 'எல்லா தர்மங்களையும் பற்றற விட்டொழித்து என் ஒருவனையே சரண்புகுவாய். நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிப்பேன் வருந்தாதே.'—கீதை 18.66

நம்மில் ஒவ்வொருவரும் ஆண்டவனை நெருங்குவதற்காகவே கடுமையாக முயற்சி செய்கிருேம். ஆனல் நம் ஒவ்வொருவருடைய வழியும் வெவ்வேறுனதாக இருக்கிறது. ஒவ்வொருவரும் தமக்குரிய வழியைத் தாமே வகுத்துக் கொண்டு, பகவானல் தங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள சூழ்நிலைகளை உதவியாகப் பயன்படுத்தி வாழ்க்கைப் பிரயாணத்தை மேற்கொள்ள வேண்டும்.



# அமுத ஒளியின் அதிசயம்!

நா. மகாலிங்கம்

தலைவர், இராமலிங்கர் பணி மன்றம்.

நூறு ஆண்டுகளுக்குமுன் ஒருநாள், சிதம்பரத்திற்கு வடக்கே வடலூர் என்னும் ஒரு கிராமம். அந்தக் கிராமத்தில் ஒரு அதிசயம் நடந்தது.

தொண்ணூற்று ஆறு வயது நிரம்பிய ஒரு கிழவி. அவளுடைய தலை கழுத்தில் நிற்காமல் கிடுகிடு என்று நடுங்குகிறது. அந்த நடுக்கத்துடனேயே தள்ளாடித் தள்ளாடி வருகிறாள்.

திருஅருட்பிரகாச வள்ளலார் என்று புகழ் பெற்ற வடலூர் இராமலிங்க அடிகள் வடலூரில் தருமச்சாலையில் இருக்கிறார். அவரைத் தேடித்தான் அந்த தொண்ணூற்று ஆறு வயது நிரம்பிய கிழவி வருகிறாள்.

வள்ளலார் முன் வந்து நின்று 'என் தலை கிடுகிடு என்று ஆடுகிறது. என்னால் நன்றாக நடக்க முடியவில்லை. இதைக் கொஞ்சம் நிற்கும்படி செய்ய வேண்டும்' என்று வேண்டுகிறாள்.

வள்ளலார் கிழவியைப் பார்த்து முறுவலிக்கிறார். ஆடுகின்ற அவள் தலையைத் தம் திருக்கரத்தால் பிடித்து நிறுத்துகிறார். வலது கரத்தால் அந்தத் தொண்டு கிழவியின் முதுகையும், கழுத்தையும் மெதுவாகத் தடவிக் கொடுக்கிறார்.

என்ன ஆச்சரியம்! வள்ளலாரின் திருக்கரத்திலிருந்து பாய்ந்த அமுதஒளியின் ஆற்றலால் ஆடிக்கொண்டிருந்த அந்தக் கிழவியின் தலை நின்று விடுகிறது. கூனி இருந்த அவள் முதுகும் நிமிர்ந்து விடுகிறது. வியக்கத்தக்க விதத்தில் அந்தக்கிழவி இளமைத்துடிப்புடன் நடந்து செல்கிறாள்.

வடலூர்க்கு மேற்கே செவலை என்று ஒரு கிராமம் இருக்கிறது. அந்தக் கிராமத்தில் ஒரு செட்டியார் குன்ம நோயால் அவதிப்படுகிறார். ஒரு ஆண்டா, இரண்டு ஆண்டா? பன்னிரண்டு ஆண்டுகளாகக் கஷ்டப்படுகிறார். இந்த நோயின் கொடுமை தாங்காமல் ஒருநாள் தற்கொலை செய்துகொள்ளக் கூட நினைக்கிறார் செட்டியார்.

செட்டியாருடைய நண்பர் அவருக்கு ஆறுதல் சொல்கிறார். வடலூரில் இருக்கும் வள்ளலாரின் பெருமையைப் பற்றி அவரிடம் கூறுகிறார்.

'ஒருதரம் வடலூர் சென்று வள்ளலாரைப் பார்த்து விட்டு வாருங்கள். உங்கள் நோய் இருக்குமிடம் தெரியாமல் போய் விடும்' என்று சொல்கிறார்.

செட்டியாருக்கு அதில் அவ்வளவாக நம்பிக்கை இல்லை. இருந்தாலும் நோயின் கொடுமை தாங்காமல் வள்ளலாரை நாடி வடலூருக்குப் போகிறார்.

வடலூர் தருமச்சாலையில் வள்ளலார் ஏழைகளுக்கு அன்னம் பாலித்துக் கொண்டிருக்கிறார். அன்னம் பாலிக்கும் வள்ளலாரைப் பார்த்தவுடன் செட்டியாருக்குத் தெய்வத்தையே தரிசித்ததுபோல் ஒரு நம்பிக்கை ஏற்பட்டு விடுகிறது. அன்னம் பாலித்து முடித்தவுடன் தமது ஆசனத்தில் வந்து அமர்கிறார் வள்ளலார். அவர் மலர்ப் பாதங்களில் வணங்கித் தம் நோயைப் பற்றிச் சொல்கிறார் செட்டியார்.

வள்ளலார் புன்முறுவல் பூத்த முகத்துடன் செட்டியாரைப் பார்த்து 'இறைவனை வேண்டிக்கொள்ளுங்கள்; நோய் நீங்கி விடும்' என்றார்.

'எனக்கு இறைவன் தேவரீர்தானே!' என்று சொல்லி, செட்டியார் வள்ளலார் பாதங்களில் மீண்டும் நெடுஞ்சாண்கிடையாக வீழ்ந்து வணங்குகிறார்.

வள்ளலார் செட்டியாரைப் பக்கத்தில் உள்ள அறைக்கு அழைத்துச்சென்று படுக்க வைக்கிறார். தம் திருக்கரத்தால் அவர் உடலில் நோயுள்ள இடத்தை மெதுவாகத் தடவி விடுகிறார்.

வள்ளலாரின் திருக்கரத்திலிருந்து செட்டியார் உடலில் அமுதஒளி பாய்கிறது. சூரியனைக் கண்ட பனிபோல் பன்னிரண்டு ஆண்டுகளாகச் செட்டியாரைப் பாடாய்ப் படுத்தி

வந்த குன்மநோய் ஆச்சரியப்படத்தக்க வகையில் நீங்கிவிடுகிறது.

வடலூர் தருமச்சாலையில் பசி என்று யார் வந்தாலும் அவர்களுக்கெல்லாம் சாப்பாடு போடுகிறார் வள்ளலார்.

சித்திரை மாதம். நல்ல கோடை வெய்யில். தருமச்சாலைக்கு வந்திருந்த ஏழை எளிய மக்களில் பதினொரு பேர் சுரத்தால் துடிக்கின்றனர். நூற்றுஇரண்டு, நூற்றுமூன்று டிகிரி சுரம் இருக்கும் போலிருக்கிறது. அவர்கள் மேலே கை வைக்க முடியவில்லை.

சுரத்தின் கொடுமையைத் தாங்கமுடியாமல் அந்தப் பதினொரு பேரும் புழுவாய்த் துடிக்கிறார்கள். சுரவேகத்தில் வாடித் துடிக்கும், அவர்களின் வேதனையைப் பார்க்கச் சகிக்காமல் தருமச்சாலையில் உள்ள அன்பர்கள் வள்ளலாரிடம் வந்து அவர்கள் படும் வேதனையைப் பற்றிச் சொல்கிறார்கள்.

கருணையே வடிவமான வள்ளலார் எழுந்து சுரத்துடன் படுத்திருப்பவர்களிடம் செல்கிறார். ஒவ்வொருவரையும் பரிவுடன் பார்க்கிறார். அவர்களைத் தனித்தனியே விசாரிக்கிறார்.

'அப்பா! உன் சுரத்தை எனக்குக்கொடுத்து விடுகிறாயா?' என்று ஒவ்வொருவரையும் கனிவோடு கேட்கிறார். தம் திருக்கரத்தால் அவர்கள் ஒவ்வொருவரையும் அன்போடு தடவிக் கொடுக்கிறார். வள்ளலார் திருக்கரத்திலிருந்து அவர்கள்மீது அமுதஒளி பாய்கிறது.

இவ்வாறு பதினொரு பேர்களையும் கேட்டு அவர்கள் உடல்களைத் தம் திருக்கரத்தால் தடவிக்கொடுத்து அமுதஒளியைப் பாய்ச்சிய பிறகு மவுனமாக ஒரு அறைக்குள் செல்கிறார்.

பத்மாசனத்தில் அமர்ந்து தியானம் செய்கிறார். அவர் உடல் அனல் மயமாக ஜொலிக்கிறது. அவரைச் சுற்றிலும் சூடு பறக்கிறது. ஐந்து நிமிடங்கள் அதே நிலையில் அமர்ந்து தியானம் செய்கிறார் வள்ளலார்.

அவர் உடலில் இருந்த சூடு மெதுவாகத் தணிகிறது. அனல் மயமாகக் காட்சி தந்த அவர் உடல், இப்போது சாதாரண நிலைக்கு வருகிறது. கண்களைத் திறந்து பார்க்கிறார். கருணை பொங்கும் அவர் முகத்தில் முறுவல் தவழ்ந்து விளையாடுகிறது.

கொடிய சுரத்தால் துன்பப்பட்ட பதினொரு பேரும் சுரம் நீங்கி, தூங்கி எழுந்தவர்கள் போல் எழுந்து வருகின்றனர். வள்ளலார் திருப்பாதங்களில் வணங்கி அவரிடம் ஆசி பெற்று மகிழ்கின்றனர்.

வள்ளல்பெருமான் தம் திருக்கரத்தால் அமுதஒளி பாய்ச்சி இப்படிப் பல அதிசயங்களை நிகழ்த்தி வருகிறார். மக்களில் பலர் அவரைத் தெய்வமாகவே மதித்துப் போற்றி வருகின்றனர்.

தமக்கு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் சித்திகளை எல்லாம் தயவோடு தந்திருக்கிறார் என்று தாம் பெற்ற சித்திகளைப் பற்றி அவரே கூறுகிறார்.

**'சித்திகள் அனைத்தையும்**
**தெளிவித்து எனக்கே**
**சத்திய நிலைதனைத்**
**தயவினில் தந்தனை'**

இவ்வாறு தாம் பெற்ற சித்திகளைப் பற்றி வள்ளலார் அருட்பாவில் பல இடங்களில் சொல்கிறார். வள்ளல்பெருமான் செய்த இந்த அதிசய சித்திகளைப் பார்த்து மக்கள் அவரைப் போற்றி வணங்கியதைப் போலவே, வள்ளலாரைப் புரிந்துகொள்ளாத பலர் அவரை அந்த நாளில் கேலியும் செய்தனர். மகத்தான அமுத ஒளியைப் பெற்று விளங்கிய வள்ளலாரின் சக்தியைப் புரிந்துகொண்டு பின்பற்றிப் பயன்பெற வேண்டிய அறிஞர்கள்கூட அவரை அலட்சியம் செய்தனர்.

வள்ளல்பெருமானே தாம் பெற்ற அனுபவங்களை எல்லாம் எல்லோரும் புரிந்துகொள்ளும்படி எளிமையாகப் பாடி வைத்திருக்கிறார். அந்த அருட்பாடல்களை உலகம் பயன்படுத்தும் வகையில் ஆராய்ச்சி செய்ய வேண்டிய பல்கலைக்கழகங்கள், தாங்கள் செய்ய வேண்டிய பணிகளை இன்னமும் செய்ய மறுத்து வருகின்றன.

மனிதகுலம் பெற வேண்டிய மகத்தான சாதனைகள் நமது மௌடீகத்தினால் மூடிமறைக்கப்பட்டு வருகின்றன. வள்ளலார் பெற்ற அனுபவ உண்மைகளை எத்தனை நாளைக்குத் தான் மூடிமறைக்க முடியும்?

மேலைநாட்டுப் பல்கலைக்கழகத்தின் பேரறிஞர்கள் இப்போது வள்ளலார் போன்ற மகான்

கள் பெற்ற சித்திகளைப் பற்றி அறிவுபூர்வமாக ஆராய்ந்து வருகின்றனர்.

தீர்க்கமுடியாத நோய்களை எல்லாம் தம்முடைய சக்தியின் மூலமாகத் தீர்த்து வரும் ஞானி ஒருவர் மாஸ்கோவில் இப்போது இருக்கிறார். அவர் பெயர் கிரிவோரோடோவ்.

பூர்வாசிரமத்தில் அவர் ராணுவ அதிகாரியாக, கேப்டனாக வேலை பார்த்தவர். அவருடைய மகன் மாஸ்கோவில் டாக்டராகப் பணியாற்றி வருகிறார்.

கிரிவோரோடோவ் பெற்றுள்ள நோய் தீர்க்கும் அதிசய சக்தி நீண்டகாலம்வரை கிரிவோரோடோவ் அவர்களுக்கே தெரியாது.

ராணுவத்திலிருந்து கிரிவோரோடோவ் ஓய்வு பெற்றவுடன், மாஸ்கோவில் டாக்டராகப் பணி புரியும் தம் மகனுடனேயே வசித்து வருகிறார்.

டாக்டரைப் பார்க்கத் தினம் தினம் ஏராளமான நோயாளிகள் வருவார்கள். ஒரு குறிப்பிட்ட நோயாளி மட்டும் நீண்டநாள் வந்துகொண்டே இருந்தார்.

அதைப் பார்த்த கிரிவோரோடோவ் அவர்களுக்கு அந்த நோயாளிமீது இரக்கம் ஏற்பட்டது.

ஒருநாள் அந்த நோயாளியைக் கூப்பிட்டார். தம் அருகில் அமர்த்திக்கொண்டார். அவரிடம் பரிவுடன் பேசினார். அவருடைய நோய் பற்றி எல்லாம் விசாரித்தார். ''உம்முடைய நோய் சீக்கிரத்தில் குணமாக வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்'' என்று அந்த நோயாளிக்கு ஆறுதல் வார்த்தைகள் சொல்லி அனுப்பி வைத்தார்.

இவ்வாறு நாலைந்து நாட்கள் கிரிவோரோடோவ் அந்த நோயாளியைக் கூப்பிட்டு அவருடன் பரிவோடு பேசி அவர் நோய் தீரப் பிரார்த்தனை செய்து அனுப்பி வைத்தார். என்ன ஆச்சரியம்! நீண்டகாலமாகத் தீராமல் தொல்லை கொடுத்து வந்த அந்த நோயாளியின் நோய் குணமாகி விட்டது.

இந்த நிகழ்ச்சிக்குப்பிறகு தம்மிடம் ஏதோ ஒரு சக்தி இருக்கிறது என்பதை கிரிவோரோடோவ் உணர்ந்தார். அந்தச் சக்தியைப் பரிசோதித்துப் பார்க்க விரும்பினார்.

தம்முடைய மகனிடம் 'உன்னிடம் வரும் நோயாளிகளில் உன்னால் குணப்படுத்த முடியாத நோயாளிகள் யாராவது இருந்தால் அவர்களை என்னிடம் அனுப்பு' என்றார். டாக்டரும் தந்தையிடம் சில நோயாளிகளை அனுப்பினார்.

கிரிவோரோடோவ் அந்த நோயாளிகளிடம் பரிவோடு பேசி, அவர்கள் நோய் சீக்கிரம் குணம் அடைய வேண்டும் என்று தியானித்துத் தமது கரத்தால் அவர்களைத் தடவிக் கொடுத்து அனுப்பி வைத்தார். இந்தத் தியான சிகிச்சை முறையினால் பல நோயாளிகளின் நோய் குணமாவதைப் பார்த்தார்.

பிறகு தம்முடைய சக்தியை நன்கு உணர்ந்துகொண்ட கிரிவோரோடோவ், தம்மிடம் வரும் நோயாளிகளை ஒரு மேஜைமீது படுக்க வைத்து தமது கரத்தால் அவர்களை மெதுவாகத் தடவிக் கொடுப்பதன் மூலம் குணப்படுத்துவதற்கு முயன்று வந்தார்.

ஒருசமயம் ஒரு நோயாளியின் உடலுக்குச் சுமார் இரண்டு அங்குல இடைவெளிக்கு அருகில் கிரிவோரோடோவ் அவர்களின் கை சென்றதும், அந்த நோயாளி 'என் உடலில் நோய் உள்ள பாகத்தில் இப்போது ஒரே சூடாக இருக்கிறது. இது எனக்கு ஒருவித உணர்ச்சியாகவும் இருக்கிறது. தயவு செய்து கையை அப்படியே சற்று நேரம் வைத்துக் கொண்டிருங்கள்' என்று வேண்டினார்.

நோயாளியின் விருப்பம் போலவே கிரிவோரோடோவ் அவர் உடலில் இரண்டு அங்குல உயரத்தில் தம் கையைத் தூக்கி நிறுத்தி அவர் நோய் நீங்க வேண்டும் என்று தியானம் செய்தார். அந்த நோயாளியின் நோய் வெகுவிரைவில் குணம் ஆவதைக்கண்டு வியந்து போனார்.

இதன்பிறகு கிரிவோரோடோவ் நோயாளிகளுக்குத் தாம் எப்படி வைத்தியம் செய்வது என்பதைப் பற்றியும் புரிந்து கொண்டார்.

அதுமுதல் எந்த நோயாளி வந்தாலும் அவரைப்படுக்க வைத்துத் தமது கையை அந்த நோயாளியின் உடலிலிருந்து இரண்டு அங்குல உயரத்திற்குத் தூக்கிப்பிடித்துக்கொண்டு தலையிலிருந்து கால்வரை மெதுவாகத் தமது கையைக்கொண்டு செல்வார்.

நோயாளிகளின் உடலில் எந்த இடத்தில் நோய் இருக்கிறதோ, அந்த இடத்துக்கு தம் கை சென்றதும் தமது கையிலேயே அதைப் பற்றி ஒரு உணர்வு ஏற்படுவதை உணர்வார்.

நோயாளிகளும் 'அந்த இடத்தை விட்டுத் தங்கள் கையை நகர்த்தாதீர்கள்' என்று சொல்வார்கள்.

நோயாளியின் நோய் உள்ள இடத்திற்கு நேராகத் தமது கையைச் சில நிமிடங்கள் இரண்டு அங்குல உயரத்தில் தூக்கிப் பிடித்தபடி அந்த நோயாளியின் நோய் குணம் அடைய வேண்டும் என்று கிரிவோரோடோவ் தியானம் செய்வார். சில நிமிடங்கள் தியானம் செய்த பின் அந்த நோயாளியை அனுப்பி விடுவார். இந்தத் தியான சிகிச்சையின் மூலம் அந்த நோயாளியின் நோய் நீங்கிவிடும்.

சில நோயாளிகளுக்கு நோயின் தன்மையைப் பொறுத்து கிரிவோரோடோவின் கையின் மூலம் வெளிப்படும் சக்தியும், அவரது தியானத்தின் பலமும் சில நிமிடங்களில் இருந்து சில நாட்கள் வரை தேவைப்பட்டன.

எந்த மருத்துவ உதவியும் இல்லாமல் நோயாளியைப் படுக்க வைத்துத் தம் கையின் மூலம் வெளிப்படும் சக்தியினுலேயே நோயாளியின் நோயுள்ள இடத்தைக் கண்டுபிடித்து, அந்த இடத்திலேயே சில நிமிடங்கள் கையை இரண்டு அங்குல உயரத்தில் நிறுத்தித் தியானம் செய்து, நோயைத் தீர்க்கும் அதிசயத்தை பார்த்து அவருடைய மகன், புகழ்பெற்ற டாக்டர் ஆச்சரியப்பட்டான்.

தம்முடைய சக டாக்டர் நண்பர்கள் பலருக்கும் இதைப் பற்றிச் சொன்னுர்.

பிறகு ஒரு டாக்டர் குழுவே கிரிவோரோடோவின் தியான சிகிச்சை முறையைப் பற்றி ஆராய ஆரம்பித்து விட்டது.

கிரிவோரோடோவ் நோயாளியைப் படுக்க வைத்து, அந்த நோயாளியின் உடலுக்குமேல் இரண்டு அங்குல உயரத்தில் கையை வைத்து நகர்த்திக்கொண்டே சென்று, ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வந்ததும், 'இந்த நோயாளியின் உடலில் இந்த இடத்தில்தான் நோய்' என்று சொன்னுர்.

டாக்டர் குழுவினர் உடனே அந்த நோயாளியை அழைத்துப்போய் கிரிவோரோடோவ் சொன்ன இடத்தில் நோயாளியின் உடலை எக்ஸ்-ரே படம் எடுத்துப்பார்த்தார்கள். அவர் சொன்னது போலவே அந்த இடத்தில் நோயாளியின் உடல் கெட்டுப்போயிருப்பதைப் பார்த்து வியந்தார்கள்.

பிறகு கிரிவோரோடோவ் நோயாளியின் உடலுக்கு இரண்டு அங்குலத்துக்குமேல் தமது கையைப் பிடித்துக் கொண்டிருக்கும்போது, அந்த இடைவெளியில் ஏதாவது அதிசயம் நடைபெறுகிறதா என்று ஆராய்ந்தார்கள். இந்த ஆராய்ச்சிக்கு ஆற்றல் பரவும் புலத்தை அளந்து காட்டும் கருவிகளையும், சக்திவாய்ந்த கிர்லியன் ஒளிப்படம் எடுக்கும் முறையையும் பயன்படுத்திஞர்கள். அதன்மூலமாகப் படம் எடுத்தும் பார்த்தார்கள்.

அதில் கிரிவோரோடோவ் கையிலிருந்து ஒளிக்கற்றைகள் நோயாளியின் உடலில் பாய்ந்து கொண்டிருப்பதைக் கண்டு வியந்தார்கள். கிர்லியன் ஒளியுடன் ஒலியையும் பதிவு செய்யும் கருவியை வைத்துப் படம் எடுத்துப் பார்த்தார்கள்.

ஒளிக்கற்றைகள் நோயாளியின்மீது பாயும் போது வண்டுகள் முரல்வது போன்ற இனிய ஒலி உண்டாவதையும் கேட்டார்கள்.

நோயாளியின் நோயைத் தீர்க்க கிரிவோரோடோவ் இவ்வாறு தமது கரத்தின் மூலமாகச் சிகிச்சை செய்யும்போது நோயாளியின் உடலையும், கிரிவோரோடோவ் உடலையும் பரிசோதித்துப் பார்த்தார்கள்.

கிரிவோரோடோவ் உடலில் உஷ்ண நிலையில் எந்த மாறுதலும் இல்லை. நோயாளிகளின் உடலில் உஷ்ண நிலையிலும் மாறுதல் இல்லை.

ஆனுல் நோயாளிகளோ கிரிவோரோடோவ் சிகிச்சை அளிக்கும் இடத்தில் தங்களுக்குத் தாங்க முடியாத சூடு இருப்பதாகச் சொல்கிருர்கள். இந்தச் சூடும் தொடர்ந்து இரண்டு மூன்று நாட்களுக்கு அந்த இடத்தில் இருப்பதாகவும் சொல்கிருர்கள்.

இதைப்பற்றி கிரிவோரோடோவ் அவர்களைக் கேட்டபோது 'நோய் தீர்க்கும் சக்தி வாய்ந்த ஒளி என்னிடம் இருந்து வரவில்லை. வெளியில் இருந்து வந்து என் கை மூலமாகச் செயல்படுகிறது என்று நினைக்கிறேன்' என்கிருர். விஞ்ஞான ஆராய்ச்சியாளர்களும் அதைத் தங்கள் ஆராய்ச்சியின் மூலமாக ஏற்றுக்கொள்கிருர்கள்.

இந்த அமுத ஒளியைத்தான் 'அனல் இன்று ஓங்கிய அருட்பெருஞ்சோதி!' என்கிருர். வள்ளளார். சூடு இல்லாமல் ஒளிவிசக்கூடிய ஆற்றல்

பெற்றது இந்த அமுதஒளி. மற்ற ஒளிகளைப் போல் அழிக்கும் தன்மை இல்லாமல் தூய்மைப் படுத்தி ஆக்கமூட்டும் சக்தியை மட்டுமே கொடுக்கும் ஆற்றல் பெற்றது இந்த அமுதஒளி.

இந்த அமுதஒளி எங்கிருந்து வருகிறது என் பதையும் விளக்குகிறார் வள்ளலார்.

'அண்டப்புறப்புற அமுதம்
பொழிந்து உயிர்
அண்டுஉறக் காத்தருள்
அருட்பெருஞ்ஜோதி !'

என்கிறார் வள்ளலார். அதாவது சூரிய மண்டலத்துக்கும் அப்பால் இருக்கும் நட்சத்திர மண்டலப்பகுதிகள்தான் அண்டப்புறப் பகுதி. இந்த நட்சத்திர மண்டலத்திலிருந்து அமுத ஒளி பூமியில் இருக்கும் உயிர்களுக்குப் பொழியப் பட்டு வருகிறது. அந்த அமுத ஒளியின் ஆற்றலினால்தான் உயிர்கள் வளர்கின்றன. அவைகளின் பொறிபுலன்கள் சிறப்பாக வளம்பெறுகின்றன. இந்த உண்மையை உணர்ந்தவர்கள் அந்த அமுத ஒளியை நோக்கி நெருங்கிச் செல்கின்றனர் என்கிறார் வள்ளலார்.

இந்த அமுத ஒளியை வள்ளலார் தம் ஆத்ம சக்தியினால் தம் உடலிலேயே நிரப்பித் தம் உடலையே அமுத ஒளி உடலாக மாற்றிக் கொண்டவர். அழியாத உடலைப் பெற்றவர். மரணமிலாப் பெருவாழ்வு பெற்றவர்.

கிரிவோரோடோவ் அந்த சக்தியைப் பெற்றவர் இல்லை. ஒரு சாதாரண ராணுவ அதிகாரி தான். ஆனால் அவர் கையிலே மோதித்திரும்பி நோயாளியின் நோயைப் போக்கும் ஒளி, வள்ளலார் குறிப்பிடும் அமுத ஒளிதான் என்பதில் சந்தேகமில்லை.

கிரிவோரோடோவ் ராணுவ அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவராக இருந்தாலும், அவரது வாழ்க்கையைக் கூர்ந்து பார்த்தால் ஏறக்குறைய நமது சித்தர்களைப் போன்ற புனிதமான மன நிலையிலும் உயிர்களிடத்தில் இரக்கம் காட்டும் தன்மையுடனும் அவர் இருக்கிறார் என்பதையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிகிறது.

அவர் மது, மாமிசம் ஒன்றும் சாப்பிடுவதில்லை. ஏதோ ஒரு முறையில் தியானப் பயிற்சியில் ஈடுபட்டு வருகிறார். உயிர்களுக்குத் தொண்டு செய்வதே வாழ்க்கையின் குறிக்கோளாக அமைத்துக் கொண்டிருக்கிறார் என்றும் புரிந்துகொள்ள முடிகிறது.

கிரிவோரோடோவ் கையிலே மோதி நெறிப்படுத்தப்பட்டுத் திரும்பும் அமுத ஒளி நோயாளியின் உடலில் பாய்ந்து செயல்படும்போது, நோயாளி தமது உடலில் தம்மால் தாங்கமுடியாத அளவு சூடு உண்டாவதாகச் சொல்கிறார் அல்லவா? இந்தச் சூட்டை அளந்து காட்டும் சக்தியுள்ள கருவி நம்மிடம் இப்போது இல்லை என்கின்றனர் விஞ்ஞானிகள்.

இத்துடன் விஞ்ஞானிகள் திருப்தி அடையவில்லை. கிரிவோரோடோவ் அவர்களின் மூலமாக வெளிப்படும் சக்தியை இன்னும் பல வழிகளிலும் சோதித்துப் பார்த்தனர்.

நன்கு மூடி சீல் வைக்கப்பட்ட தண்ணீர் ஜாடி ஒன்றை கிரிவோரோடோவ் கையில் கொடுத்து, 'தாங்கள் நோயாளிகளின் நோய் தீர்க்கும்போது என்ன தியானம் செய்வீர்களோ, அதுபோலத் தியானம் செய்து இந்தத் தண்ணீர் ஜாடியில் தங்கள் சக்தியை ஏற்றிக் கொடுங்கள்' என்று கேட்டனர்.

அவரும் அந்த சீல் செய்யப்பட்ட தண்ணீர் ஜாடியை வாங்கிக்கொண்டு 'இந்தத் தண்ணீர் மிகுந்த சக்தி வாய்ந்த தண்ணீராக வேண்டும்' என்று தியானித்தார். சில நிமிடங்கள் தியானம் செய்த பிறகு, அந்தத் தண்ணீர் ஜாடியை விஞ்ஞானிகளிடம் கொடுத்தார்.

விஞ்ஞானிகள் இன்னொரு சீல் செய்யப்பட்ட தண்ணீர் ஜாடியை ஒரு நோயாளியின் கையில் கொடுத்தார்கள். அதைச் சில நிமிடங்கள் அந்த நோயாளியை வைத்திருக்கும்படி செய்தார்கள். பிறகு அந்தத் தண்ணீர் ஜாடியை வாங்கிக் கொண்டார்கள். இன்னும் ஒரு சீல் செய்யப்பட்ட தண்ணீர் ஜாடியை ஒருவரிடமும் கொடுக்காமல் தனியே எடுத்துக்கொண்டார்கள்.

தோட்டத்தில் மூன்று பாத்திகள் கட்டி, மூன்று பாத்திகளிலும் பார்லி விதையைப் போட்டார்கள்.

ஒரு பாத்தியில் கிரிவோரோடோவ் தியானித்துக் கொடுத்த தண்ணீரை ஊற்றி வைத்தார்கள். இன்னொரு பாத்தியில் நோயாளியின் கையில் கொடுத்து வாங்கப்பட்ட தண்ணீரை ஊற்றி வந்தார்கள். மற்றொரு பாத்தியில்

சாதாரண ஜாடியில் இருந்த தண்ணீரை ஊற்றி வந்தார்கள்.

மூன்று பாத்திகளிலும் பார்லிவிதை முளைத்து வளர்ந்தது. மூன்று வாரத்திற்குப்பிறகு மூன்று பாத்திகளில் உள்ள செடிகளையும் சோதித்துப் பார்த்தார்கள். கிரிவோரோடோவ் தியானித்துக் கொடுத்த தண்ணீரை ஊற்றி வளர்த்த பார்லி பாத்தியில் பார்லிச் செடிகள் தளதளவென்று எதிர்பார்த்ததற்கு மேலாக மூன்று பங்கு அதிகமாக வளர்ந்து பச்சைப்பசேல் எனக் காட்சி அளித்தன.

நோயாளிகளிடம் இருந்து பெற்ற தண்ணீரைவிட்ட பாத்தியில் உள்ள பார்லிச்செடிகள், நோய்ப்பட்டன போலவே பார்க்கப் பரிதாபமாக வளர்ச்சி குன்றி இருந்தன.

சாதாரண ஜாடியிலிருந்து தண்ணீரைவிட்டு வளர்த்த பார்லி பாத்தியில் உள்ள பார்லிச் செடிகள் வழக்கமாக வளர்வது போல சாதாரணமாக வளர்ந்திருந்தன. தூயமனம் படைத்த உத்தம ஞானிகளின் தியான சக்தியானது உயிர்கள் எல்லாவற்றுக்குமே ஆக்கமும் ஊக்கமும் அளிக்கிறது என்ற உண்மையையும் விஞ்ஞானிகள் இந்த ஆராய்ச்சி மூலமாகக்கண்டு வியந்தார்கள்.

இந்தச் சக்தி அந்த ஞானிகளிடமிருந்து வரவில்லை. அவர்கள் வெளி உலகிலிருந்து வரும் அமுத ஒளியை நெறிப்படுத்தி உயிர்களுக்கு வழங்கும் மகத்தான சக்தியைப் பெற்றவர்களாகத் திகழ்கிறார்கள் என்ற உண்மையையும் கண்டார்கள்.

அமெரிக்க மாண்ட்ரீல் பல்கலைக்கழகத்திலும் வேறு பல நாடுகளில் உள்ள பயிர் ஆராய்ச்சி நிறுவனங்களிலும் இதுபோன்ற பல சோதனைகளை நடத்தி வருகிறார்கள். நமது நாட்டில் இவ்வாறு குறிப்பிடத்தக்க ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றனவா என்பதே சந்தேமாக இருக்கிறது.

மாஸ்கோ பல்கலைக்கழகமும், லெனின்கிராடு பல்கலைக் கழகமும் கிரிவோரோடோவ் போன்ற மகான்களை வைத்துச் செய்து வருகின்ற இது போன்ற ஆராய்ச்சிகளை நமது நாட்டில் உள்ள பல்கலைக் கழகங்களும், பிற ஆராய்ச்சி நிறுவனங்களும் செய்ய வேண்டும். அப்படிச் செய்வதற்கு வேண்டிய நல்ல சூழ்நிலை நம் நாட்டில் அதிகமாக இருக்கிறது. பல மகான்களின் ஆன்மிக அனுபவங்கள் நூல் வடிவத்தில் ஏராளமாக இருக்கின்றன. அந்த நூல்களின் அடிப்படையில் ஆன்மிகத்தை வளர்த்துவரும் நிறுவனங்களும் பல இருக்கின்றன.

இன்றும் பல அற்புதங்களை நிகழ்த்தும் அதிசயமான ஞானிகளும் நமது நாட்டில் நடமாடி வருகிறார்கள். அவர்களை நெருங்கி விஞ்ஞான முறையில் பரிசோதிக்க நமது பல்கலைக்கழகங்கள் முயல வேண்டும். அதன் மூலம் கிடைக்கும் அரிய உண்மைகளை, நம் ஆன்மிகச் செல்வங்களை மனித குலத்திற்கு வாரி வழங்கி உலகை உய்விக்கும் முயற்சியில் ஈடுபட வேண்டும்.



எவர் தாமும் பிரம்மமும் ஒன்று என்பதைத் தெளிவாக உணர்கிறாரோ, அவருக்குப் பகவான் இல்லை. எப்படியென்றால் அவரே மூன்று உலகங்களுக்கும் பகவானாகிறார்.

பிரம்ம மயமாயிருக்கும் ஒருவர், தேவர்களுக்கும் தேவராகும் தன்மையை அளிக்கிறார். அவர் அழியும் தேகத்தைக் கைவிட்டு, அழியாத பிரம்மத்தை அடைகிறார்.

ஞானமே பரமானது-சன்னியாசமே மிக உயர்ந்த தவமாகும். ஞானத்தின் உண்மையை, எல்லா உயிர்களிலும் உள்ள, எதனாலும் பாதிக்கப்படாத பிரம்மத்தை உறுதியாக உணர்ந்தவன், அனைவருக்கும் ஆதியும் அடைக்கலமும் ஆவான்.

பிரம்மன் ஸத்யம், தபஸ் ஸத்யம், படைப்பவன் ஸத்யம். எல்லா உயிர்களும் சத்தியத்திலிருந்தே பிறக்கின்றன. உலகம் முழுவதும், அதில் இருப்பதோடுகூட ஸத்யம்.

பகல் உள்ளது சூரிய அஸ்தமனம் வரை. இரவு உள்ளது சூரியோதயம் வரை. இன்பம் துன்பத்தை உண்டாக்குகிறது. துன்பம் இன்பத்தை உண்டாக்குகிறது.

இரண்டு எழுத்துக்கள் மரணத்திற்கு வழியாகும். மூன்று எழுத்துக்கள் அழிவற்ற பிரம்மத்திற்கு வழியாகும். 'மம' என்னுடையது மரணத்திற்கு வழி. 'நமம' என்னுடையது அல்ல—அமரநிலைக்கு வழி

— அனுகீதை

# தியாகவீரன் சதமன்யு

ஒருசமயம் ஒரு தேசத்திலே இரண்டு ஆண்டுகளாக மழையே பெய்ய வில்லே. மழையே இல்லாமல் போனுல் மக்கள் என்னதான் செய்ய முடியும்? பஞ் சத்தால் மக்கள் ரொம்பவும் கஷ்டப்பட்டார்கள். பயிர் பச்சைகள், புல்பூண்டுகள் கூட வாடிக் கருகின. மக்கள் குடிப்பதற்குக் கூடத் தண்ணீர் இல்லாமல் துன்பப் பட்டார்கள். ஆடுமாடுகள் பல இறந்துபோயின.

இந்த நிலேயில், மக்களுக்கு நேர்ந்துள்ள துன்பத்தை எப்படித் துடைப்பது என்று அரசன் யோசனே செய்தான். பஞ்சம் நீங்க ஏதாவது ஒரு பரிகாரம் காண வேண்டும் என்று அவன் மனதார விரும்பினுன்.

ஆகவே அவன் ஒரு சபையைக் கூட்டி, அதற்கு ராஜகுரு உட்பட அரண் மனே அதிகாரிகள், பண்டிதர்கள் ஆகிய அனேவரையும் வரவழைத்தான். அனே வரும் கூடி ஆலோசனே நடத்தினுர்கள்.

பிரச்சினேக்கு ராஜகுரு ஒரு பரிகாரம் சொன்னுர். ஆனுல் அந்தப் பரிகாரம் அவ்வளவு சுலபத்தில் நிறைவேற்றக்கூடியதாக இல்லே. அவர் சொன்ன பரிகாரம் இதுதான்: ''மழைக்குத் தேவதையாக இருப்பவன் இந்திரன். இந்திரனே மகிழ் வித்துத் திருப்தி செய்தால்தான் மழை பெய்யும். இந்திரனின் மனம் மகிழ வேண் டுமானுல், **நரபலி** தந்து யாகம் நடத்துவதைத் தவிர வேறுவழியே இல்லே.''

வேறு வழி ஒன்றும் இல்லாததால், அரசன் உட்பட அனேவரும் இந்த முடிவை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. யாகத்திற்காக நாள் குறித்தார்கள்.

தேசம் முழுவதும் தண்டோரா போட்டு, யாகம் நடக்க இருக்கும் செய் தியை அறிவித்தார்கள்.

யாகம் நடக்க வேண்டிய நாளும் வந்தது. அன்றைய தினம் தலேநகரத் தில் எள் விழ இடமின்றி மக்கள் ஏராளமாகக் குழுமினுர்கள். யாகம் நல்லவித மாக நடைபெற்று மழை பெய்து நாட்டிலுள்ள பஞ்சம் நீங்க வேண்டும் என்பதற் காகவும், நரபலிக்குத் தன்னேக் காணிக்கையாக யார் கொடுக்க முன் வரப்போகி ருர் என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவும், யாகத்தைப் பார்ப்பதற்காகவும் தேசமே யாகசாலேக்கு அன்றைய தினம் திரண்டு வந்திருந்தது.

நரபலி செய்ய வேண்டிய நேரம் நெருங்கியது. ராஜகுரு எழுந்து நின்ருர். பொதுமக்கள் பார்வை எல்லாம் அவர் மேலேயே பதிந்து லயித்திருந்தது. வைத்த கண் வாங்காமல் ராஜகுரு என்ன சொல்லப்போகிருர் என்பதைக் கேட்பதற்காக மக்கள் அவரையே கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்போது ராஜகுரு குழுமியிருந்த மக்களே நோக்கிச் சொன்னுர்: ''பொது மக்களே, நமது நாட்டின் நலனுக்காக இந்த யாகம் நடத்த ஏற்பாடாகி இருப் பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். யாகம் முழுமையான அளவில் சிறப்பாக நடை

பெற்ருல்தான், நாட்டில் மழை பெய்து பஞ்சம் நீங்கும். இதில் **நரபலி** நடக்க வேண்டியதும் முக்கியமான ஓர் அம்சமாக இருக்கிறது. நரபலிக்குத் தம்மையே ஒப்படைத்து யாகத்தை நடத்திக் கொடுக்க முன் வருபவர் வரலாம்'' என்று அறிவித்தார் ராஜகுரு.

ராஜகுரு பேசிமுடித்ததும், கூட்டத்தில் ஒரே அமைதி நிலவியது. தன்னைப் பலியாகக் கொடுப்பதற்கு யார் முன் வரப்போகிருர் என்ற எண்ணம் அனைவரின் உள்ளத்தையும் சூழ்ந்திருந்தது. சிறிய தியாகம் என்ருல் செய்யலாம்; தன்னையே பலி கொடுப்பது என்ருல்....?

பொதுமக்கள் அனைவரும் இருந்த இடத்திலேயே நின்று கொண்டிருந்தார்களே தவிர, 'நான் என்னைப் பலி கொடுக்கத் தயார்' என்று சொல்லிக்கொண்டு யாரும் பலிமேடையிலே வந்து நிற்க முன்வரவில்லை.

அப்போது, அங்கே நிலவிய மயான அமைதியைக் கிழித்துக்கொண்டு ஒரு பையனின் குரல் பலமாகக் கேட்டது. மக்களின் பார்வை எல்லாம் குரல் வந்த திசையை நோக்கித் திரும்பியது.

''இதோ, நமது தாயகத்தின் நலனுக்காக என்னையே நான் பலி கொடுக்க முன் வருகிறேன். என்னைப் பலியிட்டு யாகத்தை நடத்திப் பூர்த்தி செய்யுங்கள். அதன் மூலம் மழை பெய்து நாட்டிற்கு நன்மை ஏற்படட்டும்''

பன்னிரண்டு வயதே நிரம்பிய சிறுவன் சதமன்யுதான் அப்படிச் சொல்லிக் கொண்டு யாகசாலையை நோக்கி நடந்து வந்தான்.

சதமன்யுவை ஈன்றெடுத்த அன்னை அருகிலேயே இருந்தாள். 'மகனே! என் கண்மணி சதமன்யு! உன்னை நான் பெற்றெடுத்தபோது அடைந்த மகிழ்ச்சியை விடவும், இப்போது நான் அடையும் மகிழ்ச்சியே மிகமிகப் பெரிதடா!' என்று சொல்லியபடியே அவள் மகனை ஆசீர்வதித்து வாழ்த்திப் பலிபீடத்தை நோக்கி வழியனுப்பி வைத்தாள். ஆம், அவள் அப்படித்தான் செய்ய முடியும். ஏனென்ருல் அவள் ஒரு உண்மையான இந்தியத்தாய்.

சதமன்யுவின் தந்தையும் அருகிலேயே நின்றிருந்தார். அவர் பெற்ற மகன் அவர் கண் முன்னுலேயே பலியாகப் போகிருன்! ஆனுல், அவரும் எந்தவிதமான சிறிய சலனத்திற்கும் ஆளாகாமல் மகனுக்கு ஆசி கூறினுர். அவனை வழியனுப்பியும் வைத்தார்.

குழுமியிருந்த மக்களுக்கு ஒரே ஆச்சரியம். ஒரு சிறிய பையன் நாட்டின் நலனுக்காகத் தானுகவே மரணத்தை ஏற்றுக்கொள்ள முன் வருகிருன்! இப்படி ஒரு பையன்! இப்படி ஒரு தாய்! இப்படி ஒரு தந்தை!

சதமன்யு பலி மேடையிலே ஏறி நின்ருன். சிலகணங்களில் அந்தப் பாலகனின் தலை தரையிலே உருண்டு விடும்!

சதமன்யுவின் தலையைப் பலி வாங்கப்போகும் சமயத்தில் அங்கே ஒரு அற்புதம் நிகழ்ந்தது. வானம் இருண்டு திரள்திரளாக மேகம் சூழ்ந்தது. பளீர் பளீர்

என்று மின்னல் வெட்டுகள் வெட்டின. மலையோடு மலை மோதுவதைப் போலப் பெரிய பெரிய இடிமுழக்கங்கள் நாலாதிசைகளிலும் கேட்டன.

அப்போது அதேசமயத்தில் யாக மேடையிலும் ஓர் ஆச்சரியம் நிகழ்ந்தது. சதமன்யுவின்மேலே பூமாரி பொழிந்து கொட்டியது. அதேசமயத்தில் மழைக்கு அதிதேவதையாகிய இந்திரனே அங்கே தோன்றினான்.

பொதுமக்கள் இந்திரனை சாஷ்டாங்கமாக விழ்ந்து பணிந்தார்கள். இந்திரன் கூடியிருந்த மக்களைப் பார்த்துச் சொன்னார்: 'தேச மக்களின் நலனுக்காகத் தன்னையே பலிகொடுக்க முன்வந்தான் சதமன்யு! அவனது தியாக உள்ளம் என்னையே நெகிழும்படி செய்துவிட்டது. சதமன்யுவைப் போன்ற தியாகச் செல்வங்களைப் பெற்றெடுத்த ஒரு நாடு, இனியும் பஞ்சத்தால் வாடுவது நியாயமில்லை. ஆதலால் இன்று நரபலி இல்லாமலேயே, நரபலியிடப்பட்டு யாகம் முழுமையான அளவில் சிறந்தமுறையில் நடைபெற்றதாக ஏற்றுக்கொண்டேன். மழையையும் தேவையான அளவுக்குப் பெய்விக்கிறேன்.'

இத்தகைய சதமன்யுவைப் போன்றவர்களும், வீரத்துறவி விவேகானந்தரைப் போன்றவர்களும், பிறந்தும்வளர்ந்தும் நடமாடியும் மக்களை வாழவைத்த புண்ணிய பூமியே நமது பாரதம். நாம் அவர்களுடைய பரம்பரையைச் சேர்ந்தவர்கள். அதைக் குறித்து நாம் எவ்வளவு வேண்டுமானாலும் பெருமை கொள்ளலாம். அவர்களைக் குறித்து நாம் பெருமை கொள்வதைப்போல, நம்மைக் குறித்து நமக்குப் பின்வரும் மக்களும் பெருமைகொள்ள வேண்டாமா? அதற்குரிய உயர்ந்த தியாக வாழ்க்கையை நாமும் வாழ வேண்டாமா? தம்பி, தங்கைகள், பெரியவர்களைக் குறித்துப் படிக்கும்போதும் கேட்கும்போதும் இப்படி எல்லாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இதுவே உங்களிடம் என்னுடைய பிரார்த்தனை.

**'நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை'.**



உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே —மூதுரை

சாட்சியில்லாத காலத்தில் மனமே சாட்சியாகும் —கன்ஃபூஷியஸ்

செல்வம் இல்லாத காலத்தும், தம்மால் முடிந்த அளவு, செல்வம் உடையவர்களைப் போன்று மிக்க மகிழ்ச்சியோடு ஏழைகளுக்குக் கொடுக்கும் நற்குணம் உடையவர்களுக்கு மோட்சம் கிடைப்பது திண்ணம். —நாலடியார்

ஆரோக்கியமான உடலுடனும், அமைதியான மனதுடனும் பிரார்த்தனை செய்ய வேண்டும். கடவுள் நாட்டம் உள்ளத்தில் உண்டாகி அது பிரார்த்தனையாக வடிவெடுக்க வேண்டும். அப்போதுதான் நீ செய்யும் பிரார்த்தனை உண்மையான பிரார்த்தனையாக இருக்கும். ''என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பேரன்புப் பொருளே, உனது திருநாமத்தைப் பாடி என் உள்ளத்தை அமைதிப்படுத்துவேன்''. இது நல்ல பிரார்த்தனை. இதைவிடச் சிறந்த பிரார்த்தனை இல்லை என்று சொல்லலாம். பக்தியிலும் மேலான ஆன்மிக சாதனை இல்லை. அனைவரிடமும் அன்பு செலுத்திப் பழகு. ''அறியாமை என்னும் கடலைக் கடப்பதற்கு பக்தி என்னும் படகைப் பயன்படுத்து'' என்று சுவாமி விவேகானந்தர் கூறியுள்ளார். அவர் சொல்லியபடியே வாழ்ந்து காட்டினார். —சுவாமி துரியானந்தர்

# தியான வேளையிலே...

**F. J. அலெக்ஸாண்டர்**

(சுவாமி விவேகானந்தரின் சீடர்)

ஒருவன் இந்த உலகத்தை மறக்கும் நேரங்களும் உள்ளன. எந்தப் புனிதப் பிரதேசத்தில் ஆன்மா தன்னிறைவு பெற்றும், ஒப்புயர்வு இல்லாத ஒரு தனிப்பொருளின் சந்நிதியிலும் விளங்குகிறதோ, அந்தப் பிரதேசத்தை ஒருவன் அணுகும் நேரங்களும் இருக்கின்றன. அப்போது ஆசையின் ஆர்ப்பாட்டங்கள் எல்லாம் அடங்கி ஒய்ந்து விடுகின்றன. புலனுணர்ச்சி அற்று விடுகிறது. கடவுள் ஒருவர் மட்டுமே இருக்கிறார்.

பரிசுத்தமாக்கப்பட்ட உள்ளத்தைக் காட்டிலும் கடவுளிடம் ஒருமுகப்பட்ட உள்ளத்தை காட்டிலும், புனிதமான ஆலயம் வேறு ஒன்றுமே இல்லை. கடவுளிடம் ஒன்றுபட்ட உள்ளம் பிரவேசிக்கும் அமைதிப் பிரதேசத்தை விடவும், பரம பவித்திரமான இடம் வேறு ஒன்றும் கிடையாது. சிந்தனை கடவுளை நோக்கி தைலதாரையைப் போலச் செல்லுவதை விடவும் சுகந்தமான ஊதுபத்தியோ, நறுமணம் உள்ள சாம்பிராணிப் புகையோ இல்லை.

பரிசுத்தம், ஆனந்தம், அனுக்கிரகம், சாந்தம்! பரிசுத்தம், ஆனந்தம், அனுக்கிரகம், சாந்தம்!! இவைகள் மட்டுமேதான் தியான நிலையைச் சுற்றி நிலவிக் கொண்டிருக்கின்றன.

இந்தப் புனிதமான சந்தடியற்ற வேளைகளில் ஆத்ம உணர்வு உதயமாகிறது. ஆன்மா மூலப் பொருளின் அண்மையில் இருக்கிறது. இந்த நேரங்களில், தான் என்னும் வியக்தியாகிய சிற்றாறு விரிந்து விரிந்து, வேகமாக ஓடும் பெரிய நதியாகப் பெருக்கெடுத்து, உண்மையானதும் அழிவு இல்லாததுமாகிய சைதன்யப் பொருளாகிய சமுத்திரத்தை நோக்கிப் பாய்கிறது. இந்தப் பொருள் இரண்டற்ற ஒன்றேதான்.

தியான காலங்களில் தனது இயல்பாகிய, உண்மையில் சொந்தமான குணங்களாகிய அச்சமின்மை, அழிவு இல்லாத தன்மை, நித்தியத்துவம் ஆகியவைகளை ஆன்மா அந்த உயர்ந்த பொருள்களில் இருந்து தன்னிடம் இழுத்துக் கொள்கிறது.

ஓ ஆன்மாவே! உனக்குள்ளேயே நீ அடங்கி இருப்பாயாக! உண்மைப் பொருளை அமைதியாகத் தேடு. அடிப்படையில் அந்த உண்மைப் பொருளின் இயல்புதான் உன்னுடையது என்பதைத் தெரிந்து கொள். நீ தெய்வத்தன்மை பெற்றவன் என்பதைப் புரிந்து கொள். இதயக் குகையில் கடவுள் உறைகிறார் என்பது உண்மையிலும் உண்மை.

*  *  *

அச்சத்தை விடு! அழியும் பொருள்கள் எல்லாமே நிழல் போன்றவைகள்தான். தோற்றப்பொருள்கள் எல்லாவற்றின் மீதும் மாயைதான் ஆட்சி செலுத்துகிறது. நீயோ உண்மைப் பொருள். ஒருவித மாறுதலும் இல்லாத பொருள். நீ சஞ்சலம் இல்லாத பொருளாகவே இருக்கிறாய் என்பதை உணர்ந்துகொள்!

இயற்கை தனது இயல்பின்படி எப்படி விளையாடுமோ, அப்படியே உன்னிடமும் விளையாடட்டும். உனக்கு ஓர் உருவம் இருப்பதாகத் தோன்றுவது ஒரு கனவு மட்டும்தான். இதைப் புரிந்துகொண்டு மன நிறைவோடு இருப்பாயாக!

உருவம் இல்லாத கடவுள் தன்மையில்தான், உன்னுடைய ஆன்மா இருக்கிறது. மனம் விட்டுவிட்டுப் பிரகாசிக்கும் வெளிச்சத்தையே பின்பற்றட்டும். ஆசை அதிகாரம் செலுத்துகிறது. வரம்புகள் இருக்கின்றன. ஆனால் நீ மனம் அல்ல. ஆசை உன்னைத் தொட முடியாது. எல்லாம் அறிந்ததும் (சர்வக்ஞத்துவமும்) எல்லா ஆற்றலும் உள்ளதுமாகிய ஒரு பொருளிடமே நீ இருக்கிறாய்.

வாழ்க்கை ஒரு விளையாட்டு என்பதை நினைவில் வை. உனக்குக் கொடுக்கப்பட்ட நாடகத்தில் நீ நடி. அவ்விதம் நீ நடித்துத்தான் தீர வேண்டும். இதுதான் விதி. என்றாலும் உண்மையில் நீ நடிப்பவன் அல்ல, நாடகமும்அல்ல, விதியும்கூட அல்ல.

வாழ்க்கையால், உன்னை ஓர் வரம்புக்குள் கட்டுப்படுத்தி வைக்க முடியாது. ஏனென்றால் நீ வரம்பு கடந்தவன் ஆயிற்றே! வாழ்க்கை என்பது கனவின் இயல்பை மட்டுமே கொண்டிருக்கிறது. நீ கனவைக் காண்பவன் அல்ல.

உண்மை இல்லாத மாயையால் தொடவே முடியாததும், குறைபடுத்தவே முடியாதது மாகிய கனவு இல்லாத பொருள்தான் நீ. இதைப் புரிந்துகொள். இதைப் புரிந்துகொண்டு எல்லா பந்தங்களிலும் இருந்து விடுபட்டு நீ சுதந்திரமாக இரு. சுதந்திரமாக இரு! சுதந் திரமாக இரு!! சுதந்திரமாகவே இரு!!!

அமைதி! அமைதி! சந்தடி இல்லாத, காது கொடுத்துக் கேட்கும்படியான ஓர் அமைதி! கடவுளின் குரல் கேட்கக்கூடிய ஆழ்ந்த ஓர் அமைதி! சாந்தமும் நிசப்தமும் மட்டுமே நிறைந்த ஒரு பெரிய நிலை.

அப்போது அந்த நிலையிலே கடவுளின் குரல் மட்டும் அங்கு ஒலிக்கிறது. ஆழ்ந்த அமைதி யில் அந்தக் குரல் மட்டுமே அங்கே ஒலிக்கிறது. ''நான் உன்னுடனேயே இருக்கிறேன். எப் போதும் உன்னுடனேயே இருக்கிறேன். ஆரம் பம் என்பதே இல்லாத காலத்திலிருந்து நான் உன்னுடனேயே இருக்கிறேன். எந்தக் காலத் திலுமே நீ என்னை விட்டுப் பிரிந்து இருந்ததே கிடையாது. அப்படி உன்னால் என்னைவிட்டுப் பிரிந்து தனியாக எந்தக் காலத்திலும் இருக்க வும் முடியாது. நான் உன்னுடைய பரிசுத்த மான ஆன்மா. உண்மையிலேயே உன்னுடைய ஆன்மாவாக இருப்பது நான்தான்.

''இந்த உலகங்களை எல்லாம் கடந்து, இந் தப் பொருத்தம் இல்லாத கனவுகளை எல்லாம் கடந்து, நான் எனக்கு உள்ளேயே தன்நிறைவு பெற்றவனாக எல்லையே இல்லாத இடத்திலே இருந்து கொண்டிருக்கிறேன். ஆம், அதைப் போலவேதான் உண்மையில் நீயும் இருந்து கொண்டிருக்கிறாய்! ஆம், அப்படியேதான் நீயும் இருக்கிறாய் என்பதுதான் உண்மை. ஏனென் றால், நான் நீயேதான். நீ நானேதான்.

''கனவுகளை எல்லாம் விட்டொழித்து விடு. வா! என்னிடம் வா! என்னிடமே வந்து விடு. இருளும் மருளும் மயக்கமும் நிறைந்த உடலைக் கடந்து, ஒளிக்கும் நித்திய தெய்விக அமர வாழ்க்கைக்கும் உன்னை நானே தூக்கிச் செல் கிறேன். அதுவே ஒளியும் நித்தியமாய் என் றென்றும் உள்ள ஆனந்த மயமான வாழ்க்கை ஆகும்.

''நீயும் நானும் வேறல்ல. நீயும் நானும் இரண்டு இல்லாத ஒன்றே. நீ நான்தான். நானும் நீயேதான். போ, ஆழ்ந்த பேரமை தியில் மூழ்கி நிலைத்திரு. ஆம், ஆம், எப் போதுமே நித்திய அமைதியில் ஆழ்ந்திரு. மீண் டும் சமயம் வரும்போது, நிசப்தமும் நிறைந்த சாந்தமும் நிலவும்போது, மறுபடியும் நீ என் னுடைய குரலைக் கேட்கத்தான் போகிறாய்!''

ஓ, கடவுளின் குரல்! ஆ, ஆ, அது அந்த தெய்வத்தின் குரல்!!



தன்னிடத்திலிருந்து தோற்றுவித்த நூலின்கண் சிலந்திப்பூச்சி தன்னை மறைத்துக்கொள் வது போல, தன்னிடத்திலிருந்து தோற்றுவித்துள்ள இயற்கையில் தன்னை மறைத்துள்ள ஏக தெய்வமே, உன்னிடம் ஊன்றியிருக்க எங்களுக்கு அனுக்கிரகம் செய்வாயாக.

**—ஸ்வேதாஸ்வதரோபநிஷத்**

உலகுக்கு நாயகியே, உனது பாத கமலங்களுக்கு அனந்தங் கோடி வணக்கங்கள். உனது திவ்விய வடிவம் என் உள்ளத்தை விட்டு அகலக்கூடாது. இந்த வரம் எனக்களிக்கப்பட்டால் போதுமானது. உன்னை நான் எப்போதும் மறவாமல் நினைத்துக் கொண்டிருப்பேன். உலகை அயன் படைக்கிறான், மால் காக்கிறான், தாணு அழிக்கிறான் என்று கூறப்படுகிறது. இந்த முத் தொழிலும் உன் வல்லமையால் எங்களைக் கொண்டு செய்விக்கப்படுவதல்லவா? நில உலகு நில மகளால் தாங்கப்படுவதாகக் கூறப்படுவது தவறு. அகிலத்தையே நீதான் தாங்கி நிற்கிறாய். உனது கருணை கடாட்சத்தால் நான் புராண புருஷனாக இருக்கிறேன். என்னை ஆதி அந்தமில்லா தவன், எங்கும் நிலவியிருப்பவன், அண்ட சராசாரங்களைக் காப்பவன் என்று புகழ்கிறார்கள். உனது கருணையில்லாவிட்டால் நானும் அஞ்ஞானத்தில் உழன்றிடுவேன். உனது திருவடிகளை நான் சரண் புகுகிறேன். **—தேவியிடம் திருமாலின் பிரார்த்தனை (தேவி பாகவதம்)**

மெய்யுணர்வு தோன்றியபின், அடக்கம் முதலிய ஞான சாதனங்களும், அகிம்சை முதலிய குணங்களும் ஜீவன் முக்தனுக்கு அணிகள் போலத் தொடர்ந்து இருக்கின்றன.

**—ஸதானந்தர் யோகீந்திரர்**

# நடு இரவிலே முழங்கிய வேதாந்த முரசு

சென்னை ஸ்ரீராம்கிருஷ்ண மடத்தின் சார்பாக 'வேதாந்தக் கதைகள்' என்னும் தமிழ் நூல் விரைவில் வெளிவர இருக்கிறது. அதில் இடம் பெற்றுள்ள ஒரு கதை இது.

நீண்ட காலத்திற்கு முன்பு, மாதவிபுரி என்னும் ஊரிலே கடவுள் பக்தியில் சிறந்த பெரியவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். கடவுளிடம் பக்தியை வளர்த்துக்கொள்வது ஒன்றையே அவர் தமது இலட்சியமாகக் கொண்டிருந்தார்.

ஒவ்வொரு நாளும் தவருமல் அவர் ஜபம், தியானம் ஆகிய ஆன்மிகச் சாதனைகளைச் செய்வது வழக்கம். தமது இலட்சியத்திலிருந்து எந்தக் காரணத்தை முன்னிட்டும் எப்போதும் அவர் பிறழவே மாட்டார்.

தவ வாழ்க்கையை உறுதியுடனும் தொடர்ந்தும் அவர் பின்பற்றினர். ஆகவே நாளடைவில் நல்ல ஆன்மிக முன்னேற்றம் அவருக்கு உண்டாயிற்று. அப்போது பல இளைஞர்கள் அவரை நாடி ஆத்மோபதேசம் பெறுவதற்காக வந்தார்கள். பெரியவர், அவர்களுக்குக் கடவுளிடம் பக்தி செலுத்தி வாழ்வது ஒன்றேதான் வாழ்க்கையின் இலட்சியம் என்பதைத் தெளிவாகவும் அவர்கள் உள்ளத்தில் பதியும் வகையிலும் விளக்கிச் சொன்னர்.

தாம் எந்த வாழ்க்கையை வாழ்ந்தாரோ, அதையே பெரியவர் தம்முடைய சீடர்களுக்கு எடுத்துப் போதித்தார். தாம் எதைப்போதித்தாரோ அதையே தமது வாழ்க்கையாக அவர் வைத்திருந்தார்.

பெரியவரிடம் உபதேசம் பெற்றுப் பல இளைஞர்கள் கடவுளிடம் பக்தி செலுத்தித் தங்கள் வாழ்க்கையைப் பயனுடையது ஆக்கிக்கொண்டார்கள்.

இவ்விதம் பெரியவர், பல ஆண்டுகள் தமது ஞானப்பணியைச் சிறந்த முறையில் செய்து வந்தார். இந்த நிலையில் முதுமையும் அவரை நெருங்கிக் கொண்டிருந்தது.

தமது ஆயுட்காலம் மிக விரைவில் முடியப் போகிறது என்பதைப் பெரியவர் உணர்ந்தார். ஆகவே அவர் தமது அந்திம காலத்தைக் காசியிலே கழிக்க வேண்டும் என்று விரும்பினர். குருவின் உள்ளத்தில் எழுந்த கருத்தைச் சீடர்கள் புரிந்து கொண்டார்கள்.

பெரியவரை இளைஞர்களாகிய நான்கு சீடர்கள் நெருங்கினர்கள். பக்தியும் பணிவும் பொங்க அவரிடம், 'சுவாமி, தங்கள் விருப்பப்படியே செய்யலாம். தங்களை ஒரு பல்லக்கில் அமர்த்தி நாங்கள் நால்வரும் காசிக்குத் தூக்கிக்கொண்டு போகிறேம். தொடர்ந்து சில நாட்கள் பிரயாணம் செய்தால் காசிக்கு விரைவிலேயே போய்ச் சேர்ந்துவிடலாம்' என்று தெரிவித்துக் கொண்டார்கள்.

பெரியவர், தமது அந்திமகால விருப்பத்தை நிறைவேற்றித் தர முன்வந்த சீடர்களைக் குறித்து மகிழ்ச்சி அடைந்தார். தமது மனமார்ந்த சம்மதத்தைச் சீடர்களுக்குத் தெரிவித்தார்.

சீடர்கள், தமது குருநாதரைப் பல்லக்கிலே அமரச் செய்து காசியை நோக்கிப் புறப்பட்டார்கள். பிரயாணம் சில நாட்களுக்குத் தொடர்ந்தது. வேகமாகப் பல்லக்கை இளைஞர்கள் தூக்கிச் சென்ருர்கள். ஆகவே விரைவிலேயே காசியை நெருங்கும் நிலையில் அவர்கள் இருந்தார்கள்.

குருவுக்குத் தமது அந்திமகாலம் நெருங்கி விட்டது புரிந்தது.

ஆகவே அவர், ''பல்லக்கு இப்போது எங்கே போய்க் கொண்டிருக்கிறது?'' என்று சீடர்களைக் கேட்டார். பல்லக்கு காசியை அடைந்திருக்கும் என்று நினைத்து, அதை உறுதிசெய்து கொள்வதற்காகத்தான் அவர் அப்படிக்கேட்டார்.

ஆனல், அப்போது பல்லக்கு சில மணிநேரத்தில் காசியை அடையும் நிலையில் இருந்ததே தவிர, காசியையே அடைந்து விடவில்லை. ஆகவே சீடர்கள், ''சுவாமி, பல்லக்கு இப்போது பறையர்களின் சேரியின் அருகிலே இருக்கிறது'' என்று பதில் சொன்னர்கள்.

பல்லக்கின் உள்ளே இருந்த குருவின் காதில் சீடர்களின் பதில் விழுந்து கொண்டிருந்த அதே சமயத்தில், குருவானவரின் உயிர் பிரிந்தது.

மரணத் தறுவாயில் ஒருவன் எப்படிப்பட்ட சிந்தனைகளைக் கொண்டவனாக இருக்கிறானோ, அந்தச் சிந்தனைகளே அவனுடைய மறுபிறவியை நிர்ணயிக்கின்றன என்பது நமது நாட்டு மகான்கள் கண்டறிந்த ஓர் உண்மை.

மரணம் அடையும்போது 'பறையர்களின் சேரி' என்று காதில் விழுந்ததால், பறைச்சேரியின் நினைவு குருவின் உள்ளத்தில் இருந்தது. அதன் காரணமாக அவர், தமது மறு பிறவியில் பறையர்கள் வாழும் பகுதியாகிய ஒரு சேரியிலேயே பிறந்தார்!

ஆனால் குரு தவ வாழ்க்கை வாழ்ந்திருந்ததால், அந்த நல்ல சம்ஸ்காரங்கள் வீணாகவில்லை. ஓர் அரசனுக்குக் கீழே வேலை பார்த்து வந்த, ஒரு பறையனுடைய வீட்டிலே அவர் பிறந்தார்.

அந்தப் பறையன் ஒவ்வொரு நாளும் இரவு முழுவதும் தலைநகரத்தைச் சுற்றி வருவான். இரவின் நான்கு ஜாமங்களிலும் வீதிகளில் நடந்து கொண்டே பறையை அடித்துத், ''திருடர்கள் உஷார். திருடர்கள் உஷார். ஜாக்கிரதையாக இருங்கள். ஜாக்கிரதையாக இருங்கள்'' என்று கூவிப் பொதுமக்களை எச்சரிப்பான். இரவில் திருடர்கள் தங்கள் கைவரிசையைக்காட்டாமல் இருப்பதற்காக, அரசன் இந்த ஏற்பாட்டைச் செய்து வைத்திருந்தான்.

இந்தப் பறையனுக்குத்தான் குரு, தம்து மறுபிறவியில் மகனாகப் பிறந்தார். மறுபிறவியிலும் அவருக்குத் தமது பழம்பிறவியைப் பற்றிய உணர்வுகள் இருக்கவே செய்தன.

மகனுக்கு உலக வாழ்க்கையின்மீது சொல்ல முடியாத ஒரு வெறுப்பு. மக்களில் மிகப்பெரும் பாலோர் அவித்தைக்கு உட்பட்டுத்தான் வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, மகன் உலகப் பற்றுள்ள மக்களுடன் பழகுவதைத் தவிர்த்து ஒதுங்கியே வாழ்ந்தான். தனிமையில் இருப்பான். யாருடனும் பேச மாட்டான். இவ்விதம் வாழ்ந்த அவனைப் பற்றி ஒரு பிறவி ஊமை என்று குடும்பத்தவர்களும் ஊர் மக்களும் முடிவு செய்தார்கள்.

இந்த நிலையில் தந்தை, 'தனது மகன் ஓர் உதவாக்கரை; ஒன்றுக்குமே பயன்படாத ஓர் அசடன்' என்று நினைத்தான். ஆதலால், மகன் எப்படியாவது தனது இஷ்டப்படி வாழ்ந்து போகட்டும்' என்று 'தண்ணீர்தெளித்து' விட்டு விட்டான். மகன் தனது போக்கிலேயே வளர்ந்து வந்தான்.

ஒருசமயம் பறையன் ஏதோ ஓர் அவசர வேலை காரணமாகத் திடீரென்று பக்கத்து ஊருக்குப் போக வேண்டி வந்தது. அவன் அரசனிடம் சென்று நிலைமையை விளக்கினான். தனக்குப் பதிலாகத் தன்னுடைய ஊமை மகன் அன்றைய தினம் நகரைச் சுற்றி வந்து நான்கு ஜாமங்களிலும் பறையை அடிப்பான் என்று சொன்னான்.

அரசனும் ஒப்புக்கொண்டு அனுமதி வழங்கினான்.

மன்னன் மாறுவேடம் பூண்டு, இரவு நேரங்களில் நகர சோதனை செய்வது வழக்கம். அவன் 'இந்த ஊமை அசடன் எப்படித் தன்னுடைய வேலையை ஒழுங்காகக் கவனிக்கப் போகிறான்' என்று நினைத்தான். ஆகவே, 'ஊமை, இன்றைக்கு என்னதான் செய்கிறான் என்பதை அவனுக்குத் தெரியாமல் இருந்து கவனித்துப் பார்க்கலாம்' என்று தனக்குத்தானே முடிவு செய்தான்.

ஆயிற்று. மாலை சாய்ந்து இருள் சூழ்ந்தது. இரவின் முதல் ஜாமப்பொழுதும் வந்தது.

பறையனின் ஊமை மகன், பறையை அடித்துக்கொண்டே வீதிவீதியாக நகரத்தைச் சுற்றி வந்தான். அவனுக்குத் தெரியாமல் அரசன் அவனைப் பின்தொடர்ந்து கொண்டிருந்தான்.

பறையை அறைந்துவிட்டு, எச்சரிக்கை தந்து கூவ வேண்டிய நேரம் வந்தது.

அரசன், 'ஊமை மகன் இப்போது என்ன செய்வான்?' என்று நினைத்தபடியே மறைவாக இருந்து கவனித்தான்.

**காம: குரோதஸ்ச லோபஸ்ச தேஹேதிஷ்டந்தி தஸ்கரா: |**
**ஞான ரத்ன அபகராய, தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத: ||**

''காமமும் குரோதமும் லோபமும் உடலில் உள்ள திருடர்கள் ஆவார்கள். அவர்கள் (ஆத்ம) ஞானமாகிய ரத்தினமணியைப் பறித்துக்கொண்டு போய் விடுவார்கள். ஆதலால், ஜாக்கிரதையாக இருங்கள்; ஜாக்கிரதையாக

இருங்கள்'' என்று சொல்லி வீதியில் கூவிக் கொண்டே பறையனின் மகன் நடந்தான்!

மறைவாக இருந்து கவனித்த அரசனுக்கு ஒரே ஆச்சரியம். 'இந்த இளைஞன் உண்மையி லேயே ஓர் ஊமை கிடையாது. இவர், உட லில் வாழும்போதே முக்தியைப் பெற்று வாழும் ஒரு ஜீவன்முக்தர்' என்பதை உணர்ந்து பெரி தும் மகிழ்ச்சி அடைந்தான்.

முதல் ஜாமம் முடிந்து, இரண்டாம் ஜாமம் வந்தது. அரசன் இப்போதும் மறைவாக இருந்து ஜீவன் முக்தரைக் கவனித்தான். ஜீவன் முக்த ராகிய மகான் பறையை அடித்துவிட்டுப் பின் வருமாறு கூவினார்:

**ஜன்ம துக்கம் ஜரா துக்கம், ஜாயா துக்கம் புன: | புன:**
**ஸம்ஸார சாகரம் துக்கம், தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத: ||**

''பிறப்பும் துக்கம். மூப்பும் துக்கம். மனைவி யும் துக்கம். மீண்டும் மீண்டும் பிறவிக் கடலும் துக்கம். ஆகவே, ஜாக்கிரதையாக இருங்கள்; ஜாக்கிரதையாக இருங்கள்'' என்று ஜீவன் முக்தராகிய இளைஞர் முழங்கியதை அரசன் கேட்டான்.

மூன்றாவது ஜாமத்தில் இளைஞர் பறையை அறைந்துவிட்டுக் கூவினார்:

**மாதா நாஸ்தி பிதா நாஸ்தி, நாஸ்தி பந்து ஸஹோதர |**
**அர்த்தம் நாஸ்தி க்ருஹம் நாஸ்தி, தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத: ||**

''தாயும் இல்லை, தந்தையும் இல்லை; இல்லை உற்றாரும் சகோதரனும். சொத்தும் இல்லை, வீடும் இல்லை; ஆகவே ஜாக்கிரதையாக இருங் கள்; ஜாக்கிரதையாக இருங்கள்.''

மூன்றும் ஜாமத்தில் ஜீவன் முக்தர் பறையை முழங்கி, எச்சரிக்கையாகக் கூவியவைகளையும் அரசன் கேட்டான். ஜீவன் முக்தரைத் தொடர்ந்து அவனும் இரகசியமாக வீதிவீதி யாகப் போய்க்கொண்டிருந்தான்.

நான்காவது ஜாமப்பொழுது வந்தது. வீதி யில் பறையை அடித்துக்கொண்டே சென்ற இளைஞர் ''உஷார்'' சொல்லும்போது பின் வருமாறு கூவிப் பறையை அறைந்தார்.

**ஆசயா பத்யதே லோகே, கர்மணா பஹு சிந்தயா ||**
**ஆயு க்ஷீணம் நஜானாதி, தஸ்மாத் ஜாக்ர ஜாக்ரத: ||**

''ஆசையால் கட்டுண்டு உழலும் உலகம், கர்மத்தாலும் பல கவலையாலும் ஆயுள் தேய் வதை யாரே அறிவார்கள். ஆகவே ஜாக் கிரதையாக இருங்கள்; ஜாக்கிரதையாக இருங் கள்.''

நான்கு ஜாமங்களிலும் இளைஞர் பறையை முழங்கித் தெரிவித்த வேதாந்த உண்மைகள், அரசனின் உள்ளத்தைக் கவர்ந்தன. அவன் மனதிற்குள்ளாகவே ஜீவன் முக்தரைப் பெரி தும் போற்றி வணங்கினான். அந்த மகான் சம்ம திப்பாரானால், அவரையும் அவர் விரும்பும் வேலைக்கே அரண்மனையில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்தபடியே அரசன் அரண் மனைக்குத் திரும்பினான்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. பறையன் அரசனைப் பார்ப்பதற்காக வந்திருந்தான். அப் போது அரசன் அவனிடம், ''இதுவரையிலும் ஊமையைப் போலவே இருந்து வந்த உன்னு டைய மகன், உண்மையிலேயே ஊமை கிடை யாது. அவர் ஒரு ஜீவன் முக்தர். அப்படிப் பட்ட மகான் ஒருவர் நமது நாட்டில் வாழ்வது நமது முன்னோர்கள் செய்த பூர்வபுண்ணியத் தின் பயன் என்றுதான் சொல்ல வேண்டும். அவர் ஒருமுறை நமது அரண்மனைக்கு வந்து போக ஒப்புக்கொண்டால் நல்லது. எனது வேண்டுகோளை அவருக்குத் தெரிவிக்கவும்'' என்று சொன்னான்.

அரசன் சொன்னபடியே, பறையன் தன் னுடைய மகனை அரண்மனைக்கு அழைத்து வந் தான்.

அரசன் மகிழ்ச்சியோடு, இளைஞரும் மகா னுமாகிய ஜீவன்முக்தரை நோக்கி, ''தேவரீ ருக்கு அரண்மனையில் எந்த வேலையை செய்ய விருப்பம் இருந்தாலும் எனக்குத் தெரிவியுங் கள். தங்களை நான் அதில் அமர்த்தி விடுகி றேன்'' என்ற வேண்டுகோளைத் தெரிவித்துக் கொண்டான்.

ஜீவன்முக்தர், ''கொடிய குற்றங்களைச் செய் பவர்களுக்கு மரண தண்டனை விதிக்கிறீர்கள் அல்லவா? அத்தகைய குற்றவாளிகளை என்

னிடம் அனுப்பி வையுங்கள். அவர்களை நானே என் கையால் வாளால் வெட்ட வேண்டும். என்னுடைய இந்த வேண்டுகோளை அரசர் பெருமான் நிறைவேற்றி வைக்கும்படி பிரார்த்தித்துக் கொள்கிறேன்'' என்று சொன்னார்.

ஜீவன்முக்தர் இப்படி ஒரு வேண்டுகோளை ஏன் கேட்கிறார் என்பது அரசருக்குப் புரியவில்லை. என்றாலும் அவர் அந்த ஜீவன்முக்தரின் வேண்டுகோளை நிறைவேற்றும்படி தமது அதிகாரிகளுக்கு ஆணையிட்டார்.

கொலைக்களத்தின் அருகே ஜீவன்முக்தர் தங்குவதற்காக ஒரு குடிசையை அமைத்தார்கள். அந்தக் குடிசைக்குப் பக்கத்திலேயே குற்றவாளிகள் இருப்பதற்காகவும் ஓர் இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. ஊமை என்று கருதப்பட்டு வந்த இளைஞன், குற்றவாளிகளை வாளால் வெட்டி மரண தண்டனையை நிறைவேற்றும் பணியை முறையாகச் செய்து வந்தான்.

சில காலம் கடந்தது.

ஒருநாள் யமதர்மராஜன், படைப்புக் கடவுளாகிய பிரம்ம தேவனின் முன்பு கவலையோடு போய் நின்றார். அவர் வருத்தத்தோடு இருக்கிறார் என்பது, அவருடைய முகத்தில் எழுதி ஒட்டியதைப் போல அவரது தோற்றம் காணப்பட்டது.

பிரம்ம தேவர், ''என்ன விஷயம், சோர்ந்து போய் இருக்கிறீர்கள்? யமதர்மராஜன் என்றால், மற்றவர்கள்தானே பயந்துபோய் சோர்வு அடைய வேண்டும்? நீங்களே சோர்ந்து போகும் அளவுக்கு, உங்களுக்கு என்ன இப்போது பெரிதாகக் கவலை வந்துவிட்டது?'' என்று கேட்டார்.

யமதர்மராஜன் கவலையில் மூழ்கியவராக, ''மண்ணுலகில் கொடிய குற்றங்கள் செய்பவர்களை, நான் நரகத்திற்கு இழுத்துச் சென்று துன்புறுத்துவதைத் தாங்கள் நன்கு அறிவீர்கள். எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள இந்தப் பணியை எவ்வளவோ காலமாகத் தர்மநெறி தவறாமல் நான் செய்து வருகிறேன். இப்போதோ நிலைமை வேறுவிதமாக இருக்கிறது. கடந்த சில மாதங்களாக எனக்கு வேலையே இல்லாமல் போய்விட்டது. அதன் காரணமாக நரகமும் கூடப் பாழடைந்து மோசமாகிக் கொண்டு வருகிறது. நரகம் வருபவர்களே இல்லை. ஆகவே எனது வேலைக்காரர்களும் ஒரு வேலையும் இல்லாமல் இருக்கிறார்கள்.

''பாவம் செய்பவர்கள் எங்கேதான் போனார்கள்? அவர்கள் பெற வேண்டிய தண்டனைகளை நாங்கள் நிறைவேற்ற வேண்டும் அல்லவா? எங்களுடைய தர்மத்தை நாங்கள் செய்யாமல் இருப்பது நியாயமாகுமா? பாவிகள் என்ன ஆகிறார்கள் என்பது எனக்குப் புரியாதப் புதிராக இருக்கிறது. இந்தக் கவலைகளால் நான் பெரிதும் வாடிப் போயிருக்கிறேன்'' என்று சொல்லி முறையிட்டார்.

பிரம்மதேவருக்கும் விஷயம் புரியவில்லை. பாவிகள் யமலோகம் வருவதில்லை என்பது அவருக்கும் ஆச்சரியத்தைத் தந்தது. அப்படியானால் பாவிகள் என்னதான் ஆகிறார்கள்?

காரணத்தை ஆராய்வதற்காகப் பிரம்ம தேவன் பூலோகத்திற்குப் புறப்பட்டு வந்தார். அரசனின் அரண்மனையில் நடப்பதைக் கூர்ந்து கவனித்தார். அரசன், கொடிய குற்றங்களைச் செய்தவர்களுக்கு மரண தண்டனை விதித்தான். வீரர்கள், குற்றவாளிகளைக் கொலைக்களத்திற்கு இழுத்துச் சென்றார்கள். அங்கே ஓர் இளைஞன் (ஜீவன் முக்தர்) குற்றவாளிகளை வாளால் வெட்டுவதையும் பிரம்மதேவர் கவனித்தார்.

ஆனால் கொலைக்களத்திலே மரண தண்டனையை, ஒரு விசித்திரமான முறையிலே இளைஞன் நடத்திக்கொண்டிருந்தான்.

கொலைக்களத்தின் எதிரிலே இரண்டு பெரிய படங்களை இளைஞன் வைத்திருந்தான். அவைகளில் ஒன்று சிவபெருமானுடையது. மற்றொன்று விஷ்ணுவினுடையது. இரண்டு படங்களுமே உள்ளத்தை ஈர்க்கும் வகையிலே தெய்வக் களை பொருந்தியவைகளாக இருந்தன. திருவுருவங்களுக்குச் சாத்தப்பட்டிருந்த மலர்மாலைகளில் இருந்து நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது. கோவில்களில் விளங்குவதைப் போலத் தீபங்களை ஏற்றியிருந்தார்கள். வாசனைத்தூபங்களைப் போட்டிருந்தார்கள். அவைகளின் நறுமணம் கொலைக்களம் முழுவதும் பரவியிருந்தது. திருவுருவப் படங்களுக்குக் கீழே, மகான்களின் வரலாறுகளையும் இந்து மத உண்மைகளைப் புகட்டும் சாஸ்திரங்களையும் கொண்ட ஓலைச்சுவடிகளை வரிசைப்படுத்தி வைத்திருந்தார்கள். மொத்தத்தில் அந்த இடம், தெய்வத்தின் விசேஷ சான்னித்தியம் பெற்ற கோவில்களில் இருப்பதைப் போலவே, புனித

மான தெய்விகச் சூழ்நிலையைப் பெற்று விளங்கியது.

பிரம்மதேவன் இவைகளை எல்லாம் கூர்ந்து கவனித்தார். அங்கே அழைத்து வரப்பட்ட குற்றவாளிகளை, இளைஞன் அங்கிருந்த இரண்டு தெய்வத் திருவுருவங்களின் முன்னால் நிறுத்தினான். அவர்களுக்குச் சிவன், விஷ்ணு ஆகிய தெய்வங்களின் மகிமைகளை அவர்களுடைய



உள்ளத்தில் ஆழ்ந்து பதியும் வகையில் உணர்ச்சி ததும்ப இனிமையாக எடுத்துச் சொல்ல ஆரம்பித்தான்.

அவன் சொன்னவைகளைக் கேட்டுக் கொண்டே தெய்வத் திருவுருவங்களில் குற்றவாளிகளின் கண்கள் லயித்தன. அவர்களின் உள்ளம் தெய்வத்தின் நினைவிலேயே தோய்ந்திருந்தது. அந்த நிலையில், இளைஞன் அவர்களின் பின்னால் நின்று வாளை ஓங்கி அவர்களுடைய கழுத்தை வெட்டினான்.

குற்றவாளிகள், தங்களுடைய தலை அடுத்த வினாடி மண்ணில் உருளப்போகிறது என்பதே தெரியாத நிலையில், தெய்வங்களின் நினைவே தங்களுடைய உள்ளங்களை முழு அளவில் ஆக்கிரமித்திருந்த நிலையில் வெட்டப்பட்டார்கள்.

இதை எல்லாம் பார்த்த பிரம்மதேவனுக்கு வியப்பு உண்டாயிற்று. அவர், மரண தண்டனையை நிறைவேற்றும் பணியில் ஈடுபட்டிருந்த வாலிபனின் முன்னால் தோன்றினார். அவனிடம், ''அப்பா, உலகத்திலே எங்குமே எந்தக் காலத்திலுமே இல்லாத வகையில், புதுமையாக நீ மரண தண்டனையை நிறைவேற்றுகிறாயே! இதற்கு என்ன காரணம்?'' என்று கேட்டார்.

அதற்குப் பதிலாக இளைஞன், தனது முந்தைய பிறவியில், அந்திம காலத்தின்போது நடந்த நிகழ்ச்சியை எடுத்துச் சொன்னான்: ''என்னுடைய காதில் 'பறைச்சேரி' என்ற வார்த்தை விழுந்தது. அப்போது உள்ளத்தில் பறைச்சேரியைப் பற்றிய நினைவு எழுந்தநிலையில், எனது ஆவி பிரிந்தது. அதன் காரணமாகப் பறையர்கள் வாழும் சேரியிலேயே நான் பிறந்தேன்.

''எனது உள்ளத்தில் அப்போது ஆக்கிரமித்த கருத்தே, என்னுடைய மறுபிறவிக்குக் காரணமாயிற்று. மேலும் 'மரண காலத்தில், என்னையே நினைத்துக்கொண்டு உடலை விடுபவன் என்னையே அடைகிறான். இதில் சந்தேகமே இல்லை' என்று கீதையிலே சாட்சாத் பகவானே அருளிச் செய்திருக்கிறார்.

''ஆகவே, இங்கு கொண்டு வரப்படும் குற்றவாளிகள், ஆண்டவனையே நினைத்துக் கொண்டு உயிரை விட்டால் ஆண்டவனையே அடைவார்கள். இந்த எண்ணத்தில்தான், குற்றவாளிகள் உயிர் பிரியும்போது, கடவுளின் நினைவுடனே இருப்பதற்குத் துணைபுரியும் வகையிலே வேண்டிய ஏற்பாடுகளை இங்கே செய்து வைத்திருக்கிறேன்'' என்று ஜீவன் முக்தராகிய இளைஞன், பிரம்மதேவனுக்குச் சொல்லி முடித்தார்.

இளைஞனின் பதில் பிரம்மதேவனுக்கும் பரிபூரண மகிழ்ச்சியைக் கொடுத்தது.

ஒவ்வொரு உயிருக்கும் கடவுளை அடைந்து அவரோடு ஒன்றுபடுவதுதான் இலட்சியம். ஆனால் பிறவிக்கடலைக் கடந்து, ஆண்டவனோடு ஐக்கியப்படுவது என்பது அவ்வளவு எளிதான காரியமே அல்ல.

ஆனால், மரண தண்டனையை நிறைவேற்றும் பணியை ஏற்றுக்கொண்ட இளைஞனே, மிகச் சுலபமாக குற்றவாளிகளும் ஆண்டவனை அடையும் வழியை வகுத்துக் கொடுத்தான்.

ஆகவே பிரம்மதேவன் இளைஞனை மனதாரப் பாராட்டி ஆசீர்வதித்தார். இளைஞனை வாழ்த்தி விட்டு நிறைந்த உள்ளத்துடன் அவர் பிரம்மலோகம் திரும்பினார்.



# உபநயனம் நடந்தபோது....

குருநானக், பரமஹம்சர் ஆகிய இரண்டு சமயப் பெரியார்களும், தமது உபநயன காலத்தின்போது 'கலாட்டா' செய்திருக்கிறார்கள். அதை இப்போது பார்க்கலாம்.

குருநானக் அப்போது ஒன்பது வயதுச் சிறிய பையன். அவருக்கு உபநயனம் நடத்த வேண்டிய பருவம் வந்தது. வீட்டிலிருந்த பெரியவர்களும் உறவினர்களும் நானக்கின் உபநயனத்திற்காக ஒருநாளை நிச்சயித்தார்கள். ஹரி தயாள் என்னும் பிராம்மண குரு ஒருவரை நானக்கிற்கு பூணூல் சடங்கை நடத்தி வைக்க ஏற்பாடு செய்தார்கள். அந்த நாளும் வந்தது. உறவினர்கள் கூடியிருக்க, எல்லா சடங்குகளும் முறையாக நடந்தேறின. பூணூல் அணிய வேண்டிய சமயத்தில், நானக் அதற்கு உடன்படவில்லை. தனக்குப் பூணூல் அணிய வந்த பிராம்மண குருவின் கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்தி விட்டார் நானக்!

காரணத்தைப் பெரியவர்கள் விசாரித்தார்கள். இந்து மதப்படி பூணூலை அணிய வேண்டியது அவசியம் என்று எடுத்துச் சொன்னார்கள். அவர்களுக்குச் சிறுவரான நானக் பதில் சொன்னார்:

''இப்போது நீங்கள் எனக்குப் போட இருக்கும் பூணூல் புத்தம்புதியதாக இருக்கிறது. ஆனால், இது இப்படியேவா எப்போதும் இருக்கப் போகிறது? பின்னால் இது அழுக்கடைந்தோ, எரிந்தோ, அறுந்தோ போகலாம். இறந்தவனின் உடலில், இந்தப் பூணூல் இருப்பதைத்தான் பார்க்கிறோமே தவிர, செத்த பிறகு இந்த நூல் அதை அணிந்திருந்தவனின் ஆத்மாவைப் பின்தொடர்ந்து செல்வதாகத் தெரியவில்லையே! செத்த பிறகு, கூட வராத இதை நான் அணியத் தயாராக இல்லை.''

நானக் சொல்லிய விளக்கத்தைக் கேட்ட சிலர் வியப்படைந்து போனார்கள். பலர் 'நானக் அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசுகிறான்' என்று சொல்லிக் கோபப்பட்டார்கள். அவர்களில் ஒருவர், 'எப்படிப்பட்ட பூணூல் உனக்கு வேண்டும்?' என்று கேட்டார்.

அப்போது நானக் சொன்ன பதிலைப் பாருங்கள்: ''கருணையே பஞ்சு, போதும் என்ற திருப்தியுள்ள மனம் நூல், பிரம்மசரியமாகிய புலனடக்கம் முடிச்சு, உண்மையே சரடு. இப்படிப்பட்ட பூணூல்தான் எனது ஆத்மாவிற்குப் பூணூலாக இருக்கத் தகுந்தது. எனக்கு அத்தகைய பூணூல்தான் வேண்டும். அது அழியாது, கிழியாது, எரியாது. அதை அணிந்தால்தான் இறைவனுடைய திருவருள் கிடைக்கும்.''

நானக் சொன்னதைப் போன்ற பூணூல் அணிந்தால், யாருமே 'வீணூலாம் பூணூல்' என்று இகழ்ச்சியோடு அடைமொழி தர முடியாதல்லவா?

சம்பிரதாயத்திற்காகப் பூணூலைப் போட்டுக் கொண்டால் மட்டுமே, ஒருவருடைய உள்ளம் உயர்ந்து விடாது. உள்ளம் உயர வேண்டுமானால், உயர்ந்த பண்புகளைக் கைக்கொள்ள ஒவ்வொருவரும் உண்மையாக முயற்சி செய்ய வேண்டும்.

ஸ்ரீராமகிருஷ்ணருக்கு உபநயனம் நடத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்கள். உபநயனம் முடிந்தபிறகு, சம்பிரதாயப்படி ஸ்ரீராமகிருஷ்ணர் தமது முதல் பிக்ஷையை ஒரு பிராம்மணருடைய வீட்டில் எடுக்க வேண்டும் என்று சொன்னார்கள்.

ஆனால், ஸ்ரீராமகிருஷ்ணர் அதற்கு இணங்கவில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணரின் தாய்க்குத் தோழி ஒருத்தியிருந்தாள். அவளுடைய பெயர் தனி. அவள் தனது குழந்தையை நேசிப்பதைப் போலவே தாயன்பை ஸ்ரீராமகிருஷ்ணரிடமும் கொண்டிருந்தாள். அவளுடைய தூய்மையான அன்பை ஸ்ரீராமகிருஷ்ணரும் அறிவார். 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்?'

ஸ்ரீராமகிருஷ்ணர், உபநயனம் முடிந்தபிறகு தன்னிடம் முதல் பிக்ஷையை ஏற்க வேண்டும் என்று விரும்பினாள் தனி. அவளுடைய விருப்பத்தை நிறைவேற்றத்தான், பிராம்மண வீட்டில் முதல் பிக்ஷையை ஏற்க மறுத்தார் ஸ்ரீராமகிருஷ்ணர்.

அவரது கருத்தை அறிந்த சுற்றத்தார்கள் பலமாக அதை ஆட்சேபித்தார்கள். காரசாரமாக விவாதம் செய்தார்கள்.

காரணம், தனி, கீழ்க்குலத்தில் பிறந்த ஒரு கம்மாளப்பெண்.

ஸ்ரீராமகிருஷ்ணரோ தமது கருத்தை மாற்றிக் கொள்பவராக இல்லை. முடிவில் ஊருக்குப் பெரியவர் ஒருவர் இந்த விவகாரத்தில் தலையிட்டு, ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்துப்படி நடக்கட்டும் என்று தீர்ப்பு வழங்கினார்.

ஸ்ரீராமகிருஷ்ணரும் தமது முதல் பிக்ஷையை தனியிடமே ஏற்றார்.

அந்தக் காலத்தில், வைதிக ஆசாரம் மிகுந்திருந்த நாளில் பரமஹம்சர் செய்தது புரட்சி அல்லவா?

சிறிய வயதில் உயர்ந்த பண்புக்காகவும் தூய அன்புக்காகவும், சிறிய புரட்சிகளைச் செய்த நானக்கும் ஸ்ரீராமகிருஷ்ணரும், பெரியவர்களான பிறகு உலக நன்மைக்காகப் பெரிய ஆன்மிகப் புரட்சிகளையே தோற்றுவித்தார்கள். ஏராளமானவர்களுக்குக் கடவுளை அடையும் பாதையைக் காட்டினார்கள்.

—சத்தியகாமன்





# அமாவாசை நிலவு!

கவிஞர் கண்ணதாசன்

1

மனைவியோ டிருந்தார்; ஆனல்
மஞ்சத்தை நினைத்தா ரில்லை
வினைபல புரிந்தார்; ஆயின்
விளைபலன் கேட்டாரில்லை
நனையவர் வென்று ராங்கே
தரணியின் மனத்தை வென்ரூர்
இனையவர் புவியில் இல்லை;
இவர் பெயர் பரமஹம்சர்!

2

காலடி முனிவன் தந்த
கருத்தினைப் பன் னூருக்கி
நால்வகை வேதச் சொல்லை
நானூறு தொகையாய் மாற்றி
பாலிலே வெண்ணை பார்த்து(ப்)
பரிமாறி வைத்த தேவர்
நூலிலே மலையைச் சாய்த்த
நுவலரும் பரம ஹம்சர்!

3

உவமைக்கோ அவரே ஈடு
உண்மைக்கோ அவரே சாட்சி
தவ மெய்க்கோ அவரே காட்சி
தத்துவம் அவர் பேராட்சி
சிவம் ஒருபுறத்தில் வைத்து
திரு மாலோரிடத்தே வைத்து
அவர் நடுநின்ற பின்தான்
அத்வைதம் செழித்த தென்பேன்!

4

குழந்தைக்கும் கதைகள் சொல்வார்
கோதைக்கும் நீதி வைப்பார்
கிழவர்க்கும் ஞானம் காட்டி
கீதைக்கும் உரைகள் செய்வார்
விழுந்தோர்க்குக் கைகள் நீட்ட
வியத்தகும் அமைப்புக் கண்டார்
தொழுந்தோறும் நினைத் தற்கான
தூய பேர் பரமஹம்சர்!

5

ஆயிரம் ஆண்டி லோர்நாள்
அவ தரிப்பார்கள் அந்த
தூயவர் தொடரில் வந்த
துல்லிய மனத்தின் இந்து
தாயவன் நம் வேதாந்த
சமயத்து மக்கட் கெல்லாம்!
**வாயவன் பேரைச் சொன்னல்**
**மறுமையில் நரகம் இல்லை!**

சமீபத்தில் மயிலாப்பூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் சார்பாக 'ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்ன கதைகள்' என்னும் நூல் வெளியாகியது. அந்த நூலை ஆழ்ந்த கவனத்துடன் ஒரே நாளில் படித்து முடித்த கவிஞர், அன்றைய தினமே விஜயம் சிறப்பு மலருக்கு எழுதித் தந்த கவிதை இது.





# நம்பிக்கையும் வலிமையும்

சுவாமி விவேகானந்தர்

1

யார் ஒருவருக்குத் தன்னிடத்தில் நம்பிக்கையில்லையோ அவனே நாத்திகன். பண்டைய மதங்கள் கடவுள் நம்பிக்கையில்லாதவனைத் தான் நாத்திகன் என்று குறிப்பிட்டன. புதிய மதம் தன்னம்பிக்கை இல்லாதவனே நாத்திகன் என்று சொல்கிறது.

2

தன்னம்பிக்கை கொண்டிருந்த ஒரு சிலருடைய வரலாறே உலக சரித்திரமாகும். அத்தகைய நம்பிக்கை உள்ளே இருக்கும் தெய்விகத்தை வெளியே வரவழைக்கிறது. நீ எதையும் சாதிக்கமுடியும். அளவு கடந்த ஆற்றலை வெளிப்படுத்தப் போதுமான அளவிற்கு உண்மையாக நீ முயற்சி செய்யாதபோதுதான் தோல்வி அடைகிறாய். ஒரு மனிதனோ, ஒரு நாடோ தன்னம்பிக்கை இழந்தவுடனேயே அழிவு வருகிறது.

3

நம்பிக்கை, நம்பிக்கை, நம்மிடத்தில் நம்பிக்கை; நம்பிக்கை, கடவுளிடத்தில் நம்பிக்கை – இதுவே மகிமை பெறுவதின் இரகசியமாகும். உங்கள் முப்பத்து மூன்றுகோடிப் புராண தெய்வங்களிடத்தும், மேலும் அவ்வப்போது உங்களிடையே அன்னிய நாட்டவர் புகுத்தியிருக்கும் இதர தெய்வங்களிடத்தும் உங்களுக்கு நம்பிக்கை இருந்து, ஆனாலும் உங்களிடத்தே உமக்கு நம்பிக்கை இல்லாவிட்டால் உங்களுக்குக் கதிமோட்சமில்லை.

4

ஆன்மாவால் சாதிக்க இயலாத காரியம் என்று எதுவும் இருப்பதாக ஒருபோதும் நினைக்காதே. அப்படி நினைப்பது சமயத்திற்கு மிகப் பெரிய முரண்பட்ட கருத்தாகும். பாவம் என்பதொன்று உண்டென்றால், அது, 'நான் பலவீனமானவன், மற்றவர்கள் பலவீனமானவர்கள்' என்று சொல்வதொன்றுதான் பாவம்.

5

நீ எதை நினைக்கிறாயோ, அதுவே நீ ஆகிறாய். நீ உன்னைப் பலவீனன் என்று நினைத்தால், பலவீனனாகவே நீ ஆகிவிடுவாய். நீ உன்னை வலிமையுடையவன் என்று நினைத்தால், வலிமை படைத்தவனாகவே நீ ஆகிவிடுவாய்.

6

சுதந்திரமானவனாக இரு. எவரிடமிருந்தும் எதையும் எதிர்பார்க்காதே. நான் உறுதியாகச் சொல்வேன்—உனது கடந்த கால வாழ்க்கையை நீ பின்னோக்கித் திரும்பிப் பார்ப்பாயானால், நீ வீணாக எப்போதும் மற்றவர்களிடமிருந்து உதவியைப்பெற முயற்சி செய்ததையும், அப்படி எதுவும் வராமல் போனதையும் தான் காண்பாய். வந்த உதவிகள் எல்லாம் உனக்குள்ளிருந்து வந்தவைகளாகத்தான் இருக்கும்.

7

'இல்லை' என்று ஒருபோதும் சொல்லாதே. 'என்னால் இயலாது' என்று ஒருநாளும் சொல்லாதே. ஏனெனில் நீ வரம்பில்லா வலிமை பெற்றவன். உன்னுடைய உண்மை இயல்போடு ஒப்பிடும்போது, காலமும் இடமும்கூட உனக்கு ஒரு பொருட்டல்ல. நீ எதையும் எல்லாவற்றையும் சாதிக்கக்கூடியவன். சர்வ வல்லமை படைத்தவன் நீ.

8

நீங்கள் கடவுளின் குழந்தைகள். அழியாத பேரின்பத்தின் பங்குதாரர்கள். புனிதமும் பூர

ணத்துவமும் பெற்றவர்கள். மண்ணுலகின் தெய்வங்களே, நீங்களா பாவிகள்! அப்படி மனிதனை அழைப்பதுதான் பாவம். அது மனித இயல்பிற்கே கற்பிக்கப்படும் ஒரு பழிச் சொல்லாகும். ஓ! சிங்கங்களே, எழுந்து வாருங்கள். நீங்கள் செம்மறி ஆடுகள் என்ற மயக்கத்தை உதறித் தள்ளுங்கள். நீங்கள் அமரத்துவம் பெற்ற ஆன்மாக்கள். சுதந்திர ஆன்மாக்கள். அழியாத திருவருளைப் பெற்றவர்கள்.

9

போராட்டங்களையும் தவறுகளையும் பொருட்படுத்தாதே. பசு ஒன்று பொய் பேசியதாக நான் எந்தக்காலத்திலும் கேள்விப்பட்டதில்லை. ஆனால் அது பசுவே தவிர ஒருபோதும் மனிதனாகி விடாது. எனவே இந்தத் தோல்விகளையும் இத்தகைய ஒழுக்கக்கேடுகளையும் ஒருபோதும் பொருட்படுத்தாதே. ஓராயிரம் முறை நீ உனது இலட்சியத்தைக் கைக்கொள். ஆயிரம் முறை நீ தோல்வியுற்றாலும், மீண்டும் ஒரு முறை கைக்கொள்ள முயற்சி செய்.

10

பலவீனத்திற்கான பரிகாரம், ஓயாது பலவீனத்தைக் குறித்துச் சிந்திப்பதல்ல. மாறாக வலிமையைக் குறித்துச் சிந்திப்பதுதான். மக்களுக்கு, ஏற்கனவே அவர்களுக்குள் இருந்துவரும் வலிமையைப் பற்றிப் போதிப்பாயாக!

11

உபநிஷதங்களிலிருந்து வெடிகுண்டைப் போலக் கிளம்பி, அறியாமைக் குவியல்களின் மீது வெடிகுண்டைப் போன்று வெடிக்கும் சொல் ஒன்றை நீ காண்பாயானால், அந்தச் சொல் அஞ்சாமை என்பதுதான்.

12

நீ கவனித்துப் பார்த்தால், உபநிஷதங்களைத் தவிர வேறு எதையும் ஒருபோதும் நான் மேற்கோளாக எடுத்துச் சொன்னதில்லை என்பது புலப்படும். மேலும் உபநிஷதங்களின் 'வலிமை' என்னும் அந்த ஒரே ஒரு கருத்தைத்தான் நான் எடுத்தாண்டிருக்கிறேன். வேத வேதாந்தங்களின் சாரமெல்லாம் அந்த ஒரு சொல்லிலேதான் அடங்கி இருக்கின்றன.

13

எனது இளம் நண்பர்களே, வலிமை உடையவர்களாக இருங்கள். இதுவே நான் உங்களுக்கு வழங்கும் அறிவுரை. கீதை படிப்பதைவிடக் கால்பந்தின்மூலம் நீங்கள் சொர்க்கத்திற்கு அருகில் இருப்பீர்கள். இவை தைரியமான வார்த்தைகள். ஆனால், உங்களை நேசிக்கின்ற காரணத்தால், இவைகளை நான் சொல்ல வேண்டியவனாக இருக்கிறேன். செருப்பு எங்கே கடிக்கிறது என்பதை நான் அறிவேன். ஒரு சிறிது அனுபவமும் பெற்றிருக்கிறேன். உங்கள் தோள்கள், தசைகளின் சற்றுக் கூடுதலான வலிமையால், கீதையை இன்னமும் சற்றுத் தெளிவாகப் புரிந்து கொள்வீர்கள்.

14

ஒவ்வொரு மனிதன் முன்பும் இந்த ஒரு கேள்வியை நான் வைக்கிறேன்....நீ வலிமையுடையவனாக இருக்கிறாயா? நீ வலிமையை உணர்கிறாயா? ஏனென்றால் உண்மை ஒன்றுதான் வலிமை தருகிறது என்பதை நான் உணர்ந்திருக்கிறேன்....உலகத்தின் நோய்க்கு வலிமை ஒன்றுதான் சரியான மருந்து.

15

மிகப்பெரிய உண்மை இது. வலிமைதான் வாழ்வு; பலவீனமே மரணம். வலிமையே மகிழ்ச்சிகரமான வாழ்க்கை, நிரந்தரமான வளவாழ்வு, அமரத்துவம் ஆகும். பலவீனம் இடையறாத சித்திரவதையாகவும் துன்பமாகவும் அமைகிறது. பலவீனம் மரணம்தான்!

16

வெற்றி பெறுவதற்கு நிறைந்த விடாமுயற்சியையும் பெரும் மன உறுதியையும் நீங்கள் கொண்டிருக்க வேண்டும். விடாமுயற்சி பெற்றவன், 'சமுத்திரத்தையே குடித்துவிடுவேன்,' 'எனது சங்கல்பத்தால் மலைகள் நொறுங்கி விழுந்தாக வேண்டும்' என்று சொல்கிறான். அத்தகைய ஆற்றலை, அத்தகைய மன உறுதியை நீ பெற்றிரு. கடுமையாக உழை. உனது குறிக்கோளை நீ அடைவாய்.

17

மனிதர்கள், மனிதர்களே வேண்டும். மற்றவைகள் அனைத்தும் தயாராக வந்து சேரும். ஆனால் வலிமைமிக்க, சுறுசுறுப்பான, சிரத்தை பொருந்திய இளைஞர்கள்; உண்மையில் பிடிப்புக்கொண்ட இளைஞர்களே தேவை. அத்தகைய ஒரு நூறு இளைஞர்களால் இந்த உலகமே புரட்சிகரமான மாறுதலைப் பெற்றுவிடும்.

## 18

இந்த நாட்டில் பேரிகைகள் செய்யப்படுவதில்லையா? தாரைகளும் தப்பட்டைப் பறைகளும் இந்தியாவில் கிடைக்காமலா போய்விட்டன? இத்தகைய கருவிகளின் பெரு முழக்கத்தை, நமது குழந்தைகளைக் கேட்கச் செய். பெண்களாக்கும் மென்மைமிக்க இசைகளைக் குழந்தைப் பருவமுதலே கேட்டுக்கேட்டு, இந்த நாடே கிட்டத்தட்ட பெண்கள் நிறைந்த சமுதாயமாக மாற்றப்பட்டிருக்கிறது.

## 19

அறியாமை மிக்க, உயிரற்ற புல்பூண்டு வாழ்க்கையைக் காட்டிலும் மரணமே மேலானது. தோல்வியைத் தழுவி உயிர் வாழ்வதை விடப் போர்க்களத்தில் மாய்வதே மேல்.

## 20

**வா**, வந்து ஏதாகிலும் வீரச்செயலைச் செய். சகோதரர்களே, நீங்கள் முக்தி அடையாமல் போனால்தான் என்ன? மேலும் ஒரு சில தடவைகள் நரகத் துன்பத்தை நீங்கள் மேற்கொண்டால்தான் என்ன? 'சிந்தை, சொல், செயல்களால் நிறைந்த புனிதம் ததும்பும் சில ஞானிகள், முழு உலகையும் தங்களின் எண்ணற்ற பயன்மிக்க பணிகளால் மகிழ்விக்கிறார்கள். மற்றவர்களிடமுள்ள அணு அளவு குணநலனையும் அவர்கள் பெரும் மலைபோன்று விரியச் செய்து தங்கள் இதயத்தை மலரச் செய்கிறார்கள்' — இந்த அறிவுரை பொய்த்து விடுமா?

## 21

ஒவ்வொருவனும் தனது அதிகபட்ச ஆற்றலை மிச்சமீதமின்றிச் செலுத்தி உழைக்காவிட்டால், எதையேனும் செய்து சாதிக்க முடியுமா? 'உழைப்பே வடிவெடுத்த, சிங்கத்தின் இதயம் படைத்த ஆண்மகனையே திருமகள் நாடிச் செல்கிறாள்.' பின்னால் திரும்பிப் பார்க்கத் தேவையில்லை. முன்னேக்கிச் செல். அளவற்ற ஆற்றல், பெரும் ஊக்கம், அளவு கடந்த அஞ்சாமை, அளவில்லாத பொறுமை—இவைகளே நமக்குத் தேவை. இவைகள் இருந்தால் மட்டுமே, மகத்தான காரியங்களை நம்மால் சாதிக்க முடியும்.

## 22

நம்பிக்கை இழந்துவிடாதே. பாதை, கத்தி முனையில் நடப்பதைப் போல மிகக் கடினமானதுதான். எனினும் எழுந்திரு, விழித்துக் கொள். மனம் தளராதே. நீ அடைய வேண்டிய உனது இலட்சியமாகிய குறிக்கோளைக் கண்டுபிடி.

## 23

சகோதரா, நீ அழுவதேன்? மரணமோ நோயோ உனக்கில்லை. நீ அழுவதேன் சகோதரா? துன்பமோ துரதிஷ்டமோ உனக்குக் கிடையாது. சகோதரா, நீ ஏன் அழ வேண்டும்? மாற்றமோ மரணமோ உனக்கு விதிக்கப்படவில்லை. நீ ஆனந்தமயமானவன்...நீ உனது ஆன்மாவில் நிலைத்திரு.

## 24

மக்கள் என்னவேண்டுமானாலும் சொல்லட்டும். நீ உனது சொந்த உறுதியான முடிவில் பிடிப்புடன் இரு. பிறகு நிச்சயமாக மற்றவைகள் நடந்தேறி உலகம் உனது காலடியில் பணிந்து கிடக்கும்.

'இவனை நம்பு அல்லது அவனை நம்பு' என்று மற்றவர்கள் சொல்கிறார்கள். ஆனால் நான் சொல்கிறேன், 'முதலில் உன்னிடத்திலேயே நீ நம்பிக்கை வை.' அதுதான் வழி. உன்னிடத்தில் நீ நம்பிக்கை வை—எல்லா ஆற்றல்களும் உனக்குள்ளேயே இருக்கின்றன. அதை உணர்ந்து நீ, அந்த ஆற்றலை வெளிப்படுத்து. 'நான் எதையும் சாதிக்க வல்லவன்' என்று சொல். நீ உறுதியுடன் விஷத்தைப் பொருட்படுத்தாதிருந்தால், பாம்பின் விஷம் கூடச் சக்தியற்றதாகிவிடும்.

## 25

ஒரு சமயம் நான் காசியிலிருந்தபோது, ஒரு பாதை வழியாகச் சென்று கொண்டிருந்தேன். அந்தப் பாதையின் ஒருபுறம் நீர் நிறைந்த ஒரு பெரிய குளமும், மறுபுறம் உயர்ந்த சுவரும் எழுப்பப்பட்டிருந்தன. அந்த இடத்தில் பல குரங்குகள் இருந்தன.

காசியைச் சேர்ந்த குரங்குகள் மிகவும் பொல்லாதவைகள். சில சமயங்களில் முரட்டுத்தனமாக நடந்துகொள்ளக் கூடியவைகள். அவைகள், தங்கள் பாதையில் என்னைச் செல்ல விடக்கூடாது என்று நினைத்தன போலும்! எனவே நான் செல்லச் செல்ல அவை கிரீச்சிட்டுப் பெரும் சப்தமிட்டபடி என் கால்களைப் பற்றின. அவைகள் நெருங்க நெருங்க நான்

ஓட ஆரம்பித்தேன். ஆனால் நான் ஓட ஓட அவைகளும் பின்தொடர்ந்து ஓடிவந்து என்னைக் கடித்தன. அந்தக் குரங்குகளிடமிருந்து தப்பவே வழியில்லை என்று எனக்குப்பட்டது. ஆனால் அப்போது முன்பின் அறிமுகமில்லாத ஒருவரை வழியில் சந்தித்தேன். அவர் என்னை நோக்கி, 'குரங்குகளை எதிர்த்து நில்' என்று கூவினார். நான் திரும்பிக் குரங்குகளை எதிர்த்து நின்றேன். அவைகள் பின்வாங்கி முடிவில் ஓடியே மறைந்தன. இதுவே வாழ்க்கை முழுவதற்கும் படிப்பினையாகும். பயங்கரத்தை எதிர்த்து நில். அஞ்சாமல் அதை எதிர்த்து நில்.

**26**

எழுந்து நின்று போராடு. ஒரு அடியும் பின் வாங்கக் கூடாது. கருத்து அதுதான். எது வந்தாலும் போராடி முடி. தமது நிலைகளிலிருந்து நட்சத்திரங்கள் பிறழட்டும். முழு உலகமும் நமக்கெதிராக எழுந்து எதிர்த்து நிற்கட்டும். மரணம் என்றால் வேறு உடை மாற்றுவது தான். அதனால் என்ன போயிற்று? இப்படிப் போராடு. கோழையாவதால் நீ எந்த ஒரு பயனையும் பெறமாட்டாய். ஓர் அடி பின் வாங்குவதால் எந்த ஒரு துரதிஷ்டத்தையும் நீ தவிர்த்துவிட முடியாது...உலகிலுள்ள அத்தனை கடவுள்களையும் நீ கூவியழைத்துப் பார்த்தாகி விட்டது. துன்பம் அதனால் ஒய்ந்து விட்டதா? நீ வெற்றி பெற்றபோது கடவுள்கள் உனக்கு உதவ வந்தார்கள். அதனால் என்ன பயன்? போராடி முடி. நீ எல்லையற்றவன், மரணமற்றவன், பிறப்பற்றவன். எல்லையற்ற ஆத்மாவாதலால், நீ அடிமையாக இருப்பது உனக்குப் பொருந்தாது. எழுந்திரு! விழித்துக் கொள்! எழுந்து நின்று போராடு!



## இவர்தான் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்



வேதாந்த உண்மைகளைக் கண்டறிந்தவர் மட்டுமல்ல; அந்த உண்மைக்கு அழைத்துச் செல்லும் பாதைகள் எல்லாவற்றின் மூலமும் யாத்திரை செய்தவர். பிரம்ம சாட்சாத்காரம் என்ற கங்கைப் பெருக்கில் நீராடியவர் மட்டுமல்ல; அந்நதியின் உற்பத்தி ஸ்தானம் முதல் முகத்துவாரம் வரையிலுள்ள எல்லாத் துறைகளிலும் மூழ்கி நதியின் ஆழப்பகுதிகள் யாவற்றையும் கண்டவர். பூஜித்து தெய்வத்தை வழிபட்டவர் மட்டுமல்ல; எண்ணற்றவர்களால் தெய்வமாக பூஜித்து வழிபடப்படுபவரும்கூட. யோகி மட்டுமல்ல; யோகேஸ்வரர். ஞானி மட்டுமல்ல; விஞ்ஞானி. பிறவிக் கடலைத் தாண்டியவர் மட்டுமல்ல; பிறரையும் தாண்டுவிக்கவல்ல பெருந் தோணி. ஜீவன் முக்தர் மட்டுமல்ல; அவதாரப் புருஷர். துறவி மட்டுமல்ல; பரமஹம்சர். மதாசாரியர் மட்டுமல்ல; எல்லா மதங்களும் ஒன்று கூடுகின்ற சங்கம க்ஷேத்திரம். நடமாடும் கோயிலாக மண்ணுலகில் வாழ்ந்த ஆன்மிகப் பேழை — **இவர்தான் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.**

**—ஒரு பக்தர்**



# விவேகானந்த வெள்ளம்

நா. பார்த்தசாரதி
ஆசிரியர் : 'தீபம்'

1

விவேகானந்த வெள்ளமெனும் ஆன்மீகப்
பெரும்பெருக்கு விரிந்திடுங்கால்
தவருத சத்தியத்தின் வித்தூன்றிச்
சன்மார்க்கப் பயிர்வளர்த்து
உவகை யென்னும் பேரின்ப
உலகத்தைப் படைத்துயர்த்திக்
கவலேயிலா மானிடத்தின் கண்ணியத்தைக்
காத்திடலாம் போற்றிடலாம்.

2

அறிவுடனே ஆன்மீகம் பொதுப்பணிகள்
அயராத மெய்யுணர்வு
செறிவான தெய்வீகம் திருக்கொள்கை
சேர்ந்தோரைக் காத்தளித்தல்
முறையான நன்னெறிகள் முழுதுணர்தல்
மூத்தோரை மதித்திடுதல்
அறமான பலதுறைக்கும் அடிப்படையே
அறிவானந்தர் தரும்போதம்.

3

அறிவானந்தப் பெரியோர் செந்நெறியில்
அகிலமெலாம் தழைத்திடுக
முறியாத தவநெறிகள் முகிழ்த்திடுக
முற்ருன அருள்வழியும்
பெரியோர் நல்லுரையும் புதுவாழ்வும்
பொலிந்திடுக பொலிந்திடுக
அரியோர் கொண்டாடும் செம்மைவழி
அகிலமெலாம் செழித்திடுக.



## இவர்தான் சுவாமி விவேகானந்தர்

பாருலகைக் குலுக்கிய பாரதத் துறவி — துறவிகளிலும் தனக்கு நிகர் தானேயான அரசியல் துறவி — பாரதமணித் திருநாடே தான் என உருவகித்து வாழ்ந்த பரிபூரண தேச பக்தத் துறவி — நவீன இந்தியாவின் ஞாஞசிரியர் — பாரதிய ஆன்மிக ஞானமும் மேற்கத்திய விஞ்ஞானமும் சேர்மானம் பிசகாது கலந்து உறவாடி ஒளிவிட்ட கூட்டு மேதை — 'எம்மதமும் சம்மதம்' என்ற பொதுநெறிப் பெரியார் — ஏழை எளிய மனித ராசிகளுக்காகக் காலம் முழுவதும் இதய இரத்தம் பெருக்கிய கருணைக் கடல் — தீர்க்கதரிசிகளில் தீர்க்கதரிசி — பெரு நாவலர்களில் பெரு நாவலர் — துவராடையில் திகழ்ந்த புரட்சிவேள் — பேச்சில், நடையில், பார்வையில் வீராதி வீரர்; காட்டுத்தீ, கர்ஜிக்கும் சிங்கம்; கர்மத்தில் அகர்மத்தைக் கண்டவர் — இவர்தான் சுவாமி விவேகானந்தர்.

—அமரர் பா. ஜீவானந்தம்

# நீ எங்கே?

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

சிவபெருமானுடைய திருக்கோலங்கள் பல. அவற்றில் 25 முக்கியமானவை. அருவமாக இருக்கும் இறைவன், உயிர்க்கூட்டங்களில் தவம் செய்து பக்குவப்பட்டவர்களுக்கு உருவமாக எழுந்தருளிக் காட்சியளித்தான். வெவ்வேறு அன்பர்களுக்கு வெவ்வேறு கோலம் காட்டி அருள் புரிந்தான். முதலில் அருவுருவத் திருமேனியாக, ஜோதிலிங்கமாகத் தோன்றினன். பிரமனும், திருமாலும் முடியையும் அடியையும் தேட இயலாமல் திகைக்க வைத்த கோலம் அது என்று புராணம் கூறும்.

பிரமன் கலைமகள் நாயகன்; படைப்பாற்றல் உடையவன். அவன் கற்றவர்களின் பிரதிநிதி. திருமால் திருமகளின் நாயகன்; பாதுகாக்கும் ஆற்றலுடைய ரக்ஷணகர்த்தா. அவர் செல்வர்களின் பிரதிநிதி. கல்வியினுலும், செல்வத்தினுலும் மெய்ப்பொருளைக் காண இயலாது என்ற உண்மையையே அடிமுடி தேடிய கதை சொல்கிறது. பிரமன் இழிந்தவன், திருமால் குறைந்தவர் என்பதற்காக இந்தக் கதை எழவில்லை. யாராக இருந்தாலும் கல்வியாற்றலாலும் செல்வச் சிறப்பாலும் உண்மைப்பொருளைத் தெரிந்து கொள்ள முடியாது என்பதை, அவர்களும் சிவபெருமானும் சேர்ந்து ஒரு நாடகம் ஆடிக் காட்டினுர்கள் என்று கொண்டால் சமரச, உணர்வுக்கு ஏற்ற விளக்கமாக இருக்கும்.

சைவ புராணங்களில், இப்படி மற்றத் தேவர்களெல்லாம் அடிபணியச் சிவபெருமான் எல்லாருக்கும் மேலான பரம்பொருளாய் விளங்குகிறுன் என்ற கருத்தைத் தெரிவிக்கும் கதைகள் வரும். விஷ்ணு புராணங்களில் சிவபெருமான் திருமாலினுடைய அருளுக்காக ஏங்குவதும், அவர் அருளைப் பெற்று ஓங்குவதுமாகிய கதைகள் வரும். இருவகைப் புராணங்களையும் இயற்றினவர் ஒரே ஆசிரியர். வேதத்தை வகுத்தமைத்த வியாச முனிவரே பதினென்புராணங்களையும் இயற்றியிருக்கிறுர். அவரவர் மனப் போக்கிற்கு ஏற்ப, எந்த மூர்த்தியிடத்தில், மனம் பதிகிறதோ அந்த மூர்த்தியே எல்லா மூர்த்திகளையும் விட உயர்ந்தவர் என்ற எண்ணத்தோடு உபாசிப்பது பக்தர்கள் இயல்பு. ஆனுல் மற்ற மூர்த்திகளை வழிபடுகிறவர்களைத் தாழ்வாக எண்ணக்கூடாது. இராமபிரானுடைய மனைவி சீதை; இராவணனுடைய மனைவி மண்டோதரி. இராமனுக்கும் இராவணனுக்கும் உள்ள இயல்புகள் மாறுபட்டன. ஆனுல் சீதையும் மண்டோதரியும் சிறந்த கற்பரசிகளாகப் போற்றப்படுகிறவர்கள். சிவனடியார்களும் திருமாலடியார்களும் வேறுவேறு மூர்த்திகளை வழிபடுகிறவர்களானுலும், அவர்கள் உண்மையான பக்தர்களானுல் அவர்கள் போற்றற்குரியவர்களே!

சிவ விஷ்ணு பேதத்தை மாற்றும் வகையில் பெரியோர்கள் பாடியுள்ள பாடல்களும், கதைகளும் பல உண்டு. சிவபெருமானுடைய வடிவங்களுள் கேசவார்த்தர் என்பது ஒன்று. சங்கரநாராயணர் என்றும் அந்த மூர்த்தியைச் சொல்வர். அந்தக் கோலத்தில் ஒரு பாதி மாலும், ஒரு பாதி சிவபெருமானும் இணைந்த தோற்றம் இருக்கும். அது சைவ வைஷ்ணவ சமரசத்தைக் காட்டும் கோலம். சங்கரநயினுர் கோயிலில் சங்கரநாராயணமூர்த்தியின் சந்நிதி இருக்கிறது. மற்ற ஆலயங்களில் அங்கங்கே சிற்ப வடிவங்களில் அந்த மூர்த்தியைக் காணலாம். ஹரிஹர பேதம் இல்லாமல் வழிபடுவதற்கு ஏற்ற கோலம் அது.

இப்படியே சக்திக்கும் சிவத்துக்கும் வேறுபாடு இல்லை என்று காட்டுவது அர்த்தநாரீசுவரத் திருக்கோலம். மாதிருக்கும் பாதியனுகச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் மூர்த்தம் அது. திருச்செங்கோட்டில் அந்த மூர்த்தி எழுந்தருளியிருக்கிறுர். வேறு கோயில்களிலும் அந்த மூர்த்தியைச் சில இடங்களில் காணலாம். திருமால் வேறு, சிவன் வேறு என்று வேறுபடுத்தாத சமரச உணர்ச்சியை வளர்க்கச் சங்கரநாராயணர் திருக்கோலமும், சிவன் வேறு, சக்தி வேறு என்று பேதபுத்தி பண்ணுமல் இருக்க உமையொரு பாதி வடிவமும் உள்ளன.

இந்த இரண்டு திருக்கோலங்களையும் எண்ணி, இறைவனிடம் உள்ள நெருக்கத்தினுல், கேட்கிறுர் காரைக்கால் அம்மையார். இறைவனிடம் பக்தி முறுகமுறுக அவனுேடு சுதந்தர

மாக உரையாடும் உரிமை உண்டாகி விடுகிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாக்கில் அத்தகைய இடங்கள் பல உண்டு. மற்றவர்கள் பாடல்களில் ஒவ்வோரிடத்தில் இருக்கும். காரைக்காலம்மையார் திருப்பாடல்களில் அவ்வாறு வரும் பாடல்களை முன்பும் பார்த்தோம்; பின்பும் பார்க்கப் போகிறோம். இப்போது ஒரு பாட்டைப் பார்க்கலாம்.

இறைவனை நோக்கிச் சொல்கிறார், அம்மையார்: 'எம்பெருமானே, உன்னை என்னால் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரு பாதி, நீலநிறம் படைத்த திருமால் இருக்கிறார். ஒரு பாதி, அதே நிறம் படைத்த உமாதேவியார் இருக்கிறார். இரண்டு பக்கத்திலும் உன்னுடைய உருவத்தைக் காண முடியவில்லை. நின் நிறம் பவளம் போன்ற செந்நிறம். நான் பார்க்கிறதோ எல்லாம் நீல நிறம். உன்னுடைய திருவுருவத்துக்குரிய நிறத்தை என்னால் காண முடியவில்லையே! முழுவதும் அம்பிகையின் திருவுருவந்தான் என்றும் இனம் கண்டு கொள்ள முடியவில்லை. இந்தக் கோலத்தை அணுகிப் பார்த்தாலும் உன்னுடைய உருவமும் தெரியவில்லை; அம்பிகையின் முழு உருவமும் தெரியவில்லை. இந்த வடிவம் எத்தகையதென்று சொல்வது?'

உலகத்தை அளந்தவன் திருமால். அவன் உன் திருவுருவத்தில் ஒரு பாதியில் இருக்கிறான் என்கிறார்கள்.

**ஒருபால் உலகு அளந்த மாலவனும்.**

வேறு பலர், உன் ஒரு பாதியில் உமாதேவியார் எழுந்தருளியிருக்கிறார் என்கிறார்கள்.

**ஒருபால் உமையவளாம்.**

அப்படியானால் உன்னை எப்படி அடையாளம் கண்டு கொள்வது? மின்னலைப் போன்று காட்சி தரும் உமாதேவியாரின் முழு வடிவத்தையும் எப்படித் தரிசிப்பது? உன்னைக் காண வேண்டும் என்று எண்ணி, உன்னை நேர்பட்டுத் தரிசித்துக் கொள்ளலாம் என்றால், இரண்டு பக்கத்திலும் நின்னுருவமாக எங்களுக்கு நிறம் தெரிவதில்லை. நின் உரு அடியோடு தெரிவதில்லை; மின்னனைய பெருமாட்டியின் உருவமும் முழுமையாகத் தெரிவதில்லை.

**இருபாலும்**
**நின்உருவம் ஆக நிறம்தெரிய மாட்டோமால்,**
**நின் உருவோ, மின்னுருவோ நேர்ந்து.**

இந்தத் தடுமாற்றத்தைத் தருகிறது அவர்கள் சொல்லும் கோல வருணனைகள்.

**ஒருபால் உலகு அளந்த மாலவனும்; மற்றை**
**ஒருபால் உமையவளாம்; என்றால்-இருபாலும்**
**நின் உருவம் ஆக நிறம்தெரிய மாட்டோமால்,**
**நின் உருவோ மின் உருவோ நேர்ந்து.**

[இறைவனே, உன்னுடைய ஒரு பாகத்தில் இருப்பவன் உலகத்தைத் தன் திருவடியால் அளந்த திருமாலாம்; மற்ற ஒரு பாகத்தில் இருப்பவள் உமையவளாம்; இவ்வாறு சொன்னால் அடியேங்கள் இரண்டு பக்கத்திலும் நின் திருவுருவமாக இதுதான் நிறம் என்று தெரிந்து கொள்ளும் ஆற்றல் இல்லோம்; இன்னும் அணுகிப் பார்த்து நின் உருவமோ அல்லது மின்னலைப் போன்ற உமையவளின் உருவமோ என்றும் அறிய மாட்டோம்.

[நிறம் தெரியமாட்டோமால் என்பதைப் பின்னும் கூட்டி, 'நேர்ந்து நின் உருவோ, மின் உருவோ, நிறம் தெரிய மாட்டோமால்' என்று பொருள் கொள்க. அன்றி, நின் உருவோ, மின்உருவோ என்பதை நேர்பட்டுச் சொல்வாயாக என்று ஒரு சொல் வருவித்து முடிப்பதும் ஆம். நேர்ந்து — நேர்பட்டு.].

''ஒரு பாதிமால்கொள ஒரு பாதியை உமையாள் கொள மற்றிரு பாதியிலும் இறந்தான் புராகி'' என்று ஒரு பழைய பாட்டு உண்டு.

திருமாலும் உமையவளும் இடப் பாகத்தையே மேற்கொண்டிருப்பதாகக் கூறுவர். ஆனாலும், இங்கே வேடிக்கையாகச் சொல்லப் புகுந்தவராதலின் இன்ன பாகம் என்று சொல்லாமல், 'அவர் ஒரு பாதி, இவள் ஒரு பாதியானால், நீ எங்கே இருக்கிறாய்?' என்று கேட்பது போலப் பாடினார்.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 41—ஆவது பாடல்.



**நா**ளைக்குப் போவோம் கோயிலுக்கு, நாளைக்குப் போவோம் கோயிலுக்கு என்று தினம் தினம் எண்ணி நாளைக் கழிப்பது கூடாது.

—வடலூர் வள்ளலார்

# இயேசுவுக்கு அஞ்சலி

சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம்

இயேசு பாலஸ்தீன் நாட்டில், கலிலேயா என்னும் பிரதேசத்தில் நாசரேத்து என்னும் சிற்றூரில், இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு பிறந்தார். பிறப்பால், யூதர்; மதத்தால், இன்றுள்ள கிறித்தவ மதத்தினரின் போதகர்! ஆயினும், அவர் போதித்த கொள்கைகள் மனித குலமனைத்துக்கும் பொதுவானவை.

இயேசு, ஏழைகளின் நண்பர், பணச் செருக்கின் பகைவர்; அடிமைத்தனத்தின் எதிரி. சுதந்திர உணர்வின் போஷகர்; மனித குலம் முழுவதையும் ஏன், உயிர்க்குலம் அனைத்தையுமே காக்க வந்த காவலர்!

சுருங்கச் சொன்னால் மனித குலத்தில் வாழையடி, வாழையெனத் தோன்றிய ஞானியரிலே, போதகர்களிலே, தெய்வத் தூதர்களிலே, இயேசு ஒருவர்! கிறித்தவரால் துதிக்கப்படும் இயேசு பெருமான், பிற மதத்தவரால் மதிக்கத்தக்க பெருமையுடையவராவார்.

இந்து மதம் புராதனமானது. அதனால் பின் தோன்றிய ஏனைய மதங்களை சமரச உணர்வுடன் நோக்கும் பெருமையைப் பெற்றிருக்கின்றது. சமீப நூற்றாண்டுகளில் தோன்றிய இந்து ஞானியரிலே பலர் இயேசுவைப் போற்றினர். சமீப காலத்தில் இராமகிருஷ்ண பரமஹம்சர், கிறித்தவராகவும் வாழ்ந்து, கர்த்தரை வழிபட்டு உண்மை இந்துவுக்குரிய சமரச மனோபாவத்தைத் தலைசிறந்த முறையில் வெளிப்படுத்தியிருக்கிறார்.

காந்தியடிகள் மாதா கோயிலுக்கே சென்று, கிறித்தவரோடு கிறித்தவராகக் கலந்து 'ஜபம்' செய்தார் எனச் செய்தியுண்டு. ''அருட்சோதியே வழிகாட்டிடு'' என்னும் கிறித்தவப் பாடல் அடிகளாரின் உள்ளம் கவர்ந்த ஒன்றாகும். இயேசுவின் மலைப் பிரசங்கம், காந்தியடிகள் போற்றிய பொன்னுரையாகும்.

இராமலிங்க வள்ளலார் தாம் பாடியுள்ள ''அருட்பா''வில் ''அனுபவமாலை''யுள் ''பெருகிய பேரருளுடையார்'' என்னும் பாடலில், தாம் வழிபடும் ஏக தெய்வத்தின் பெயர் கூறுமிடத்து, ''பிற்சமயத்தார் பெயரும் அவர் பெயரே கண்டாய்'' என்னும் வரியில் 'கர்த்தர்' என்பது அம்பலவாணருக்குரிய பல பெயர்களுள் ஒன்று என்கிறார்.

மகாகவி பாரதியார், ''இயேசு'' பெருமானை ஓர் மாபெரும் தத்துவமாகவே வருணித்தார்.

கிறித்தவ மதம் இந்தியாவில் புகுந்த ஆரம்பகாலத்தில் இந்தியர் — குறிப்பாக, இந்துக்கள் பெற்ற அனுபவத்தை உரைகல்லாகக் கொண்டு கிறிஸ்து பெருமானை மதிப்பிடக் கூடாது. மதவாதிகளின் போக்கு வேறு; மதக்குரவர்களின் போதனை வேறு. இது, இயேசு மதத்தாருக்கேயன்றி, எல்லா மதத்தாருக்கும் பொதுவானதே.

கிறித்தவ மதத்தின் வருகையால், இந்து மதம் புனர் வாழ்வு பெற்றது; தன் தவறுகளை—தன் மக்களுக்கே ஆயிரமாயிரமாண்டுகளாகத் தான் இழைத்து வந்த தீமைகளை உணர இந்து மதத்திற்குச் சிறந்த வாய்ப்பு ஏற்பட்டது. இதனை மறப்பதோ, மறைப்பதோ அறிவுடைமையாகா.

வள்ளுவப் பெருந்தகை, ''யான் எனது என்னுஞ் செருக்கறுப்பான், வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்'' என்று பாடினார். இதன் பொருள், ''உடற்பற்று, உடைமைப் பற்றுக்களை விட்டவர்களே பேரின்ப வீடு பெறுவர்'' என்பதாம். இதன் மறைபொருள், ''செல்வந்தன், உடல்பற்றையும் உடைமைப் பற்றையும் எளிதில் துறக்கமாட்டானாதலால், அவன் பேரின்ப வீட்டைப் பெறமாட்டான்'' என்பதாகும்.

இதையே ''மக்களிலே செல்வமுடையோர் ஈசனுலகில் புகுதல் மிகவும் அரிது. ஊசித் துளையில் ஒட்டகை நுழைவதைக் காட்டிலும், செல்வந்தன் மோட்சத்துக்குள் நுழைவது கடி

னம்'' என்னும் வாசகத்தில் வற்புறுத்தினர் இயேசு.

ஞானியர்கள், அவர்கள் பிறந்த நாட்டால், காலத்தால், பின்பற்றிய மதத்தால் வேறுபட்டவர்களாக இருப்பினும், உலகனைத்துக்கும் — உயிர்க்குலமனைத்துக்கும் உரியவர்களாகவே வாழ்ந்திருக்கின்றனர். அவர்களுடைய போதனைகள் — பொன்மொழிகள் எக்காலத்துக்கும் எல்லா மக்களுக்கும் பொதுவானவையாகவே உள்ளன. இந்த உண்மைக்கு இயேசுவின் போதனைகளும் சாதனைகளும் விலக்கன்று.

இயேசு, ஏழை பணக்காரன் என்ற வேற்றுமையை வெறுத்தார். மனிதர்களைச் சம நோக்கில் பாவித்தார். பாவிகளிடத்தும் கருணை காட்டும் பண்பினைப் போதித்தார். அவரது போதனை உலகினரால் சரிவரப் பின்பற்றப்படவில்லை. கிறித்தவரும் இந்தக் குறைக்கு விலக்கானவரல்லர்.

ஏழை — பணக்காரர் என்னும் வர்க்க வேற்றுமையை இயேசு வெறுத்தார் என்பதனை மிகத்தெளிவாக உணர்ந்தவர் காந்தியடிகளே ஆவர்.



# பரமார்த்தப் பிரசங்கம்

சுவாமி விரஜானந்தர்

261. பன்னிரண்டு ஆண்டு காலம் அகண்ட பிரம்மசரியத்தையும் சத்திய விரதத்தையும் கடைப்பிடித்து வந்தால் வாக்கு சித்தி ஏற்படு



சுவாமி விரஜானந்தர்

கிறது. அகண்டம் என்றால் தொடர்ந்து ஒரே ரீதியான, வழுவுதலும் குன்றுதலும் இல்லாத (முழு அளவிலான) பிரம்மசரியம் ஆகும். வாக்கு சித்தி என்பது சொல்லின் நிறைவைக் குறிக்கும். மேலே சொன்ன வாக்கு சித்தியுடன் தெய்விக சக்தியும் மலரும். இந்த நிலையை அடைந்தவர்களின் சொல் ஒருபோதும் பொய்க்காது. யாருக்கு அவர் எதைச் சொன்னாலும் அது பலித்தே தீரும். சாபச்சொல்லாக இருந்தாலும் சரி, ஆசிர்வாத மொழியாக இருந்தாலும் சரி, அது பலித்தே தீரும். யாருக்கு அவர் மங்களத்தை விரும்புகிறாரோ அவர்களுக்கு மங்களமே விளையும். அவருடைய பரிசுத்த உள்ளத்தில் எந்த சங்கல்பம் எழுகிறதோ அது நிறைவேறியே தீரும்.

262. பகவானை அடைய விரும்புபவர்கள் எந்த நிலையிலும் சத்தியத்தைக் கைவிடவே கூடாது. சத்தியத்தைப்புறக்கணிப்பதைக் காட்டிலும், அவசியமானால், ஆயிரம் துன்பங்களையும், கஷ்டங்களையும் அனுபவிப்பதே மேலானது. பகவான் சத்திய சொரூபி. ஆகவே யார் ஒருவன் துன்பங்களையும், கஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டாவது சத்தியத்தைக் காப்பாற்றுகிறானோ, அதற்கான இடையூறுகளை மகிழ்ச்சியுடன் ஏற்கிறானோ, அவனே பகவானைப் பெறுவான். சத்தியத்தை இழப்பது பகவானையே இழப்பதாகும்.

சத்தியத்தின் சக்தி என்றைக்கும் வீணுவதில்லை. தந்தையின் சொல்லைக் காப்பாற்றுவதற்காக ராமபிரான் காடு சென்றார். பஞ்ச பாண்டவர்கள் சத்தியத்தின் பொருட்டுத் திரௌபதியுடன் வனவாசத்தை ஏற்றனர். சத்தியத்திற்காக ஹரிச்சந்திரர் தனது செல்வம் முழுவதையும் இழந்து பிச்சைக்காரர் ஆனார்.

உயிரையும் தியாகம் செய்தாயினும் சத்தியத்தைத் தவறாமல் கடைப்பிடிக்கும் சிறந்த உதாரணங்கள் புராணங்களில் நூற்றுக்கணக்கில் இருக்கின்றன. ஸ்ரீராமகிருஷ்ணர் மிக உயர்ந்த அனுபூதி நிலையைப் பெற்றபிறகு காளிதேவிக்கு எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்தார். ஞானம், அஞ்ஞானம், சுத்தம், அசுத்தம், நலம், கேடு, பாபம், புண்ணியம் எல்லாவற்றையும் அளித்துவிட்டு, இந்த இரட்டைகளை எல்லாம் பெற்றுக்கொண்டு தனக்கு தூய பக்தியையே தரும்படி வேண்டினார். ஆனால் 'தாயே, இதோ உனது சத்தியம், இதோ உனது அசத்தியம்' என்று சொல்ல அவரால் முடியவில்லை. 'சத்தியத்தை நான் விட்டுவிட்டால் பிறகு எதைப் பற்றிக்கொண்டு நான் இருப்பேன்!' என்று அவர் கூறினார்.

263. காலம் வாயு வேகத்தில் பறந்து கொண்டிருக்கிறது. கணம்தோறும் ஆயுள் தேய்ந்தபடி உள்ளது. மரணம் என்பது வாழ்க்கையின் மற்றொரு பெயராகும். இந்த உடல் எப்போது கழன்று விழும் என்பதை நாம் அறியோம். மரணத்தின் அழைப்பைப் பெறுவதற்கு நாம் எப்போதும் தயாராக இருக்க வேண்டும். காலத்தை வீணாக்கவே கூடாது. அவசியம் செய்தாக வேண்டிய கடமை எதையும் நாளைக்கு என்று ஒத்திப்போடக் கூடாது. இந்தக்கணம் முதற்கொண்டே, பரலோக நன்மைக்காக எதையாவது கொஞ்சம் சேமித்து வைப்பதற்கு நாம் முயற்சி செய்ய வேண்டும். சொத்தும் பணமும் இந்த உலக வாழ்க்கைக்கு மட்டுமே பயன்படக்கூடியனவாகும். மரணத்திற்குப் பிறகு அவைகள் நம்முடன் வரப்போவதில்லை. சாதனையும் பிரார்த்தனையுமே பரலோகத்திற்குப் பயன்படக்கூடிய பொருளாகும். அவைகளே உண்மையில் நமக்குச் சொந்தமான சொத்தும் சுதந்திரமும் ஆகும். அவைகளை மட்டுமே நாம் நம்முடன் கூட எடுத்துச் செல்ல முடியும். இந்த சொத்தும் சுதந்திரமும் எவ்வளவு குறைவாக இருந்தாலும் அதில் எந்த அம்சமும் வீணாகாது. அந்தக் குறைந்த அளவின் உதவியைக் கொண்டு நாம் செல்ல வேண்டிய லட்சியப்பாதையில், அந்த அளவுக்கு முன்னேறுவது நிச்சயம்.

264. இந்தப் பிறவியில் ஆத்ம சாதனை செய்து என்ன சேமிக்கிறோமோ அதைக்கொண்டு மறுபிறவியில் மீண்டும் தொடங்குவோம். அதாவது இந்தப் பிறவியில் எந்த கட்டத்தில் நம்முடைய சாதனை நின்று விட்டதோ, சரியாக அதே கட்டத்தில் இருந்து மீண்டும் ஆரம்பித்துச் சாதனை செய்து வெகு விரைவில் நம்முடைய இலட்சியத்தை நோக்கி முன்னேறுவோம்.

இந்த காரணத்தால்தான் ஒரு சிலர் பகவத் பக்தியைக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். ஒரு சிறிது சாதனை செய்தாலே அவர்களுடைய மனம் ஒருமுனைப் பட்டு விடுகிறது, சூட்சுமமான உண்மையின் அனுபூதி அவர்களுக்குள்ளே பிரகாசமாகிறது. உள்ளே இருக்கும் அக்கினியை வெளியே கொண்டுவருவதற்கு ஒரு தூண்டுதல் மட்டுமே அவர்களுக்குத் தேவைப்படுகிறது. இந்த தூண்டுதல்தான் தீட்சை அதாவது சற்குரு தருகிற மந்திரோபதேசம் எனப்படுவது. இத்தகைய ஜீவர்களை ஸ்ரீராமகிருஷ்ணர் உலர்ந்த விறகு என்று குறிப்பிடுவார். கொஞ்சம் ஊதினாலே அந்த விறகு சுவாலைவிட்டு எரியும். மற்றவர்களை அவர் ஈர விறகு, பச்சை மரக் கட்டை என்று அழைத்தார். அந்த மரக் கட்டை எளிதில் தீப்பற்றி எரியாது. அவர்கள் பொருட்டு குருவானவர் மிகவும் சிரமப்பட வேண்டியிருக்கும். குரு ஊது, ஊது என்று எவ்வளவோ ஊதலாம். ஆனாலும் அவர்கள் கனிந்து எரிவதற்கும், செயல்படுவதற்குமான எந்தவித அடையாளமும் காட்டுவதே இல்லை. இந்த ஜீவர்கள் தாங்களாகவே முயற்சி செய்தாலும், நீண்டகாலம் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டி வரும். அவர்கள் மேலான அனுபூதியைப் பெறுவதற்குள் பல பிறவிகள் கழிய வேண்டி வரலாம்.



# உழைப்பே உயர்வு தரும்

பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

நபிகள் நாயகம் உழைப்பை எவ்வளவு தூரம் போற்றியிருக்கிருர் என்பதைச் சுவை பட விளக்குகிறது இந்தச் சிறிய கட்டுரை.

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய் வோம். வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்" என்று மகாகவி பாரதி பாடினுர். உழைக்க மறுக்கும் ஒரு நாடோ, ஒரு தனி மனிதனே எந்தக் காலத்திலும் சிறப் பைப் பெற முடியாது.

உழைக்க மறுப்பவர்கள் தங்களுக்கும் பூமிக் கும் பாரமாகவே வாழ்கிருர்கள்.

உழைக்க விரும்புபவனிடம் எல்லாச் செல்வங் களும் தாமாக நாடிவரும். உழைக்க மறுத்து சோம்பித் திரிபவர்கள், தங்களிடம் உள்ளவை களையும் இழந்து விடுவார்கள். 'குந்தித்தின்ருல் குன்றும் கரையும்' என்பது உண்மைதானே.

உழைப்பில் ஆர்வம் கொள்ளாமல் இருப்பது தமோகுணமாகும். இத்தகைய தமோகுணத் தின் பிடியிலிருந்து இந்தியா விடுபடவேண்டும் என்பதற்காகவே, சுவாமி விவேகானந்தர் தற் கால மக்களுக்குக் கர்மயோகத்தை வலியுறுத் திக் கூறியுள்ளார் என்று சொல்லலாம்.

ஆக்கபூர்வமான பணிகள் எதிலாவது ஈடு பட்டுக் கொண்டே இருப்பது நல்லது. இல்லா விட்டால் விரும்பத்தகாத தீய எண்ணங்கள் உள்ளத்தில் தோன்றி வாழ்வையே குலைத்து விடும். 'சோம்பல் கொண்டவனின் உள்ளம் சாத்தானின் தொழிற்சாலை' என்ற கருத்துப் பட மேலைநாட்டில் ஒரு பழமொழி வழங்கி வருகிறது. 'ஒரு சோம்பேறியின் மனது அவ னையே சாப்பிட்டு விடுகிறது' என்று லூதர் குறிப்பிட்டிருக்கிருர்.

சோம்பலை யார்தாம் தூற்ற மாட்டார்கள்? உழைப்பை யார்தாம் பாராட்ட மாட்டார்கள்?

இஸ்லாம் சமய ஸ்தாபகரான நபிகள் நாய கம் மிகச் சிறந்த உழைப்பாளி. தமது சொந்த வேலைகளைத் தாமே கவனித்துக் கொள்வார். பிறரைத் தமக்காக வேலை செய்ய அனுமதிக்க மாட்டார். வீட்டு வேலைகளைக் குடும்பத்தின ருக்கு உதவியாக இருந்து தாமும் செய்வார். ஆட்டுப்பாலைக் கறப்பது, வீட்டைப் பெருக்கி சுத்தம் செய்வது, ஒட்டகங்களுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுவது, துணி துவைப் பது, செருப்பைத் தைப்பது, பழுது பார்ப்பது ஆகியவைகளை நபிகள் தாமே வீட்டில் செய்து வந்திருக்கிருர்.

குடும்பத்தினருக்காக நபிகள் தாமே துணி களைத் தைத்துத் தருவதும் உண்டு. துணிகள் கிழிந்துவிட்டாலும் அதைத் தாமே தைத்துப் பழுது பார்த்துப் பயன்படுத்துவார்.

ஒரு சமயம் நபிகள் நாயகத்திற்கு வீதி சட்டை தேவைப்பட்டது. நபிகள் கடை ஒரு சென்று ஒரு சட்டையை வாங்கினுர். கடைக் காரர் சட்டையை ஒரு பொட்டலமாகக் கட்டிக் கொடுத்தார். நபிகள் பொட்டலத்தைப் பெற்றுக்கொண்டு புறப்பட ஆயத்தமானுர்.

அப்போது நபிகள் பெருமானின் பெருமை யை அறிந்த ஒருவர், நபிகள் நாயகத்தின் வீடு வரை பொட்டலத்தைத் தாமே எடுத்து வந்து தருவதற்காக, அதைத் தூக்க முனைந்தார். ஆனுல் நபிகள் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. பொட்டலத்தைத் தூக்க முனைந்தவரிடம் அவர், "ஒரு பொருளை அந்தப் பொருளுக்கு உரியவர் தூக்கிச்செல்வதுதான் நியாயமானது. எனக்காக ஒருபொருளை மற்றவர்களைத் தூக்கி வர அனுமதிப்பது, அவர்களைத் தாழ்மைப் படுத்துவதாகவே ஆகும்" என்று கூறிவிட்டுத் தாமே பொட்டலத்தை எடுத்துச் சென்ருர்.

மற்ருெருமுறை, நபிகள் நாயகம் அவர்க ளிடம் பிச்சைக்காரன் ஒருவன் வந்து பிச்சை கேட்டான். நபிகள் அவனை மேலும் கீழுமாகச் சற்று நேரம் உற்றுப் பார்த்தார். பிச்சை கேட்டு வந்து நின்றவன் நல்ல உடல் உறுதி பெற்றவனுக இருந்தான். அப்படிப்பட்ட ஒரு வன் உழைக்க விரும்பாமல் பிச்சையெடுத்துப் பிழைப்பதை நபிகள் விரும்பவில்லை.

ஆகவே நபிகள் அவனைப் பார்த்து, "காட் டுக்குச் சென்று விறகு சேர்த்து வந்து, அதை விற்று நீ வாழ்க்கையை நடத்து. மற்றவர் களிடம் கையேந்தி நின்று பிச்சையெடுத்துப் பிழைப்பதைவிட, விறகு சேகரிப்பதன் மூலம்

வரும் ஊதியத்தைக் கொண்டு வாழ்க்கையை நடத்துவது கண்ணியமானது'' என்று சொன்னார். இந்த நிகழ்ச்சி 'வீணில் உண்டு களித்திருப்போரை' நபிகள் நிந்திக்கத் தவறியதில்லை என்பதைக் காட்டுகிறது.

நபிகள் வாழ்க்கையில் நடைபெற்ற மற்றொரு நிகழ்ச்சி, 'எவ்வளவு தூரம் உழைப்பை அவர் மனதாரப் போற்றிப் பாராட்டுபவராக இருந்திருக்கிறார் என்பதை விளக்குகிறது. அந்த நிகழ்ச்சி வருமாறு:—

ஒருசமயம் நபிகள் பள்ளிவாசலில் உட்கார்ந்து நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அப்போது அவரைப் பார்ப்பதற்காக அரேபியர் ஒருவர் வந்தார். வந்த அன்பரை நபிகள் அன்புடன் வரவேற்று உபசரித்தார்.

இருவரும் சற்றுநேரம் உரையாடினார்கள். பின்பு அரேபியர் விடைபெற்றுச் செல்வதற்காக எழுந்தார். அப்போது விடை கொடுத்து அனுப்புவதற்காக, அரேபியரின் கையைப் பிடித்து நபிகள் நாயகம் ஆசிர்வாதம் செய்தார். அந்தத் தருணத்தில் அரேபியரின் கைகள் கரடுமுரடாக இருப்பதை நபிகள் கவனித்து, ''நண்பரே, தங்களுடைய கைகள் இப்படிச் சொரசொரப்பாக இருக்கிறதே, இதற்கு என்ன காரணம்?'' என்று வினவினார்.

அதற்குப் பதிலாக அரேபியர், ''உடல் உழைக்க வருந்தி வேலை செய்து நான் வாழ்ந்து வருகிறேன். உழைக்கும் கரங்களாதலால் எனது கைகள் கரடுமுரடாக இருக்கின்றன'' என்று சொன்னார்.

அரேபியர் அப்படிச் சொல்லி முடித்த உடனே, நபிகள் அரேபியரின் கைகளைப் பற்றி, அவைகளைப் பயபக்தியுடன் தமது இரு கண்களிலும் ஒற்றிக் கொண்டார்.

அப்போது நபிகள் நாயகத்தின் நண்பர்கள் சற்று தூரத்தில் இருந்தார்கள். ஆகவே அவர்களுக்கு, நபிகள் ஏன் அரேபியரின் கைகளைப் பிடித்துத் தமது கண்களில் ஒற்றிக்கொண்டார் என்பது புரியவில்லை. அரேபியர் விடை பெற்றுச் சென்றபிறகு நண்பர்கள், நபிகளிடம் அவருடைய செய்கைக்கான காரணத்தை விசாரித்தார்கள். அதற்கு நபிகள் இதய நெகிழ்ச்சியுடன், ''அந்தக் கைகள் சாதாரண கைகள் அல்ல. உழைத்து உழைத்துக் கரடுமுரடாகிக் காய்த்துப்போயுள்ள உத்தமமான கைகளாகும். ஆகவேதான் அந்தப் புனிதமான கைகளை எனது கண்களில் எடுத்து ஒற்றிக் கொண்டேன்'' என்று பதில் சொன்னார்.

உழைப்பை நபிகள் நாயகம் எவ்வளவுதூரம் போற்றியிருக்கிறார் என்பதை இந்தச் சிறிய நிகழ்ச்சி விளக்குகிறதல்லவா?



எண்ணிறந்த ஜீவன்களையும் முடிவற்ற கல்யாண குணங்களையும் உடையவனான பகவானுடைய திருவடிகளை — அடைந்தாரை நழுவவிடாத திருவடிகளை —அடையுங்கள். —**நம்மாழ்வார்.**

எந்த தர்மம் நன்கு அனுஷ்டிக்கப்பட்டதாயினும், பகவத் கதைகளில் மக்களுக்கு ஆசை உண்டாக்காமல் போகிறதோ அது வீண் சிரமமாகும். —**பாகவதம் 1, 2, 8.**

எங்கு சத்யம், எங்கு தர்மம், எங்கு இலஜ்ஜை, எங்கு நேர்மை உள்ளதோ, அங்கே கோவிந்தன் எந்த உயிரையும் காப்பாற்றுபவன் இருக்கிறான். எங்கு கிருஷ்ணன் உள்ளானோ அங்கு ஜெயம் உண்டு. —**மகாபாரதம்: உத்யோக பர்வம்.**

மலர்களில் மணம் போலவும், எள்ளில் எண்ணெய் போலவும், விறகில் தீயைப் போலவும் பாலில் நெய் போலவும், கரும்பில் இனிமை போலவும் உடலில் ஆன்மாவை ஞானிகள் உணர்ந்து கொள்ள வேண்டும். —**இந்து மதம்.**

நம்முடைய மடமையை என்னவென்று சொல்வது! கொஞ்ச நேரம் பக்தி செலுத்திவிட்டு, போதும் என்று விட்டுவிடுகிறோம். பெரிய வெள்ளமாக வருகிறது, பகவானுடைய கருணை. நம்முடைய அறியாமையால் அதை நாம் அணை கட்டித் தடுத்து விடுகிறோம். அந்த அணைத்தடையை உடைத்தெறிந்தோமானால் ஆண்டவனுடைய கருணையானது பிரவாகமாகப் பெருகும். கருணைப் பிரவாகத்திற்கு வழியடைக்கிறோம். இனி அப்படிச் செய்யாமல் அருள் வெள்ளத்தில் குடைந்து குளிப்போமாக. இனி நாம் தூங்கலாகாது. முன் சென்று அவன் அருளை பெறுவிட்டால் நாம் கெட்டுப்போவோம். ஏறும் மலையிலிருந்து கீழே விழுந்து அழிந்து போவோம். —**கிறிஸ்துவத் துறவி லாரன்ஸ்.**

# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

தமிழாக்கம்: 'அண்ணு' சுப்ரமண்யம்

ஆத்ம சாதனம் என்பது நம்முடைய குற்றங் குறைகளை அறிந்து அவைகளை நீக்க முயல்வதாகும். பிறருடைய நல்ல குணங்களை கவனித்து அவைகளைக் கூடியவரை கைக்கொள்வதற்குப் பழக்கப்படுத்தி வந்தால், நீங்கள் நிச்சயமாகப் பரிபூரணத்வத்தை அடைவீர்கள். இந்தப் பிறவியில் பரிபூரணத்வத்தை அடையாமல் போனல், ஆயிரம் பிறவிகளிலும் நீங்கள் அதை அடைவீர்களா என்பது சந்தேகம். இந்தப் பிறவியிலேயே அடைந்தாக வேண்டும் என்ற திடமான சங்கல்பத்தைச் செய்து கொள்ளுங்கள். அப்போது மதிமயக்கம் அழிந்து போகும். அஞ்ஞான இருள் விலகிப்போகும்.

நீங்கள் அனைவரும் ஆண்டவன் அருளால் உள்ளத்திலும் உணர்விலும் ஒற்றுமை உடையவர்களாக இருக்கவேண்டும். ஒற்றுமையும் சமரசமும் இருந்தே தீர வேண்டும். வேறு வழி இல்லை. அனைவரும் ஆண்டவனுக்குச் சொந்தமானவர்களே என்பதை அறிய வேண்டும். எல்லோரும் நல்லவர்களே. அற்ப அகங்காரம் தான் தீயது. அதை ஒழித்துவிட்டால் நீங்கள் எல்லாத் தளைகளில் இருந்தும் விடுதலை அடைவீர்கள்.

எந்த பக்தர்கள் தங்கள் வீடுகளை ஆசிரமங்களைப்போல் ஆக்கி விடுகிறுர்களோ, அவர்கள் ஆண்டவனுடைய அருளுக்குப் பாத்திரமாவார்கள். சாதுக்களின் வரவாலும் அடியார்களின் சேவையாலும் அந்த வீடுகள் புனிதத் தன்மையை அடைகின்றன. ''பகவானும் பக்தனும் பாகவதமும் ஒன்றே'' என்பது ஸ்ரீராமகிருஷ்ணருடைய சிறந்த உபதேசம். மனித உடலில், இறைவனுடைய லீலையைக் காண்பது பெரும் பாக்கியம்.

பிறருக்கு வழிகாட்டி அழைத்துச் செல்வது மிகவும் கடினம். உங்களிடம் ஆண்டவன் அளித்த விசேஷ சக்தி இல்லாவிட்டால் அதில் நீங்கள் வெற்றியடைய மாட்டீர்கள்; அகங்காரமும் கர்வமும் உங்களை ஆட்கொண்டு விடும். வழிகாட்டியாயிருப்பதின் இரகசியம் என்ன வென்றுல், ''நான்'' என்ற அற்பத்தை மறந்து "நீ" என்ற பெரியதைப் பிடித்துக்கொள்வதே ஆகும். ''ஆண்டவனே! நான் அல்லேன். நீ தான் அனைத்தையும் செய்பவன்.'' ''கடவுள்



சுவாமி பிரேமானந்தர்

தான் உண்மை; மற்றவைகள் அனைத்தும் வெறும் தோற்றம்.'' இந்த உண்மையை உங்கள் உள்ளத்தில் ஆழமாகப் பதிய வைத்துக் கொள்ளுங்கள்.

உங்களுக்கு உள்ளேயும் வெளியேயும் அன்பு ஒன்றே நிறைந்திருக்கட்டும். ஸ்ரீராமகிருஷ்ணருடைய அன்பிற்கு நான் அடிமையானவன்; அன்பால் அவர் அனைவரையும் தமது அடியார்களாக்கிக் கொண்டார். அவர் உள்ளும் புறமும் அன்புமயமானவர். அவர் வைதாலும் அது அன்பினுல் தூண்டப் பட்டதாகவே இருக்கும்.

''நான் அல்லன், நான் அல்லன்; நீயே எல்லாம்''. கடவுளே அனைத்தும். அப்போது, யாரைக் குறை கூற முடியும்? அவரே எல்லாம், தோற்றத்தில்தான் வேறுபாடு.

மடத்தில் திங்கு ஏதாவது காணப்பட்டால் சுவாமி விவேகானந்தர் என்னைக் குறைகூறுவது வழக்கம்; மிகவும் கடிந்து பேசுவார். ஆனுல் அதற்குப் பின்னணியில் அளவு கடந்த அன்பு நிறைந்திருக்கும். அப்போதெல்லாம், 'என்னை ஏன் குறை கூறவேண்டும்? நான் என்ன தவறு செய்தேன்?' என்று நான் நினைத்ததுண்டு.

பிறகு அவருடைய நோக்கத்தை அறிந்து கொள்வேன். ''நான்'' என்பதுதான் எல்லாத் தீமைக்கும் வேர். தீய ''நான்'' அழிய வேண்டும். இல்லாவிட்டால் சீர்திருத்தம் இல்லை, விடுதலை இல்லை.

ஸ்ரீராமகிருஷ்ணருடைய நாமத்தை நம்பியவர்கள் உலகை இயக்கும் வல்லமை உடையவர்கள் ஆவார்கள். அவரிடம் உங்களை ஒப்படைத்து விடுங்கள்.

ஆசிரமத்தில் ஏதாவது தவறு நிகழ்ந்தால், அது நம்முடைய குற்றம் என்று நினைக்க வேண்டும். எல்லாக்குற்றங்களும் தலைவரையே சாரும் என்று சுவாமி விவேகானந்தர் கூறுவார். உங்கள் குற்றங்குறைகளை நீக்க முயற்சி செய்யுங்கள். அவைகள் நீங்க வேண்டும் என்று ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கண்ணீர்விட்டுப் பிரார்த்தனை செய்யுங்கள். வேறு வழியில்லை. ஏதாவது தவறு நிகழ்ந்து ஆசிரமவாசிகளிடம் அமைதியின்மை ஏற்பட்டால், அது உன்னுடைய குற்றம் என்று எண்ணிக்கொள்ள வேண்டும். 'நான் எதற்காக சன்னியாச விரதங்களை எடுத்துக்கொண்டேன்?' என்று சிந்தித்துப் பார். உலகப் பித்து நீங்கி, உன் மனதில் தெய்வப்பித்து குடிகொள்ளட்டும். ஆண்டவனருளால் ஆத்மஞானம் உனக்கு உதிக்கட்டும்.

எல்லாமனிதர்களையும் நேசித்து எல்லோரையும் உனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளுவதே உண்மையான ஞானம். அதுவே இக்காலத்திற்குப் பொருத்தமான பக்தி. முழுமனதுடன் பணியாற்றிச் சேவை செய்தால் உனக்கு, பக்தி மோட்சம், ஞானம், விஞ்ஞானம் எல்லாம் கைகூடும். உன்னை தெய்விக சக்தி இயக்குவிக்கிறது என்று உணர வேண்டும். எதற்கும் பயப்பட வேண்டியதில்லை. இறைவனுடைய பெரிய துணை நமக்கு இருக்கிறது. அவரே நமது செல்வம். ஸ்ரீராமகிருஷ்ணருடைய எண்ணங்கள் நன்முகப் பரவி வருகின்றன. அவைகள் உலகம் முழுதும் பரவட்டும். ஆனந்தமும் அமைதியும் பெருக்கெடுத்து எல்லா இடங்களையும் நிரப்பட்டும்.

உலகனைத்திற்கும் நன்மையை நாடுவதை விட வேறு எண்ணம் நமது உள்ளத்தில் இல்லை. ஆனால் நம்முடைய எண்ணம் மட்டும் முழுப் பயனை அளிப்பதாகமாட்டாது. ஸ்ரீராமகிருஷ்ணர் அவருடைய வேலையைச் செய்கிறார்; நாம் அவருடைய கையில் உள்ள கருவிகள் மட்டுமே ஆவோம். எங்கெங்கு ஸ்ரீராமகிருஷ்ணருடைய சக்தியால் நல்ல பணி செய்யப்படுகிறதோ, அங்கெல்லாம் அவருடைய திருவருளும் ஒளியும் நமக்கு அளிக்கப்படும்.

உங்கள் உடல் நலனைக் கவனித்துக்கொண்டு, எண்ணத்தாலும் பேச்சாலும் செயலாலும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் சுவாமி விவேகானந்தருக்கும் விருப்பமான பணிகளைச் செய்து வாருங்கள். மகராஜ் (சுவாமி பிரம்மானந்தர்) கூறுகிறார்: ''ஏழை எளியவர்களையே இறைவனுகக் கருதி நீங்கள் செய்யும் சேவையால், நீங்கள் பல ஆண்டுகள் செய்த தவப்பயனை எய்திவிட்டீர்கள். நீங்கள் பாக்கியசாலிகள்.''

உலகை ஆட்சி செய்யும் கடவுளின் திருவருள் இல்லாவிட்டால், மனிதர்களின் தேவைகள் ஒருபொழுதும் அறச்செயல்களாலேயே பூர்த்தியாகிவிட மாட்டா. கஷ்டங்களிலும், துன்பங்களிலும்கூட இறைவனுடைய லீலையைப் பார்க்க வேண்டும். அவர்தான் தர்மகர்த்தா. மனிதன் பூமியிலுள்ள பொம்மைகளுடன் விளையாடி மயங்கியிருப்பவன். காமத்தாலும் பேராசையாலும் உண்மையை மறந்து, அவன் பெயருக்கும் புகழுக்கும் கௌரவத்துக்கும் ஆசைப்படுகிறான்.

பலருடைய நன்மைக்காகவே கருணைநிதியான கடவுள் பஞ்சத்தையும் பெருவாரியான நோயையும் இந்த உலக யுத்தத்தையும் (முதல் உலக மகாயுத்தம்) கொண்டு வந்திருக்கிறார் என்று நான் கருதுகிறேன். பார்த்துப் படித்துக் கொள்ளுங்கள்.

பஞ்சத்தில் வாடும் மக்களுக்கு இரண்டொரு கைப்பிடி அரிசி வழங்குவதற்காக மட்டும், ஸ்ரீராமகிருஷ்ணர் உங்களை அனுப்பி வைக்கவில்லை. ஆனால் அந்தப் பணியின் மூலம், நீங்கள் உங்கள் தெய்விகத் தன்மையையும் உதார குணத்தையும் வெளிப்படுத்த வேண்டும் என்பது அவருடைய திருவுள்ளக் கருத்து.

உயர்ந்ததாக மனதையும் பரந்ததாக உள்ளத்தையும் ஆக்குவதற்குக் கற்றுக் கொள்ளுங்கள். இந்தமாதிரி இன்னொரு வாய்ப்பு உங்களுக்குக் கிட்டாமல் போகலாம். யுகாவதார புருஷர் (ஸ்ரீராமகிருஷ்ணர்), உங்கள் முன்பு கடவுள் பல வடிவில் இருப்பதைக் காட்டிக் கொடுத்திருக்கிறார். அவரைக்காண நீங்கள் வேறு எங்கே போக வேண்டும்? இதை நேரில் கண்டனுபவித்து உங்கள் மனிதப் பிறவியை அருள் நிறைந்ததாக்கிக் கொள்ளுங்கள்.



# பக்தி

(ஸ்ரீராமபிரானின் அருளுரை)

மகரிஷியே! என்னை இடையறாது நீங்கள் தியானித்து வருவதால், உங்களுடைய இதயம் மிகவும் பரிசுத்தமாகி உள்ளது என்பதை நான் அறிவேன். அதனால்தான் நான் உங்களை தரிசிப்பதற்கு வந்திருக்கிறேன். என்னைத் திருப்தி செய்வதற்காக நீங்கள் வேறு எந்த சாதனையையும் செய்யவேண்டியதே இல்லை.

ஃ ஃ ஃ

இந்த உலகிலே என்னைப் புகலிடமாகக் கொண்டும், என்னைத் தியானித்துக்கொண்



டும், என்னுடைய புனித நாமமாகிய மந்திரத்தை ஜபித்துக்கொண்டும் இருப்பவர்கள் நிச்சயமாக என்னுடைய காட்சியைப் பெறுவார்கள். அவர்கள் கேளாமலேகூட அந்தக் காட்சி அவர்களுக்குக் கிட்டும். சரணடையும் இடம் அவர்களுக்கு வேறு ஏதும் இல்லை என்பது எனக்குத் தெரியும்.

ஃ ஃ ஃ

நீங்கள் ஏற்கனவே செய்திருக்கும் ஆத்ம சாதனைகளின் விளைவாக, நீங்கள் இப்பொழுதே கூட உலக ஆசைகள் எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டிருக்கிறீர்கள். உங்களுக்கு தேக வியோகம் ஏற்பட்ட பின்னர், நீங்கள் என்னுடன் ஸாயுஜ்யம் அடைவீர்கள்.

ஃ ஃ ஃ

என்னிடம் ஆழ்ந்த பக்தி கொண்டும், சுத்த ஞானத்தை உடையவர்களாயும், பரம ஆனந்தத்தை அனுபவிப்பவர்களாயும் உள்ள யோகிகளைச் சேவிக்கின்றவனுக்கு, முக்தி கைக்கு எட்டிவிட்டது என்று கொள்ளலாம்.

ஃ ஃ ஃ

நீ ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் அது ஒரு பொருட்டே அல்ல. உன்னுடைய ஜாதியும் பெயரும் பதவியும் கணக்கில் சேரா. நீ வாழ்க்கையில் எந்த ஆசிரமத்தில் வேண்டுமானாலும் இருக்கலாம். என்னை வழிபடுவதற்கு அத்தியாவசியமான ஒரே விஷயமாவது பக்தி மட்டுமேதான். யாகம், தவம், தானம் ஆகியவைகளின் புண்ணிய பலத்தினாலோ, வேத அத்தியயனம் செய்வதாலோ, சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டுள்ள கர்மாக்களைச் செய்வதாலோ ஒரு மனிதன் என்னைக் காண விரும்பி, அவனிடம் என்பால் பக்தி மட்டும் இல்லாதிருந்தால், என் தரிசனம் அவனுக்கு வாய்ப்பது சாத்தியமே இல்லை.

ஃ ஃ ஃ

தாயே, ஆகவே உனக்கு நான் பக்தி சாதனத்தைச் சுருக்கமாக விளக்குகிறேன். இந்த பக்தி நெறியில் பின்பற்ற வேண்டிய முதல் சாதனமாவது—புண்ணியாத்மாக்களுடைய சங்கத்தை, தர்மவான்களுடைய கூட்டுறவை, நாடுவதுதான். இதை மறவாதே.

ஃ ஃ ஃ

கண்ணிருந்தும் இரவு நேரத்தில் பொருள்களைத் தெளிவாகக் காண்பது மக்களுக்கு முடிவதில்லையல்லவா? ஆனால் விளக்கு ஒன்று கிடைக்குமானால் தங்களுடைய வழியை அவர்கள் நன்கு காண முடிகின்றதல்லவா? அவ்விதமே என்னிடம் பக்தி கொண்டுள்ளவர்களிடம் ஆத்மாவானது சுயம்பிரகாசமாகின்றது.

ஃ ஃ ஃ

பக்தியை வளர்த்துக்கொள்ளும் வழியாவது இதோ உள்ளது.

என்னுடைய பக்தர்களுடன் சகவாசம் செய்வது. எனக்கும் என் பக்தர்களுக்கும் எப்பொழுதும் சேவை செய்து கொண்டிருப்பது. ஏகாதசி உபவாசம், என்னைப் போற்றுகின்ற பண்டிகைகளைக் கொண்டாடுவது, என்னுடைய மகி

மையைச் சிரவணம் பண்ணுவது, படனம் செய்வது, விமர்சனம் பண்ணுவது. குன்றாத பக்தி கொண்டு என்னைப் பூஜிப்பது. என் பெருமைகளைப் பாடுவது-இந்த நல்வழிகளை எல்லாம் ஒருவன் தினந்தோறும் அப்பியசித்து வந்தால் அவன் சுத்த பக்தியைப் பெறுவான்.

ஃ ஃ ஃ

என்னிடம் பக்தி கொண்டுள்ளவர்களுக்கு ஞானம் வந்து சேரும். தியாகமும் வாய்க்கும். பிறப்பு இறப்பு சக்கரத்திலிருந்தும் அவர்கள் விமோசனம் பெறுவார்கள்.

ஃ ஃ ஃ

என்னிடம் பக்தி படைத்திராமல் சத்தியத்தைத் தேடி, சாஸ்திரம் சாஸ்திரமாகத் தாவுகின்றவர்கள்—மேலும் மேலும் மோகமே அடைவார்கள். அத்தகைய மக்களால் ஒருபோதும் உண்மையான ஞானத்தைப் பெற முடியாது. நூறு பிறவிகள் எடுத்தாலும், ஆயிரம் பிறவிகள் பிறந்தாலும் அவர்கள் முக்தியை அடைவது என்பதை எதிர்பார்க்கவே முடியாது.

ஃ ஃ ஃ

ஆனால் பக்தி மட்டும் உனக்கு வாய்த்து விட்டாலோ எந்தவிதக் கஷ்டமுமின்றி நீ மோட்சம் பெறுவாய். நீ என்னிடம் பேரளவுக்கு பக்தி கொண்டிருப்பதால், நீ பரந்தாமத்தை என்னுடைய ஆக்ஞையாலேயே போய்ச் சேருவாய்.

ஃ ஃ ஃ

நீ இதற்கடுத்து இரண்டாவதாகச் செய்ய வேண்டியது, என்னுடைய பிரபஞ்ச லீலைகளைப் பற்றிய கதைகளை எடுத்துச் சொல்லுவதாகும். மூன்றுவதாக, என்னுடைய பல்வேறு நற்குணங்களை நீ கணித்துக்கூற வேண்டும். என்னுடைய உபதேசங்களையும் போதனைகளையும் விரிவான வகையில் சிந்திப்பதும் விளக்குவதும் நான்காவது சாதனையாகும். சற்குரு ஒருவரை நாடியடைவதும், தன்னடக்கம் பழகியும் சாஸ்திர விதிகளை அனுசரித்து வாழ்ந்தும் நல்ல இயல்புகளை வளர்த்துக்கொள்வதும், ஐந்தாவது சாதனையாகக் கொள்ளப்பட வேண்டும்.

ஃ ஃ ஃ

மிகவும் ஒழுங்காக என்னைப் பூஜிப்பது ஆறுவது சாதனையாகும். உன்னுடைய சற்குருவிடமிருந்து என்னுடைய புண்ணிய நாம மந்திரம் ஒன்றைத் தீட்சையில் பெறுவது ஏழாவது சாதனையாகும். என்னுடைய பக்தர்களை எல்லா வகைகளிலும் ஆராதிப்பதும் எல்லாவற்றையும் என் மயமாகவே பார்ப்பதும் எட்டாவது சாதனையாகும். தெய்வத்தைத் தவிர வேறு எதிலுமே பற்றின்றி இருப்பது ஒன்பதாவது சாதனை. இதுவே நவவித பக்திமார்க்கம் ஆவது.

ஃ ஃ ஃ

இந்த பக்தி மார்க்கத்தைப் பின்பற்றி ஒழுகினால் யாருக்குமே முக்தி கிடைத்துவிடும். ஆணோ பெண்ணோ, உயர்குலத்தைச் சேர்ந்தவரோ தாழ்குலத்தைச் சேர்ந்தவரோ, யாருக்குமே முக்தி கிட்டும். பக்தி என்பது சர்வப் பிரபஞ்ச வியாபகமான பிரேமை ஆகும். உனக்கு பக்தி வாய்த்துவிட்டால் என்னுடைய தத்துவங்கள் உனக்குத் தெளிவாகப் புரிய வரும். என்னை சாட்சாத்காரம் செய்பவன் இந்த பிறவியிலேயே முக்தியை அடைகிறான்.

ஃ ஃ ஃ

இவ்விதம், மோட்சம் பெறுவதற்கு பக்தியே உபாயமாகிறது. இதில் சந்தேகத்திற்கே இடமில்லை. முதலாவதான சாதனத்தை நீ பின்பற்றத் துவங்கினால், மற்ற சாதனங்கள் அனைத்துமே காலக்கிரமத்தில் ஒன்றன் பின் ஒன்றாக உன்னை வந்தடையும். நீ என்னுடைய பக்தன் என்ற காரணத்தால், பக்தியும் முக்தியும் உனக்கு வந்து சேருவது நிச்சயம். நான் உன்னை காண வந்திருக்கிறேன். என் தரிசன பாக்கியத்தால் நீ முக்தி பெறுவாய். உனக்கு அச்சமே வேண்டாம்.

ஃ ஃ ஃ

உன்னுடைய முற்பிறவியில் என்னிடம் பெரும் பக்திபூண்டு ஒழுகினாய். அதனால்தான் நீ இப்பொழுது என்னை தரிசிக்க முடிந்திருக்கிறது. என்னுடைய இந்த சொருபத்தைத் தியானித்து வா. துக்கம் யாவையும் விட்டொழித்துத் தியானித்து வா. நான் சொன்ன புத்திமதியை நினைவில் வை. உனக்கு மோட்சம் சித்திக்கும். இது வீணான நம்பிக்கை ஆகிவிடாது. நிச்சயமான உண்மையே ஆகும்.

ஃ ஃ ஃ

இதை அறி. என்னுடைய நாம உச்சாரணம் இவ்வுலகில் எல்லாவித பாவங்களையும் ஒழித்துவிடும். நாம உச்சாரணத்தை ஒருமுகப்பட்ட பக்தியுடனும், பரிபூரணமாக என்னை நம்பியபடியும் செய்து வந்தால் இவ்விதம் சர்வபாப நாசம் ஏற்படும்.



# அருள் விருந்து

சுவாமி சாரதானந்தர்

சுவாமி சாரதானந்தரின் உரையாடல்கள், கடிதங்கள் ஆகியவைகளில் இருந்து தொகுக்கப்பட்ட சில கருத்துக்கள் கீழே தரப்படுகின்றன.

### 1. மன அடக்கம்

நீ 'என்ன செய்வது? ஒன்றும் செய்ய முடியவில்லையே' என்பதைப் போன்ற கருத்துக்களை மட்டும் வெளியிடுகிறாய். தோல்வி, ஏமாற்றம் செயலற்ற நிலை—ஆகிய இவைகளையே நீ என்னிடம் கூறி வருகிறாய்.

'என் உடல் நல்ல நிலையில் இல்லை; ஆகவே என்னால் தியானம் செய்ய முடியவில்லை. எனது மனம் பலவீனமாக இருக்கிறது; ஆகவே என்னால் அதை அடக்க முடியவில்லை'— இந்தப் பல்லவியையே பாடி வருகிறாய். 'என்னால் முடியவில்லை, முடியவில்லை' என்ற எண்ணங்களையே போற்றி வந்து, 'இல்லை' என்பதையே பாடிக் கொண்டிருப்பாயானால், நீ வலிமையைப் பெற முடியுமா? ஆன்மிக வாழ்க்கையில் முன்னேற்றம் அடைய முடியுமா? ஒருவனை நல்ல பாம்பு கடித்திருந்தாலும் 'விஷம் என்னைக் கொல்லாது, நான் அழிவற்ற பொருள்' என்று உறுதியாக நினைத்துக்கொண்டே இருப்பானாயின், அந்த விஷமும் பறந்துவிடும் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வதுண்டு. உன்னால் ஒன்றும் செய்ய முடியாவிட்டால், பகவானிடம் உன்னை ஒப்படைத்துவிட்டு அவரையே புகலாகக்கொள். உன் பாரத்தை எல்லாம் அவர்மீது சுமத்திவிடு. பகவான் உன்னைக் காப்பாற்றுவது உறுதியென்றும் உன்னுடைய சங்கடங்களை எல்லாம் தீர்ப்பார் என்றும் முழுமையாக நம்பு.

உன்னை எல்லாம் வல்ல ஈசனின் திருவுள்ளத்திற்கே ஒப்படைத்துவிட முடியுமானால், எல்லாவற்றையும் நீ பெறுவாய். வேறு ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. ஒரே நாளில் தனது மனதை அடக்கவும், பகவானைத் தரிசிக்கவும் வல்லவர்களாக இருந்தவர்கள் யாரும் இதுவரை இருந்ததில்லை. அதற்கு மிகக் கடுமையான போராட்டமும் கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாத பொறுமையும் இருக்க வேண்டும். மனம் தளராதே. எல்லாவற்றையும் பகவானின் கையில் விட்டுவிட்டு அமைதியாக இரு. நமது குருமகராஜ் சொல்வதைப் போல, ''உன்னால் ஒன்றுமே செய்ய முடியாவிட்டால், உனது அதிகாரப் பத்திரத்தை எனக்குக் கொடுத்து விடு.''

ஜபம் பழகு. உன்னால் முடியும்வரை மந்திரத்தை மௌனமாக ஓதி வா. பகவானின் நாமத்தை ஓதுவதால் உனது உள்ளம் தூய்மை அடையும். நாளடைவில் நீ பகவானின் தரி



சுவாமி சாரதானந்தர்

சனத்தைப் பெறுவாய். உனது சந்தேகங்கள் அனைத்தும் மறைந்துவிடும். நம்பிக்கையோடு இரு. மேலும் மேலும் உழைத்து வா. ஆண்டவனின் அருளால் துயரத்தையும் வருத்தத்தையும் கடந்த இலட்சியத்தை நீ அடைவாய்.

### 2. ஆன்மிக வாழ்க்கையில் நேரும் இடையூறுகள்

**சி**லசமயங்களில் மனம் தாழ்ந்த நிலையை அடையும்; அசுத்த நினைவுகள் எழுந்து, கெட்ட பிசாசைப் போல உள்ளத்தைப் பிடித்துக் கொள்ளும். இது மனதின் இயல்புதான். இந்தக் கஷ்டத்தினால் கிட்டத்தட்ட எல்லோருமே துன்பப்படுவார்கள். 'பெருங்காய டப்பா வாசனை போகாது' என்று ஒரு பழமொழி உண்டு. மனதிலுள்ள பழைய பதிவுகள் (வாசனைகள்) அவ்வளவு சுலபத்தில் மறைவதில்லை. அது ஒரு பெரிய போராட்டம்தான். எப்போதும் விழிப்பாக இருக்கும் தன்மையும் கவனமும் அவசியம். எப்போதும் பகவானைப்

பிரார்த்தித்துக் கொண்டேயிரு. அவருடைய திருநாமத்தை ஜபிக்கும் அளவுக்கும், அவரைப் பிரார்த்திக்கும் அளவுக்கும் ஏற்ற வகையில், பழைய வினைகளின் வாசனைகளின் பிடிப்பு அதிகமான அளவில் தளர்ந்து நெகிழ்ந்து வரும். உரிய காலத்தில் அவைகள் முழுவதும் மறைந்து போய்விடும்.

ஆன்மிக சாதனங்களைப் பழகி வா. உன்னுடைய பிரார்த்தனைகளில் சிரத்தை உள்ளவனாக இரு. பகவானிடம் நிலைத்த பக்தியைப் பெற்றிரு. அவருடைய திருவருளால் எல்லா துன்பங்களும் ஒழிந்துவிடும். நீ கவலைப்பட்டுக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

தாழ்ந்த நினைவுகள், அவநம்பிக்கை, சந்தேகம் ஆகியவைகள் எந்தக் காலத்திலும் உனது மனதைவிட்டு நீங்கி இருந்தது கிடையாது. அவைகள் எப்போதும் அங்கே இருந்து வந்திருக்கின்றன. இதுவரையிலும் அவைகள் சில ஒதுக்கமான மூலைகளில் ஒளிந்திருந்தன. ஆனால் நீ அவைகள் இருப்பதை உணராமல் இருந்தாய். இப்போது அவைகளைக் கண்டுபிடிக்கும் திறமையைப் பெற்றிருக்கிறாய். இது உன்னுடைய தியானத்தின் பயன் ஆகும். அவைகள் நீங்க வேண்டுமே என்று உள்ளம் உருகித் தீவிரமாகப் பிரார்த்தனை செய். உண்மையான பிரார்த்தனை எதுவும் பகவானின் காதில் விழாமல் போவதில்லை. நல்ல பக்குவமான காலம் வரும்போது, உனது ஆசையை அவர் நிச்சயம் நிறைவேற்றி வைப்பார்.

### 3. ஜபத்தினால் விளையும் பயன்

உனது சக்திக்கு எவ்வளவு முடியுமோ, அவ்வளவுக்கும் மந்திரத்தை ஜபி. ஜபம் செய்வதால் நம்பிக்கையும் பக்தியும் உண்டாகும். மற்ற எல்லா ஆன்மிக நன்மைகளும், முன்னேற்றங்களும் வந்து சேரும். மனதில் உள்ளூர தெய்விகம் ததும்பும். ஆனந்தமும் வலிமையும் பெருகும். ஒருகணத்தில் எதுவும் நடப்பதில்லை. ஒரு நிமிஷ நேரம் ஊக்கம் எழுவதால்மட்டும் என்ன பயன் விளைய முடியும்? சிறிதும் ஒழுங்கு தவறாமல் நாள்தோறும் ஒருவன் ஜபம் பழகி வந்தால், நாளடைவில் அதன் பலனை அவன் அனுபவிப்பான். ஒவ்வொரு நாளும் காலையும் மாலையும் தியானத்திற்காக நீ உட்கார வேண்டும். அப்போது எல்லாவற்றையும் அடையும் திறமை உனக்கு உண்டாகும். அவசரப்படாதே; பொறுமையோடு விடாமல் தியானம் பழகி வா.

### 4. பொறுமை

ஒரு குருவிடமிருந்து மந்திர தீட்சை பெற்றதும், மனச்சஞ்சலம் அந்தக் கணமே நீங்கி விடுவதில்லை. பகவானின் மீதுள்ள பக்தியால், உலகப்பொருள்களின்மீது (லௌகிக விஷய சுகங்களின் மீது) வைராக்கியம் (பற்று இல்லாத தன்மை) விளையும். அதன் காரணமாக மனம் சாந்தம் அடையும். பக்தி ஒருவனுக்கு அதிகரிக்கும் அளவுக்கு உலகத்தின் மீதுள்ள பற்றும் அவனுக்குக் குறையும்.

ஆத்ம சாதனங்களின் முடிவாக இருப்பது, தொடர்ந்து செய்யும் முயற்சிகளாலும் பழக்கங்களாலும் உள்ளத்தை பகவானின் தாமரை திருவடிகளில் நிலைநிறுத்துவதே ஆகும்.

பிரம்மசரிய விரதம் அவசியம். பிரம்மசரியம் என்பது எது? உடல், உள்ளம் ஆகிய இரண்டின் சக்திகளையும் கெடாமல் பாதுகாத்துக் கொள்வதுதான்; காமம், பண ஆசை என்னும் தாழ்ந்த நினைவுகளை நினைப்பதால் சக்திகள் வீணாக இடம் கொடுக்காமல் இருப்பது தான். அந்த சக்திகளை, ஐம்புல இன்ப ஆசையை அனுபவிப்பதில் வீணாக்கிவிடாமல் உள்ளுக்குள்ளேயே சேகரித்து வைத்தால், அது ஒருவன் பகவானை நோக்கிச் செல்ல துணை புரிகிறது. இதுவே உண்மையான சன்னியாசம் ஆகும். துறவு ஆகும். பகவானை அனுபூதியில் உணரும் பொருட்டு, உலகப் பொருள்களின் மீதுள்ள பற்றுகள் அனைத்தையும் விட்டொழிப்பது முற்றிலும் அவசியம். அப்போதுதான் இதய குகையில் கோயில் கொண்டுள்ள பகவானைத் தரிசிக்கும் திறமை ஒருவனுக்கு ஏற்படும்.

பகவானிடம் உறுதியான நம்பிக்கைவைத்து, அவரது திருநாமத்தை ஓதிக்கொண்டே வா. அப்போது உனக்கு, ஞான வாழ்க்கை சம்பந்தமான எல்லா விஷயங்களையும் அறியவும் உணரவும் முடியும். உனக்குத் தோன்றும் எல்லாவிதமான கேள்விகளுக்கும், சரியான பதில்கள் உள்ளிருந்தே வரும். அவசரப்படாதே. பொறுமையாக இரு. இப்போது உனக்குத் தொந்தரவு விளைவிக்கும் எல்லா சங்கடங்களையும் காலமே தீர்த்து வைக்கட்டும் என்று விட்டுவிடு.

## 5. தியானத்தில் கவனம்

தியான வேளையில் இஷ்ட தெய்வத்தின் முழு வடிவத்தையும் மனக்கண்முன் நிறுத்துவது என்பது, மிக அரிய நிகழ்ச்சி ஆகும். ஆத்ம சாதகர்கள் எல்லோரும், ஆரம்பத்தில் வடிவத்தின் ஒரு பகுதியை மட்டும் தரிசிப்பார்கள்.

மனம் ஒருமுகப்பட்டு, ஒரே கருத்தில் ஆழ்ந்து ஈடுபடும்போது, ஒருவருக்குத் தெய்வத்தின் முழு வடிவக்காட்சியும் உண்டாகும். அப்போது காற்று வீசாத இடத்திலே வைக்கப்பட்ட ஒரு விளக்கின் சுவாலையைப் போல, வடிவம் முழுவதும் அசையாமல் மனக்கண் முன்னால் நிற்கும்.

ஜபத்திற்கும் தியானத்திற்கும் உள்ள வேறுபாடு மிகவும் சிறியதுதான். தொடர்ந்த கவனத்துடன், இடைவிடாமல் எப்போதும் ஒருவன் ஜபம் செய்தால், ஆழ்ந்த அமைதியான தியானத்தில் நிச்சயமாக மூழ்கி விடுவான்.

ஒருவன் ஆரம்ப நிலையில் ஜபத்தில் ஒருமுகப்பட்ட மன நிலையை (ஏகாக்ர நிலை) அடைய முயற்சி செய்ய வேண்டும். மனம் ஜபத்தில் மூழ்கும் சில சமயங்களில் தூக்கம் வருவது உண்டு. இது, எப்போதாவது, ஏதோ ஒருசமயத்தில் மட்டும் நிகழ்வதுதான். அது கழிந்து போய் விடும். தூக்கத்தில் பகவானின் நினைவு ஏற்படுமானால், ஒருவித தெய்விக ஆனந்தமும் உண்டாகுமானால், அது நல்லதுதான்.

தமது சீடர் ஒருவரிடமிருந்து ஸ்ரீராமகிருஷ்ணர் இதைப் பற்றிக் கேள்விப்பட்ட போது, அதை 'யோக நித்திரை' என்று குறிப்பிட்டார்.

## 6. ஞானத் துடிப்பு (அருள் தாகம்)

உனக்கு 'சந்தியா வந்தனம்' (நித்திய கர்மானுஷ்டானம்) ருசி அற்றதாகவும், சம்பிரதாயத்திற்காக மட்டும் செய்வதாகவும் தோன்றினால், ஒரு சில நாளைக்கு அதை நிறுத்தி வைத்து, அதற்குப் பதிலாக பகவானின் நாமத்தை ஜபித்து வரலாம்.

இப்படிச் செய்து வந்தால், அந்தக் கிரியைகளிலும், விதிமுறைப்படி செய்யும் சடங்குகளிலும் ஒரு புதிய ஒளி விளங்குவதை நீ காண்பாய்.

உனது முழு உள்ளத்தோடு நெஞ்சாரப் பகவானிடம் பிரார்த்தனை செய்; எல்லாம் மங்களகரமாக முடியும்; ஒவ்வொன்றும் உனக்கு அனுகூலமாக அமையும்; உனது ஆன்மிக வளர்ச்சிக்குத் துணை செய்யும். ஒவ்வொரு உயிரிலும் அறிவு வடிவமாகத் திகழ்பவர் பகவானே ஆவார். ஆகவே உனக்கு நன்மை தருவதாகவே எல்லாம் நடந்தேறும்.

அவருடைய துணை இல்லாமல் நாட்டிலும் சரி, காட்டிலும் சரி, மனிதனுக்குச் சாந்தமும் ஆனந்தமும் கிடைக்கும் நம்பிக்கை இல்லை.

தியானத்தில் உன்னை மறந்து விடுவதாகச் சொல்கிறாய். அது சுலபமான காரியம். அவருடைய திருவருள் வரும்போது, தியானம் செய்யும்போது வெளி (புற) உலகத்தை மறப்பதில் கஷ்டமே இல்லை.

ஆர்வம் பொங்க அவரிடம் பிரார்த்தனை செய்து வா. அவருடைய திருநாமத்தை உரக்கச் சொல்வாயாக. அவரை அடையும் விஷயத்திலேயே பரபரப்புக் கொள்வாயாக. ஞானத்திற்காக துடிக்கும் நிலையை மற்றவர்கள் யாரும் உனக்குக் கொடுக்க முடியாது. அது உனக்குள் இருந்தே வர வேண்டும். அது பகவானின் சிறப்பான நன்கொடை ஆகும். அவரது திருவருளைப் பெறுபவன் அதை அடைவான். வேறு எவருக்கும் அது இயலாது.



இறைவா, எனது வாழ்க்கை முழுவதும் பிறப்புதோறும் துன்பங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கடுக்காக வந்து கொண்டிருக்குமாறு எனக்கு அருள் புரிக! இல்லையேல் பிறவி என்ற பிணி நீக்கும் உன் முகத்தைக் காண்பதரிது.

—குந்திதேவியின் பிரார்த்தனை.

பகவானிடத்திலேயே மனம் சென்றவர்களாகவும், அவரைப் பற்றியே பேசுகின்றவர்களாகவும், அவருடைய லீலைகளை அபிநயம் செய்பவர்களாகவும், அவரிடம் பிராணனை வைத்தவர்களாகவும், அவருடைய குணங்களையே பாடுபவர்களாகவும் இருந்த அந்த கோபிப் பெண்கள் தங்களுடைய வீடுகளை நினைக்கவில்லை.

—ஸ்ரீமத் பாகவதம்.

# நான் பார்க்கும் விவேகானந்தர்

ஜெயகாந்தன்

தமிழ்நாட்டுக்கு மிகவும் அறிமுகமான பிரபல எழுத்தாளர் ஜெயகாந்தன். அவர், மயிலை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் 23-1-77 -ஆம் தேதி விவேகானந்த ஜயந்தி விழாவை யொட்டி நடைபெற்ற 'நான் பார்க்கும் விவேகானந்தர்' என்னும் கருத்தரங்கில் கலந்துகொண்டு உரையாற்றினுர். அந்த உரையின் ஒரு பகுதி கீழே தரப்படுகிறது.

சுவாமி விவேகானந்தர் வாழ்ந்த காலத்தில் மக்கள் நிலை எப்படி இருந்தது என்பதை நாம் நினைவில் வைத்துக்கொண்டு, அவருடைய வரலாற்றையும் போதனைகளையும் நாம் அணுக வேண்டும். அவ்விதம் காலத்தோடு ஒட்டி விவேகானந்தரை நாம் பார்க்கும்போதுதான், அவருடைய உருவம் நமக்குத் தெளிவாகும்.

விவேகானந்தரைப் படித்து, அதன்மூலம் ஆரம்பத்தில் அவர்மீது எனக்கு ஈடுபாடு வந்து விடவில்லை. அவரைக் குறித்துப் படிக்காமலேயே அவர்மீது எனக்கு ஈடுபாடு இருந்தது. அதாவது அவருடைய கம்பீரமான உருவம் என்னைக் கவர்ந்தது. அவரிடம் ஈடுபாட்டை உண்டு பண்ணியது.



விவேகானந்தரை நான் விவேகத்தின் மூலமாக அல்ல, வீரத்தின் மூலமாகவே முதன் முதலாக அறிந்து கொண்டேன். வீரத்தை எனது நெஞ்சில் விதைத்தவர் விவேகானந்தரே ஆவார். விவேகானந்தர் என்னும் விளக்கின் மூலமாகவே பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரையும் என்னுல் புரிந்து போற்ற முடிந்தது. அப்படி விவேகானந்தர் இல்லாமல் இருந்திருந்தால், பரமஹம்சரைப் பலர் அந்தக் காலத்தில் பித்தன் என்று நினைத்ததைப் போல, அஞ்ஞானியான நானும் அவரைப் புரிந்துகொள்ளாமல் பித்தன் என்று சொல்லி, அவர்கள் செய்த அந்தப் பெரிய பாவத்தையே செய்திருப்பேன்.

விவேகானந்தரின் நூல்களை எந்த மொழியில் படித்தாலும், அவருடைய உள்ளத்திலிருந்து உணர்ச்சிகள் கொப்பளித்துப் பொங்குவதைப் பார்க்கலாம்.

நான் விவேகானந்தரை மதிக்கிறேன் என்பது சத்தியம், சத்தியம், சத்தியம். முற்றிலும் இது சத்தியம்.

அந்தக் காலத்தில் பணியாள்தான் கைகட்டி நின்றுன். அப்போது, வீரத்தோடு கைகட்டி நிற்பவன் ஞானி என்பதை விவேகானந்தரே நம் உள்ளத்தில் உரைக்கும்படியாக எடுத்துக் காட்டினுர். அந்த வீர சன்னியாசிதான், உண்மையான அரசியல்வாதிகளுக்கு எல்லாம் அரசியலைப் புரிந்துகொள்ள ஊற்றுக் கண்ணுக அமைந்தார். அவர் இந்தியாவில் பிறந்த எந்த ஒரு மனிதனுக்கும் இலட்சிய புருஷராக இருக்கக் கூடியவர்.

விவேகானந்தரைப் பற்றிப் பேசுவதற்கு நான் யார்? அதற்கு எனக்கு என்ன தகுதி இருக்கிறது? ''உலக மாயை என்ற பாறைக்குட்பட்டிருக்கும் தேரையாகிய நான், ஞானகாசத்திலே சர்வ ஸ்வயாதீனமாக ஒளிவீசிக் கொண்டிருக்கும் ஜ்யோதி நக்ஷத்திரங்களாகிய விவேகானந்தர், ராமகிருஷ்ண பரமஹம்சர் முதலானேர்களின் தாரதம்மியத்தைப் பற்றி எவ்வாறு வகுத்துக்கூற மாட்டுவன்?''—என்று மகாகவி பாரதி குறிப்பிடுகிறுர். அவரே அப்படிச் சொல்லும்போது விவேகானந்தரைப் பற்றி அறிய, பேச நான் யார்?

'நான் ஒரு சோஷியலிஸ்ட்' என்று தம்மைப் பற்றிச் சொன்னவர் விவேகானந்தர். இப்போது அரசியல்வாதிகள் பேசுகிற நோக்கத்தில் விவேகானந்தர் இதைச் சொல்லவில்லை. தியாகியின் சின்னமாகிய காவியுடை உடுத்து இதை அவர் சொன்னார். அதில்தான் அவர் சொல்லியதனுடைய உண்மையான சிறப்பே அடங்கியிருக்கிறது. அவருக்கு முன்பு எந்த ஒரு சன்னியாசியும் தன்னை ஒரு சோஷியலிஸ்ட் என்று குறிப்பிட்டதாக வரலாறே கிடையாது.

மார்க்ஸீயவாதிகளின் மத்தியிலே நான் இருந்தபோது, எவ்வளவோ சோஷியலிஸக் கருத்துகளைக் கேட்டிருக்கிறேன்; சிந்தித்திருக்கிறேன். ஆனால் அப்போதெல்லாம் அவை எனக்குப் புரியவில்லை. விவேகானந்தரைப் படித்த பிறகு, விவேகானந்தரைப் படித்த பிறகுதான்—சோஷியலிஸம் என்றால் என்ன என்பது எனது அறிவுக்குத் தெளிவுபட ஆரம்பித்தது.

இந்திய வரலாற்றிலே ஆதிசங்கரருக்குப் பிறகு வந்து, மக்கள் குலம் ஒன்று என்று சொன்னவரும் விவேகானந்தர்தான். இந்தியாவின் மேற்குடி மக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் நல்வழியைக் காட்ட கடுமையாக சாடிய விவேகானந்தர், உலகில் தோன்றிய எல்லா புரட்சிக்காரர்களுக்கும் அடித்தளமாக, ஊற்றுக் கண்ணாக அமைகிற மிகப் பெரிய ஆன்மிகப் புரட்சிக்காரர் ஆவார்.

யாருக்கு விவேகானந்தர் தேவையோ, தேவையில்லையோ அது எனக்குத் தெரியாது. ஆனால் விவேகானந்தர் **எனக்கு** அத்தியாவசியமாகத் தேவைப்படுகிறார். அவர் மடங்களுக்குத் தேவைப்படுகிறாரோ இல்லையோ, சன்னியாசிகளுக்குத் தேவைப்படுகிறாரோ இல்லையோ, சம்சாரிகளுக்கு ரொம்ப, ரொம்ப, ரொம்பத் தேவைப்படுகிறார் என்பது நிச்சயத்திலும் நிச்சயம்.

நான் யார்? நான் என்ன செய்ய வேண்டும்? என்பதை எனக்கு எடுத்துச் சொன்ன என்னுடைய மாபெரும் தலைவர் விவேகானந்தர். அந்த ஒரு தனி மனிதரே தமது காலத்தில் ஒரு வலிமை வாய்ந்த ஸ்தாபனமாக வாழ்ந்தார். அந்தக் காலத்தில் இந்தியாவில் ராஜா இல்லாத குறையை, நமது விவேகானந்தர் ராஜாவாக இருந்து தீர்த்துவிட்டார். அந்தக் காலத்தில் ராஜாக்களாக இருந்தவர்கள், உண்மையில் ராஜாக்களாகவா இருந்திருக்கிறார்கள்? இந்தியாவிற்கு ராஜா என்று ஒருவர் வேண்டும். விவேகானந்தரே 'அந்த ராஜா என்பது நிச்சயம். ஆகவே சன்னியாசிகளுக்கு விவேகானந்தர் தேவையோ இல்லையோ, என்னைப் போன்ற சம்சாரிகளுக்கு அவர்தான் தேவை.

மாயை என்ற ஒரு கருத்தை உலகிற்கு இந்தியாதான் எடுத்துக் காட்டியது. அதனால்தான், மாயை கண்ட இந்தியாவுக்குப் பொறுப்பும் உண்டு. மதம்தான் மாயை, மாயைதான் மதம் என்று மக்கள் நம்பி வந்த காலத்தில், எதற்கெடுத்தாலும் 'இது மாயை' என்று பேசப் பட்டு வந்த காலத்தில்,

''மாயையாயிற்றே?''

''எழு!''

''மாயையாயிற்றே?''

''விழித்துக்கொள்!'' என்று வீரம் ததும்பிய குரல் கொடுத்தவர் விவேகானந்தர். பயம், கோழைத்தனம் ஆகியவைகளை விரட்டியோட்டி விட்டு, **'தன்னம்பிக்கை கொண்டவனாக இரு'** என்று மதத்திற்கே புதியதொரு விளக்கம் கண்ட புரட்சிக்காரரும் விவேகானந்தர்தான். புரட்சிக்காரர்களுக்கெல்லாம் புதிய புரட்சிக்காரராகிய இவர், மாபெரும் ஆன்மிகப் புரட்சியாளர் ஆவார். நான் சுவாமிஜியை எப்படிப் பார்க்கிறேனோ, எப்படிப் புரிந்து கொள்கிறேனோ, அதையே நான் இப்போது உங்களுக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். மற்றபடி 'இவ்வளவுதான் விவேகானந்தர்' என்று நான் சொல்லவில்லை. அப்படிப்பட்ட ஓர் அகந்தை எனக்கு இங்கும் வர வேண்டாம்; வேறு எங்கும் வர வேண்டாம்.

இன்றைய கல்விமுறை பொறுப்பற்றதாக, மனிதர்களை உருவாக்கக்கூடியதாக இல்லை என்று காறியுமிழ்ந்திருக்கிறார் விவேகானந்தர்.

நம்மை வாழ வைத்தவர் விவேகானந்தர். எப்போதுமே சன்னியாசிகள்தான் இந்த நாட்டை வாழ வைத்திருக்கிறார்கள். அந்தக் காலத்தில், ராமதாசர் என்னும் சன்னியாசி சிவாஜி வாழ்க்கையில் இடம் பெற்று இந்த நாட்டை வாழ வைத்ததைப் போல, இந்நாளில் நம்மை வாழ வைத்த, தலைநிமிர வைத்த வீரர், விவேகானந்தரே ஆவார்.

சன்னியாசம், வேதாந்தம், உபநிஷதங்கள் ஆகியவைகள் எல்லாம் கிழவர்களுக்கு அல்ல, இளைஞர்களுக்கு என்று எடுத்துக்காட்டியவர் யார்? விவேகானந்தர்தான்.

மத வாழ்க்கை காரணமாக, இந்த நாட்டின் முன்னேற்றம் தடைப்பட்டது என்று சில மூடர்கள் சொன்னபோது, 'அல்ல, அல்ல, உண்மையான ஆன்மிகத்தை இந்த நாடு இழந்ததால்தான் இந்நாட்டிற்கு அழிவு நேர்ந்தது' என்று புரியவைத்த பெருந்தகையும் விவேகானந்தர் தான்.

நாடு தாழ்வுறும்போது மகான்களே இந்த நாட்டிற்கு வழிகாட்டியாக வந்திருக்கிறார்கள். அப்படி வேத ரிஷிகள் பரம்பரையில் வந்தவரான விவேகானந்தரே அறிவு, புஜபலம், சாஸ்திர உண்மைகள் அத்தனையும் நம் உள்ளத்தில் பதிய வைக்க உறுதியான குரல் கொடுத்தார்.

விவேகானந்தரிடம் பலவித முரண்படுகிற கருத்துக்களை நாம் பார்க்கிறோமே என்று சிலர் சொல்கிறார்கள். இப்படி முரண்பாடுகளைப் பார்க்கிறோம் என்று சொல்லிக் கொண்டிருப்பதால், அல்லது பார்த்துக் கொண்டிருப்பதால் இந்த நாட்டிற்கோ அல்லது தனி மனிதனுக்கோ என்ன நன்மை அதனால் வந்துவிடும்? சுவாமிஜியிடம் காணப்படும் முரண்பாடுகள் அத்தனையையும் உள்ளடக்கி, ஒட்டு மொத்தமாக சமரசப்படுத்தி, அதையும் கடந்ததாக விவேகானந்தரிடம் உயர்ந்ததாக எந்த ஒன்றைப் பார்க்கிறோமோ, அதைப்பற்றிச் சிந்திக்கவும் நடக்கவும் செய்வது, அவரிடம் முரண்பாடுகள் இருக்கின்றன என்று சொல்லி வீண்காலம் போக்குவதைவிடப் பயனுடையது அல்லவா? நீங்களே சிந்தித்துப் பாருங்கள்.

புதுமைக்கும் புதுமையான புரட்சிக் கருத்துக்களைச் சொன்னவரும் விவேகானந்தர்தான். வேதகால ரிஷி மரபில் நின்று, இக்காலத்திற்கேற்ற ஆன்மிக சோஷலிஸத்தை எடுத்து அவர் சொன்னார் என்பதும் உண்மை.

அப்போதைய இந்திய சுதந்திர வரலாறு, விவேகானந்தரை மையமாக வைத்துக் கொண்டுதான் படர்ந்து வளர்ந்தோங்கியது. இந்த உண்மையை, இந்நாட்டின் வரலாற்றை உண்மையாகப் புரிந்துகொண்ட புத்திசாலிகள் ஒவ்வொருவரும் புரிந்துகொள்வார்கள்.



# விவேகானந்தரும் பாரதியாரும்

ஏ. சுப்ரமணியம், எம். ஏ.

ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த மன்றம், ஆர்க்காடு.

இன்றைக்கு எழுபத்து நான்கு ஆண்டுகளுக்குமுன், ஜூலை மாதம் நாலாம்நாள்! வெள்ளிக்கிழமை. மாலை ஏழு மணி. சுதந்திர உணர்ச்சியே அற்றுப்போன இந்தியாவின் உடம்பிலும் ஆன்மிக உணர்வு குறைந்து நைந்துபோன உலகத்தின் இதயத்திலும், தம் அறிவாலும், இதயத்தாலும், தவ வலிமையாலும் ஒரு புதிய மின்சார உணர்ச்சியைப் பாய்ச்சிய அந்த மகான், கங்கைக் கரையில் பேலூர் மடத்தில், தம் அறையில் ஆழ்ந்த தியானத்தில் இருக்கிறார். உலகை மறந்து—தம்மை மறந்து உட்கார்ந்திருக்கிறார். ஒன்று—இரண்டு—மூன்று—பத்து—இருபது — முப்பது — நாற்பது — நாற்பத்தைந்து நிமிடங்கள் கழிகின்றன. மூடியிருந்த அந்த அறையின் ஜன்னல்கள் திறக்கப்படுகின்றன. அசையாது அமர்ந்திருந்த அவர் தம் படுக்கையில் மெல்ல இடப்புறமாகச் சாய்ந்து உடம்பை நீட்டிப் படுத்துக் கொள்கிறார். முன்புபோலவே ஆழ்ந்த-மிக ஆழ்ந்த தியானம். ஒரு மணி நேரத்திற்குப்பிறகு இடப்புறத்திலிருந்து வலப் பக்கமாகத் திரும்பிப் படுக்கிறார். ஆழ்ந்த பெருமூச்சு ஒன்று அவர் மார்பை அழுத்திக்கொண்டு வெளியேறுகிறது. பிறகு சில நிமிடங்கள் அமைதி. கண்கள் இரண்டும் புருவங்களுக்கு இடையில் குத்திட்டு நிற்கின்றன. இரண்டாவது தடவையாக மறுபடியும் ஆழ்ந்த ஒரு பெருமூச்சு. பிறகு

மௌனம். நிலையான மௌனம்! கலைக்க முடியாத மௌனம். அண்ணல் விவேகானந்தர் அமரராகி விட்டார்.

### பொனிக்ஸ் பறவை

மறுநாள் சனிக்கிழமை மாலையில் அவர் திருமேனிக்குக் கங்கைக் கரையில் தீ மூட்டப்பட்டது. எலும்பு, தசை, நரம்பு மயமான அவரது புனிதத் திருமேனி வெந்து சாம்பலாகி விட்டது. ஆனால் அந்தச் சாம்பலிலிருந்து அற்புதமான—அழிவே இல்லாத—இந்த உலகம் முடியும்வரை வாழப்போகும் மற்றொரு விவேகானந்தர் தோன்றிவிட்டார்.

கிரேக்கப் புராணத்தில் வரும் பொனிக்ஸ் என்ற பறவை தன்னைச் சுட்டெரித்த சாம்பலிலிருந்து புதிய சிறகோடும், இளமைப் பொலிவோடும் வெளிவந்து வான வீதியில் நெடுங்காலம் வாழச் சிறகடித்துச் செல்வதுபோல, விவேகானந்தர் அந்த உடல் சாம்பலிலிருந்து இளமைப் பொலிவோடும் புதிய வேகத்தோடும் எழுந்து, உலகமெங்கும், இமயத்தின் உச்சியிலிருந்து பஸிபிக்மாக்கடலின் அடிவாரம் வரை பரவத் துவங்கிவிட்டார்.

அந்தப் பரவலில் இந்தியா புதிய அறிவையும், அனுபவத்தையும், உற்சாகத்தையும் பெற்றது. புதிய எழுச்சியும், ஆண்மையும், வேகமும் நிறைந்த ஆயிரமாயிரம் மனிதர்கள் புதிய உத்வேகத்தோடு எழுந்தார்கள். அவருடைய தெய்விகக் கனவை நினைவாக்கச் செயலில் இறங்கினர். அந்த மனிதர்களுள் கவியரசர் சுப்பிரமணிய பாரதியாரும் ஒருவர்.

### விவேகானந்தரும் தமிழ்நாடும்

விவேகானந்தரைப்பற்றி ஓர் அமெரிக்கர், 'இந்தியா விவேகானந்தரை ஈன்றெடுத்தது. ஆனால் அமெரிக்காதான் அவரை யார் என்று கண்டுபிடித்து இந்தியாவிற்கு வழங்கியது' என்று கூறுகிறார். இந்தியா விவேகானந்தரைப் பெற்றெடுத்த உண்மையான புகழுக்கு உரியதானாலும், அவரது ஆற்றலை அமெரிக்காவும் இந்தியாவும் உலகமும் புகழும்படி செய்த பெருமையில் பெரும்பகுதி தமிழ்நாட்டிற்கே உரியதாகும். அமெரிக்காவிற்குச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தை விவேகானந்தரின் நெஞ்சில் அழுத்தமாக ஊன்றி, ஆவன செய்தது தமிழ்நாடே! இன்றைய தமிழ்நாடும் அன்றைய சென்னையுமான இந்த மாநிலம் அவருடைய தெய்விக ஆற்றலில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தது. அதுபோலவே அவரும் சென்னையிடம் அளவுகடந்த அன்பும் நம்பிக்கையும் வைத்திருந்தார்.

### எனது நம்பிக்கை அனைத்தும் சென்னையிடமே

சுவாமிஜி அமெரிக்காவிலிருந்து பெரும் புகழுடன் இந்தியா திரும்பிச் சென்னை வந்ததும், சென்னைக்குத் தான் பட்டிருக்கும் கடனைப் பற்றியும், அதனிடம் தனக்கு உள்ள நம்பிக்கையைப் பற்றியும் மனம் திறந்து விரிவாகப் பேசினார்: ''சென்னைவாசிகளான உங்களுக்கு என்றென்றும் நான் கடமைப்பட்டிருக்கிறேன். சென்னை மக்கள் என் தகுதிக்கெல்லாம் மீறிய வகையில், தங்கள் சக்திக்கெல்லாம் அதிகமான அளவில் எனக்கு உதவியிருக்கிறீர்கள். சென்னை வாலிபர்களுக்கு என்றென்றும் எனது நன்றி. கடவுள் அவர்களை எப்போதும் காப்பாராக! என் நம்பிக்கை அனைத்தும் சென்னையிடமே இருக்கிறது. சென்னையிலிருந்து ஒளி எழும்பி இந்தியாவெங்கும் பரவ வேண்டும்'' என்று அவர் கூறினார். அதோடு, ''நெருப்புப் பிழம்பு போன்ற இலட்சியப் பணியாளர்கள் கூட்டம் ஒன்று இப்போது எனக்குத் தேவை. தங்கள் பணியைச் செய்து முடிப்பதற்காகத் தீயில் குதிக்கவேண்டியது அவசியமானாலும் அப்படியே செய்வதற்கும் என் குழந்தைகளான அவர்கள் தயாராக இருக்கவேண்டும்'' என்றார்.

விவேகானந்தர் தேடிய அந்த இலட்சியப் பணியாளர் கூட்டத்தில் ஒருவராக—அவர் கருத்தையே தம் கருத்தாகத் தமிழ்நாட்டில் எதிரொலிப்பவராக அமைந்தவர் பாரதியார்.

### விவேகானந்தப் பரமஹம்சமூர்த்தி

பாரதியார், விவேகானந்தரையே குருவாகவும், தெய்வமாகவும் தம் நெஞ்சில் வைத்துப் போற்றினார். அவருடைய கருத்துகளையும் பெருமைகளையும் பத்திரிகைகளில் எழுதி எழுதித் தமிழ்நாடு முழுவதும் பரவச் செய்தார். விவேகானந்தரின் வாழ்க்கையும் கருத்துகளும் பாரதியாரின் உள்ளத்தில் அளவுகடந்த உற்சாகத்தையும் வலிவையும் பெருக்கிக் கொண்டே இருந்தன. இந்தியாவின் அரசியல் விடுதலைக்கும், சமூக விடுதலைக்கும் அவர்தான் அடித்தளமென்பதைப் பாரதியார் தெளிவாக உணர்ந்து கொண்டிருந்தார். 1908-ஆம் ஆண்டில் தம் 'இந்தியா' பத்திரிகையில் பாரதியார், விவேகானந்தரைப் பற்றி எழுதுகிறார்:—

''பரமஞானியாகிய ஸ்ரீகிருஷ்ண பகவான் மகாபாரதப் போரில் சேர்ந்தது போலவும், சர்வ பந்தங்களையும் துறந்த ராமதாஸ் முனிவர் மகாராஜா சிவாஜிக்கு ராஜதந்திரங்களைச் சொல்லி வெற்றி தேடிக்கொடுத்தது போலவும், தற்காலத்தில் அநேக துறவிகள் நமது சுதேச முயற்சியில் சேர்ந்திருக்கிறார்கள். காலஞ்சென்ற விவேகானந்தப் பரமஹம்சமூர்த்தியே இந்தச் சுயாதினக் கிளர்ச்சிக்கு அஸ்திவாரம் போட்டவர் என்பது உலகறியும்.''

**மகரிஷி**

மேலும் அவர் சுவாமிஜியைப் பற்றிக் குறிப்பிடும்போது, ''நம்முடைய அதிர்ஷ்டத்தாலும், ஈசனுடைய திருவருளாலும், மற்றெல்லா மாயைப் படலங்களையெல்லாம் அறுத்தெறிந்து விட்ட விவேகானந்தர், சுதேசப் பற்றை மட்டும் நெடுங்காலம் கொண்டிருந்தார். ஆனால் பரம சந்நியாசியைத் தவிர மற்றவர்கள் அனைவரும் பூமிப்பற்று இல்லாத விஷயத்தில் பிணத்துக்கு சமமானவர்கள் என்பதை மகரிஷி மிகவும் வற்புறுத்திப் பேசியிருக்கிறார்கள்''* என்று கூறுகிறார்.

சுவாமிஜியை 'பரமஹம்சமூர்த்தி' என்றும், 'மகரிஷி' என்றும் குறிப்பிட்டு, இந்திய நாட்டு விடுதலைக்கு அவரே அடிப்படையாக அமைந்ததைத் தெளிவாகத் தமிழ்நாட்டு மக்களுக்கு அறிவிக்கிறார். எல்லாப் பற்றுக்களையும் துறந்து நாட்டுப் பற்றைத் துறவாது விவேகானந்தர் வாழ்ந்ததே, இந்த நாட்டு மக்களுக்கு நாட்டுப்பற்று ஏற்படக் காரணமாக இருந்தது. அதிலும் பாரதி போன்ற, இயல்பாகவே ஆவேசமும், நல்லனவற்றுள் ஆழ்ந்த நம்பிக்கையும் கொண்டவர்களின் உள்ளம் தியாகப் பொங்கியெழ, விவேகானந்தரின் கருத்துக்களே காரணமாக இருந்தன.

**வாழ்க்கை வரலாறு**

விவேகானந்தரால் தம் இதயத்தை நிரப்பிக் கொண்ட பாரதி, அவரைத் தமிழ் மக்கள் எல்லாக் கோணங்களிலும் அறிந்துகொள்ளச் செய்ய வேண்டும் என்று துடித்தார். அவரைப் பற்றி எழுதினார்; அவருடைய பேச்சுக்களைத் தமிழில் மொழி பெயர்த்துத் தந்தார். அவருடைய வாழ்க்கை வரலாற்றையும் தொடர்ச்சியாக எழுதத் துவங்கினார்.

1905-ஆம் ஆண்டில் அவர் ஆசிரியராக இருந்து துவக்கிய 'சக்கரவர்த்தினி' என்ற பத்திரிகையில், பாரதியார் விவேகானந்தரின் வாழ்க்கை வரலாற்றை எழுதத் துவங்கினார்.

'சுதேசமித்திரன்' பத்திரிகையிலும், 'இந்தியா' பத்திரிகையிலும் விவேகானந்தரின் எழுச்சி மிக்க சொற்பொழிவுகளை வெளியிட்டார். 'இந்தியனாகப் பிறந்திருப்பதே பெரும் பாக்கியம்' என்று பேசிய சுவாமிஜியின் பேச்சை 'இந்தியா' பத்திரிகையில் மொழி பெயர்த்துப் பிரசாரம் செய்தார். அவை அக்கால மக்களிடையே பெரிய எழுச்சியை உண்டு பண்ணின.

''தீரா! நீ இந்தியனாக ஜனன மெடுக்கலானதை அதிக கவுரவமாக நினை! சகோதரனே! இந்திய பூமியே எனது நித்திய சொர்க்கம். இந்தியாவின் க்ஷேமமே எனக்குப் பரமானந்தம் என்று சொல்! பகவானே! ஏ ஜகன் மாதாவே! எனக்குப் புருஷத்தன்மையைக் கொடு! தைரிய லட்சுமியே! என்னுள் இருக்கும் அதைரியத்தை அதம் பண்ணு! என்னைத் தீரனாக்கு! என்னை ரட்சி! என்றும் அல்லும் பகலும் அறுபது நாழிகையும் பிரார்த்தனை செய்!

''இவ்வாறு இப்போது நடைபெறும் நவீன உணர்ச்சியின் மூலபுருஷரான சத்குரு ஸ்ரீவிவேகானந்த சுவாமிகள் நமக்குக் கட்டளையிடுகின்றார்'' என்னும் பாரதியின், சுவாமிஜி கருத்துக்கள் அக்காலத் தமிழர்களிடையே பெரும் பரபரப்பையும், உற்சாகத்தையும் உண்டாக்கின. அந்தக் கருத்துகளைத் தமிழ்நாட்டிற்கு 'குருவான விவேகானந்தரின் கட்டளைகள்' என்று பாரதியார் பிரசாரம் செய்கிறார்.

**விவேகானந்த பரமன்**

விவேகானந்தரின் தம்பி, பூபேந்திரநாத் தத்தா 1907—ஆம் ஆண்டில் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக ஆங்கில அரசாங்கம் அவர்மீது ராஜத்துரோகக் குற்றம் சாட்டிச் சிறையில் அடைத்தது. இந்நிகழ்ச்சி, இந்தியாவெங்கும் பெரிய கிளர்ச்சியையும் கண்டனத்தையும் எழுப்பியது. அப்போது பாரதியார் பூபேந்திரரைப் பாராட்டியும் ஆங்கில ஆட்சியைக் கண்டித்தும் 'பூபேந்திரர் விஜயம்' என்ற தலைப்பில் 32 அடிகள் கொண்ட பாடல் ஒன்றைப் பாடினார். அதில் பூபேந்திரரைக் குறிப்பிடும் போது,

* பாரதி புதையல் II பக்கம் 108

''பாபேந்திரியஞ் செறுத்த எங்கள்
விவேகா னந்தப் பரமன் ஞான
ரூபேந்திரன் தனக்குப் பின்வந்தோன்''

என்று விவேகானந்தரைப் 'பரமன்— பரம்பொருள்' என்று குறிப்பிடுகிறார். இதனால், பாரதியின் இதயத்தில் விவேகானந்தர் எந்த வடிவில் இருந்தார் என்பது தெளிவாகத் தெரிகிறது.

இதுமட்டுமல்லாமல் தன் வீட்டில் தனது குழந்தைகளையும், நண்பர்களையும் சேர்த்து வைத்து ஆண்டுதோறும் விவேகானந்தர் பிறந்தநாளை பெரிய விழாவாகக் கொண்டாடினர். இது குறித்து அவர் இரண்டாம் மகள் திருமதி சகுந்தலா பாரதியார் எழுதுகிறார்.* ''எனக்கு வயது ஏழு அல்லது எட்டு இருக்கும். எங்கள் வீட்டில் சுவாமி விவேகானந்தரின் பிறந்த நாள் விழா கொண்டாடுவது வழக்கம். முதன்முதலாக அப்பா எனக்குப் பிரசங்கம் செய்யக் கற்றுக் கொடுக்கும்பொருட்டு சுவாமி விவேகானந்தருக்கு வணக்கமும், விவேகானந்தர் சரித்திரத்தின் சுருக்கமும் எழுதிக் கொடுத்துப் படிக்கும் படி செய்தார். ஸ்ரீராமகிருஷ்ணரின் சரித்திரம், தேவி நிவேதிதாவின் சரிதை இவற்றைச் சிறிய கதைகள்போல எனக்குச் சொல்லுவார்.''

**சீடரெல்லாரும் நண்பர்கள்**

சென்னை, விவேகானந்தர் இதயத்தில் ஆழ்ந்த இடத்தைப் பெற்றதற்குக் காரணம், இங்கு அவருக்குக் கிடைத்த சீடர்களே. பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியராக இருந்த அழகியசிங்கப்பெருமாள் விவேகானந்தரிடம் உயிர்நேசம் கொண்டிருந்தவர். சுவாமிஜி அமெரிக்காவில் இருந்து உயிரோட்டம் பொங்கும் பல கடிதங்களை அவருக்குத்தான் எழுதியிருந்தார். இவரோடு டாக்டர் நஞ்சுண்டராவ் என்பவரும் விவேகானந்தரிடம் பெரும் ஈடுபாடு கொண்ட சீடர். இவர்களைப் பாரதி தம்முடைய நெருங்கிய நண்பர்களாகப் பெற்றிருந்தார். அவர்களின் மூலம் விவேகானந்தரை மிக நெருக்கமாகவும் அறிந்திருந்தார்.

அழகியசிங்கப்பெருமாள் காலமானபோது, அவர் மறைவைக் குறித்து 'இந்தியா' பத்திரிகையில் பாரதியார் ஒரு தலையங்கம் வரைந்தார். 1909—ஆம் ஆண்டு எழுதிய அந்தத் தலையங்கத்தில்கூட விவேகானந்தரையும் அவருடைய தேச பக்தியையும், அவருடைய வேதாந்தப் பிரசாரத்தையும் புகழ்ந்து எழுதியிருக்கிறார்.

* பாரதி தமிழ்—பக்கம் 28

**விவேகானந்தரின் சீடர்**

விவேகானந்தரின் கருத்துகளையே தம் சிந்தனையாகவும், பேச்சாகவும், எழுத்தாகவும் வாழ்க்கையாகவும் அமைத்துக்கொண்ட பாரதியார், அவருடைய ஞான மகளான நிவேதிதையிடம் தீட்சைபெற்று அவருக்குச் சீடராகி, அவர்வழியே விவேகானந்தருக்கும் ஆன்மிகச் சீடரானார்.

நிவேதிதையைக் கண்டு தீட்சையும் உபதேசமும் பெறுவதற்கு முன்பே, பாரதி இந்திய விடுதலைப்போரில் ஈடுபட்டிருந்தாலும், சந்தேகங்களும் குழப்பங்களும் தோன்றி அடிக்கடி அவர் மனத்தை அலைத்தன. அவருடைய மனைவியும், உற்றார் உறவினர்களும், நண்பர்களும் அவரைச் சுதந்திரப் போராட்டத்தில் நேரடியாக ஈடுபட வேண்டாமென்று தடுத்தனர்.

குடும்பத்தில் இருந்த வறுமையும், பொறுப்புக்களும் அவர் மனதை அடிக்கடி குழப்பின. இந்தக் குழப்பங்களையும், சுதந்திரப் போராட்ட விளைவுகள் குறித்த பல சந்தேகங்களையும் நிவேதிதையின் உபதேசமே அவருக்குத் தீர்த்து வைத்தது; தெளிவான மனதைக் கொடுத்தது. சந்தேகங்களும், குழப்பங்களும் நீங்கிய பிறகு தம் வாழ்க்கை இலட்சியத்தைத் தெளிவாக உணர்ந்தார்.

'நமக்குத் தொழில் கவிதை, நாட்டுக்கு உழைத்தல், இமைப்பொழுதும் 'சோராதிருத்தல்' என்ற இலட்சியத்தை நோக்கி உறுதியோடு நடக்க ஆரம்பித்தார். தம் கவிதையைச் சிறுநூலாக முதன்முதலில் வெளியிட்டபோது அதைத் தம் குரு நிவேதிதைக்கு அர்ப்பணம் செய்தார். அதில் தம்முடைய இந்த மனநிலையைப் பாரதியார் தெளிவாகக் குறிப்பிடுகிறார்:—

''ஸ்ரீ கிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு விசுவரூபம் காட்டி ஆத்மநிலை விளக்கியதொப்ப, எனக்குப் பாரத தேவியின் சம்பூர்ண ரூபத்தைக்காட்டி சுதேச பக்தி உபதேசம் புரிந்தருளிய குருவின் சரணமலர்களில் இச் சிறு நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.''* என்று எழுதியுள்ளார்.

இவ்வாறு பாரதியார் என்ற மாபெரும் ஆற்றல் தமிழ் நாட்டில் உருவாவதற்கு விவேகானந்தர் காரணமாக இருந்தார். பாரதியார் உருவில் விவேகானந்தரின் கருத்துகள் கட்டுரைகளாகவும் கவிதைகளாகவும் தமிழ் மயமாகத் தமிழ் நாட்டில் புகுந்தன. அதன் பயனாகத் தமிழ் நாட்டுச் சுதந்திரப் போராட்டத்திலும், தமிழ் இலக்கிய வாழ்விலும் ஒரு புதிய சகாப்தம் உருவாகியது.



# கர்ணன்

அருட்பா அரசு கிரிதாரி பிரசாத்

கர்ணன் நன்றி மறக்காதவன். கண்ணன், கர்ணனை 'கட்சி மாறிவிடு. நீ பாண்டவர் பக்கம் வந்துவிடு. குந்திதேவிதான் உன் அம்மா. தம்பியர் ஐவர் பாண்டவர். நீ சூரியகுல மன்னன். நான் சொல்வதைக் கேள்' என்று ஆசைகாட்டியபோதும், கொஞ்சமும் மாறுமல் 'நான், கௌரவர் பக்கம் இருந்து போரிட்டு மடிவேன்' என்று சொன்னவன் கர்ணன்.

கர்ணன் பிறவிக் கொடைவள்ளல். இப்போது பணம் படைத்தவர் பலர் கொடுக்கப் பிரியப் படுவதில்லை. தொகையை எழுதிவிட்டு ஏமாற்றுவோர் பலர்.

சின்ன வயதிலேயே கர்ணன் கையேந்திய ரிஷிகளுக்கு நவரத்ன மாலையைக் கொடுத்தான். அவர்கள் கர்ணனை 'நீயே உலக வள்ளல்; உன்னைப்போல பிறக்க இனி யாருமில்லை' என்று பாராட்டினர்.

கர்ணன் எண்ணெய் தேய்த்துக் குளிக்கப் போனுன். அந்த நேரம் பார்த்துப் பிச்சை கேட்க ஒருவன் வந்தான். உடனே இடது கையால் தங்கக் கிண்ணத்தை எடுத்துக் கொடுத்தான். ஏன் தெரியுமா? நல்ல காரியம் உடனே செய்ய வேண்டும். காலம் கடத்தினுல் புத்தி மாறி விடும். எனவே, எந்தக் கை என்றும் பாராமல் உடனே கிண்ணத்தை எடுத்துக்கொடுத்து விட்டான்.

பாரதத்தில் பல வேலைகளுக்குக் கர்ணன் சூத்ரதாரி. குருவேகூட 'என்னிடம் கற்ற வித்தை உனக்குக் கை வராது' என்றபோதும் சுத்த வீரனுக வாழ்ந்தவன் அவனே. 'அஸ்தினுபுரத்து ராஜசபையில், பாண்டவ, கௌரவர்களுக்கு மத்தியில் வில்லேந்தி வீரங்காட்டத் துணிந்த நீ யார்? உன் பெற்ருேர் யார்? ராஜகுமாரரே இங்கே வில்லேந்திட முடியும்' என்ற கிருபாச்சார் கேள்விகட்குப் பதில் கூற முடியாமல் நின்ற கர்ணனை, 'அண்ணு' என்று துரியோதனன் அணைத்தான். பிறகு சபையில் இடிமுழக்கம் செய்தான்.

''தம்பிகாள்! அரச கிரீடத்தைக் கொண்டு வந்து சூட்டுங்கள். இவனே நம் அண்ணன். அங்க நாட்டு மன்னன். மண்டல பொக்கிஷம் இவனையே சேரும். நம் தளபதியும் இவனே.''

இதைக் கேட்ட கர்ணன், தாய் இல்லையே என்ற குறை நீங்கப்பெற்ருன். துணையில்லையே, பொருள் காணுமே, ஆட்சி வருமா என்ற ஏக்கங்கள் கர்ணனை விட்டுப் போயின.

இதைக் கடைசிவரை கர்ணன் மறக்கவில்லை. கண்ணன் ஆசைமொழி காட்டிய போதும், பெற்ற தாயான குந்திதேவியே கண்ணீர் வடித்து உருகி வேண்டியபோதும், நன்றி மறக்காமல் போரிட்டு மடிந்தான்.

நட்பா? உறவா? என்ற கேள்வி கண்ணனுல் கர்ணவிடம் எழுப்பப்பட்டபோது, தாய், சகோதரர்கள் உறவை விட துரியோதனனின் நட்பே உயிரினும் பெரியதாக மதித்து, நன்றி மறக்காமல் நட்பே பெரியது என்று தீர்மானமாக வாழ்ந்து காட்டினுன் கர்ணன்.

'என் நாட்கள் எண்ணப்படுகின்றன. நான் சத்ய வழி போகவே விரும்புகிறேன். உத்தமன் என்று பேரெடுக்க ஆசைப்படுகிறேன். சண்டாளத்தனம் செய்யப் போவதில்லை. என் பாவத்துக்கு நானே பொறுப்பு. நான் நீண்ட காலம் வாழப்போவதில்லை. சாகத் துணிந்து விட்டேன்' என்ருன் கர்ணன்.

கண்ணன் குந்திதேவியிடம் போனுன். 'அத்தை! உன் மகன் கர்ணன். அவன், நீ கன்னிப்பருவத்தில்பெற்றெடுத்துக்கைவிட்டுவிட்ட பிள்ளை. அவன்தான் உன் மகன் அர்ச்சுனனைக் கொல்வதாக சபதம் செய்திருக்கிருன். நீ போ. உண்மை பேசு. தாய்ப் பாசம், சகோதர வாஞ்சை காட்டி நம் கட்சிக்கு இழு. வரமாட், டான். அப்போது ஒரே ஒரு வாக்குறுதி கேள். அர்ச்சுனன் மீது ஒரு முறை ஏவிய பாணத்தை மறுமுறை ஏவுவது இல்லை என்ற உறுதிமொழி கேள், கொடுப்பான். வாங்கிவா!' என்ருன்.

அவ்வாறே சென்ற குந்திதேவி பால்சுரக்க நின்ருள். கர்ணன் பெற்ற தாயைக் கண்டு பரவசமடைந்தான். ஆனுலும் கட்சி மாற முடியாது என்று உறுதியாகச் சொல்லிவிட்டான். குந்தி கேட்டபடி உறுதிமொழியும் கொடுத்தான்.

துரியோதனன், கர்ணனை உண்மையான நண்பனுகக் கருதினுன்.

ஒருசமயம் கர்ணனும் துரியோதனின் மனைவியும் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்தார்

கள். கணவன் வருவதை அறிந்து அவள் எழுந்தாள். அப்போது கர்ணன் அவள் ஆடையைப் பற்றி இழுத்தான். மணிகள் சிதறின. துரியோ



தனன் கொஞ்சமும் சந்தேகப்படாமல் 'உட்காருங்கள், ஆட்டம் தொடரட்டும்' என்ருன். 'சிந்திய மணிகளைப் பொறுக்கவா, கோர்க்கவா' என்ருன். அப்பேர்ப்பட்ட நண்பனை எதிர்க்கவே மாட்டேன். அவனுக்காகப் போரிடுவேன்- என்ருன் கர்ணன்.

பாரதப் போர் நடந்தது. பதினேழாம் நாள். கண்ணன், வயோதிக பிராமணன் வேடம் பூண்டு அடிபட்டுக் கிடக்கும் கர்ணனை யாசகம் கேட்கப் போனன். கர்ணன் தனது உடம்பில் தைத்துள்ள அம்பைப் பிடுங்கிப் பீறிட்டு ஓடும் ரத்தத்தால் தாரை வார்த்துக் கொடுத்தான். பிறகு குந்திதேவி வந்தாள். சாகக்கிடக்கும் கர்ணனை மடிமீது கிடத்தினள். பாண்டவர்களுக்கு, கர்ணனே அவர்களுக்கு அண்ணன் என்று சொன்னள். இதை முன்பே சொல்லி இருந்தால் சண்டையே போட்டிருக்க மாட்டோம் என்று பாண்டவர் வருந்தினர்.

தம்பிகள் 'அண்ணு', 'அண்ணு' என்று கதறினர்கள். அம்மா, 'மகனே' என்று கதறினள். மனைவி ஓடோடியும் வந்து உச்சி மோந்து முத்தமிட்டாள். துரியோதனனே ''நன்றிக்கு இலக்கணமான கர்ணு!'' என்று அழுதபடி நின்ருன். அந்த நேரம் கண்ணன் தோன்றி ''உனக்கு என்ன வரம் வேண்டும்'' என்ருன். 'இல்லையென்று சொல்லாத கொடை உள்ளத்தை எனக்குக் கொடு' என்ருன் கர்ணன். வானவர் வரவேற்க, போர்க்களத்தில் மனைவி, சகோதரர்கள், கௌரவர்கள் தேம்பித் தேம்பி நிற்கச் சொர்க்கம் புகுந்தான் கர்ணன். நாம் கர்ணனைப் போல நன்றியுடன் வாழ வேண்டும்.





## நன்றி நவில்கிருேம்

ஆண்டுக்கு ஒருமுறை விஜயம் சிறப்பு மலராக வெளிவருவது வாசகர்கள் அறிந்ததே. இந்த ஆண்டு, ஆடி மாதமாகிய இம்மாதம் சிறப்பு மலராக விஜயம் வெளியிடப்படுகிறது.

சிறப்பு மலருக்கு கட்டுரை, கவிதைகளை வழங்கிய அன்பர்கள் அனைவருக்கும், விளம்பரங்களைத் தந்துதவிய நிறுவனங்களுக்கும் எமது ஆழ்ந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிருேம்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்



# ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கதைகள்*

அ. அ. மணவாளன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20

பகவான் இராமகிருஷ்ணரின் உபதேசங்களைத் தமிழில் வெளியிட்டு, மக்களின் மனதையும் அதன் வழியாக மானிட வாழ்க்கையையும் உயர்த்த, செம்மைப்படுத்த—பல்லாண்டுகளாகத் தொண்டு செய்து வரும் அற நிறுவனமான இராமகிருஷ்ண மடத்தார், இந்நூலைத் தமிழில் வெளியிட்டுள்ளனர். இராமகிருஷ்ண பரமஹம்சர் அவ்வப்போது மக்களுக்கு எடுத்துக் கூறி வந்த இந்தக் கதைகளைத் தமிழில் தந்தவர் யாரென்னும் ஆசிரியர் குறிப்பு தரப்படவில்லை. திருமடத்தின் வெளியீடு என மட்டும் குறிக்கப்பட்டிருப்பதால், அவர்களுடைய உண்மையான தொண்டுள்ளம் புலப்படுகிறது. எல்லாம் பிரம்ம சொருபம் என்பார்க்கு, எல்லாம் பிரம்ம சாதனங்களாகவே தென்பட்டமை இந்நூல் சொல்ல வந்த கருத்தோடு பெரிதும் பொருந்தியிருப்பதைக் காணலாம்.

**நீதிக் கதைகள் (Parables)**

சமய உண்மைகளைப் பரப்புவதற்காகவும், மிக எளிமையாக விளக்குவதற்காகவும், சமயக் குரவர்களும் ஞானிகளும் பயன்படுத்திய ஒரு வகை இலக்கிய வடிவம்தான், நீதிக் கதைகளாக இன்று பெரும்பாலும் எல்லா மொழிகளிலும் காணப்படுகின்றன. சமயம் எவ்வளவு பழைமையானதோ அவ்வளவு பழைமையானது இந்த இலக்கிய வடிவம். நூல்கள் மிகுதியாகப் பெருகாத காலத்தும், படிப்போர் தொகை பெருகாத காலத்தும், இந்த இலக்கிய வகையானது கால்கொண்டது. நமக்குத் தெரிந்த, கிடைத்துள்ள நீதிக் கதைகளில் புதிய ஏற்பாட்டில் காணப்பெறும் ஏசுவின் கதைகள் தாம் மிகவும் தொன்மையானவை.

இக்கதைகளில் வரும் பாத்திரங்கள் மானிடர்களாக இருப்பர்; கதைகளால் விளக்கப்பெறும் சமய உண்மைகளே அடிப்படை இலக்காக இருக்கும்; அளவில் சிறியனவாக இருப்பினும் சிந்தனையைக் கிளறுவனவாக இருக்கும்; இப்பண்புகள் இவ்வகை இலக்கியத்தின் இன்றியமையாத இலக்கணங்களாகும்.

அறிமுகத்திற்குரிய இந்நூலில் மொத்தம் 61 நீதிக் கதைகள் உள்ளன. இவை

1. உலக ஆசைகள் துன்பத்தைத் தரும்
2. காமமே எல்லாப் பந்தங்களுக்கும் காரணம்.
3. உள்ளம் உயர ஞானம் உயரும்
4. அரைகுறை வேதாந்தம்
5. மதப்பித்து
6. நம்பிக்கை வேண்டும்
7. சன்னியாசமும் வைராக்கியமும்
8. மாயையின் இயல்பு
9. உண்மை ஞானம்

என்னும் ஒன்பது தலைப்புக்களில் அடங்கியுள்ளன.

பகவான் இராமகிருஷ்ணர் தம் சிடர்களின் உள்ளத் தெளிவிற்காகவும், தூய்மைக்காகவும் அவ்வப்போது கூறிய கதைகளை முறைப்படுத்தி வகை செய்து இந்நூலில் தந்துள்ளனர். முதலில் மானுட வாழ்வில் மயக்கம் விளைவிப்பனவாகக் காமம், காஞ்சனம், அதாவது பெண், பொன் என்ற இரண்டு பற்றுக்களையும் எடுத்துக்கூறி, அவற்றால் மனிதன் படும் அவதிகளையும் தொல்லைகளையும் விளக்குகிறார் பகவான்.

இவற்றிலிருந்து விடுதலை பெற விரும்புவோர், தம் உள்ளத்தையே முதலில் செம்மைப்படுத்த வேண்டும் என்று கூறுகிறார். பின்னர், புறச் சடங்குகளாலும் வெற்று அறிவினாலும் மெய்ஞ் ஞானம் பிறவாதெனவும், சமயச் சண்டைகளில் ஈடுபடுவோர் உண்மையாக இறைவனை உணராதார் எனவும் காட்டப்படுகிறது. உண்மையான, கலக்கமற்ற இறை நம்பிக்கையே அடிப்

---

*பொது நூலக விநியோகச் சட்டப்படி, சென்னை கன்னிமாரா பொது நூலகத்தில் 1977 ஏப்ரலில் 64 புதிய தமிழ் நூல்கள் பெறப்பட்டன. இவைகளுள் ஐந்து நூல்களைச் சிறந்த நூல்களாகத் தமிழ்நாடு அரசு பொது நூலகத்துறையினர் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

சென்னை மாவட்ட மைய நூலகத்தில் 21-5-77 சனிக்கிழமை மாலை 6 மணிக்கு, தமிழ்நாடு பொது நூலகத்துறையின் சார்பாக **நூல்கள் அறிமுகக் கருத்தரங்கு-2** நடைபெற்றது. கருத்தரங்கில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து நூல்களும் திறனாய்வு செய்யப்பட்டன.

தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்களில் ஒன்றாகிய 'ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்ன கதைகள்' நூலை அ. அ. மணவாளன் அவர்கள் அறிமுகப்படுத்திப் பேசினார். அவரது உரை தரப்பட்டிருக்கிறது

படைத் தேவை என்பதைச் சில கதைகள் காட்டுகின்றன. வெறும் நூலறிவால் மட்டும் ஞானம் பிறவாது. நம்பிக்கையே இறைவனைக் காட்டக் கூடியது என்பதைப் **பால் மனம் கொண்ட பால்காரி** என்ற கதை விளக்குகிறது. பின்னர் நம்பிக்கை கொண்டவர்கள் தளராமல் வைராக்கியம் பெற வேண்டும் என்றும் பல கதைகள் விளக்குகின்றன. வைராக்கியம் வந்தமைந்தாலும், மாயையின் பாதிப்பிலிருந்து



நீங்க மாயையின் உண்மைத் தன்மையை உணர்ந்து தக்க குருவின் மூலம்தான் தெளிவு பிறக்க முடியும் (பக்கம் 153) என்ற கருத்தும் கதைகளாக மிளிர்கின்றன. இறுதியாக, மீண்டும் உள்ளத் தூய்மையே உண்மைத் தூய்மை, இறைவனை அடையும் முதற்படி என்பது விளக்கப்படுகிறது.

மேற்காட்டிய முறை வைப்பு, இக்கதைகளைச் சொன்ன பகவான் இராமகிருஷ்ணருடையதன்று. இந்நூலைத் தயாரித்த அறிஞர், பகவானின் கதைப் பொருளை நன்கு 'ஆய்ந்து, சமய போதனையின் இயல்பினையுணர்ந்து, தருக்க முறையில் கோத்து இருப்பது பெரும் பயன்தரத் தக்கது; இது அவர்களுடைய பழுத்த அனுபவத்தையும் காட்டுகிறது.

அறிவியல் வளர்ச்சி பெற்ற இக்காலத்துக்கும் இக்கதைகள் பொருந்துமா என்னும் ஐயம் சிலருக்கு எழலாம். பொருந்தும் என்பதை இக் கதைகளே நன்கு காட்டும். மன அமைதி என்பதை வேண்டாதார் இக்காலத்திலும் யாருமில்லை. மானுட வாழ்க்கையின் நெறிமுறைகளில் வேறுபாடுகள் விளையினும், அடிப்படைப் பண்புகளில் இன்னும் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. நம்முடைய மனதை ஒருமைப் படுத்தக்கூடிய ஆற்றல் விஞ்ஞானத்திடம் இல்லை என்பதற்கு அமெரிக்கா போன்ற நாடுகளில் "Trancendental Meditation" என்ற மனப் பயிற்சி முகாம்கள் ஏராளமாகத் தோன்றி வருவதைச் சான்றாகக் காட்டலாம்.

இல்லறத்தை விடத் துறவறமே சிறந்தது எனப் பல கதைகள் இந்நூலில் கூறினும், எல்லாக் கதைகளும் இவ்வுலக வாழ்க்கையையும் செம்மையாக நடத்த வேண்டும் என்ற அடிப்படையைத்தான் பேசுகின்றன. இதில் காட்டப்பெறும் விவசாயி, நெசவாளி, பால்காரி, மீன்காரி, விலைமகள் போன்ற வாழ்க்கை முறைகளைக் கூடாது என ஒதுக்கவில்லை. மாறாக, இத்துறை வாழ்க்கையிலும் ஒருவன் எவ்வாறு இறைப்பற்றுடன் வாழவேண்டும் என்பதையே காட்டுகின்றன. எடுத்துக்காட்டாக, சன்னியாசி ஒருவன், விலைமகள் ஒருத்தியின் பாவச் செயலையே எண்ணி எண்ணி அவளுக்காக இரங்கினும், தான் தீமையின் தன்மையில் ஈடுபட்டு வீடுபேற்றை இழக்கிறான் என்பதையும், விலைமகள் தன் ஈனத் தொழிலிடையேயும் உள்ளத் தூய்மையுடனிருப்பதால் வீடுபேறு அடைகிறாளென்பதையும் ஒரு கதை கூறுகிறது (பக்கம் 31–35). 'மனம் சார்ந்ததன் வண்ணமாகும்' என்ற உளவியல் அடிப்படையில் அமைந்த இக் கதை, இன்றும் நமக்குப் பொருந்துகிறதைக் காணலாம்.

நன்கு கற்று மேனிலையில் உள்ளவர்க்கும் இந்த எளிய கதைகள் நன்கு பயன்படும். பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த மஜூம்தாருக்குப் பகவான் சொன்ன கதையான, 'யாருடைய குடிசை?' இதற்கு நல்லதொரு சான்றாகும். அலைச்சல் மிகுதியும் மனக்குமுறல் அதிகமும் விளையும் இன்றைய வாழ்க்கையில் உள்ளவர்க்கு, இக்கதை மிகவும் தெளிவூட்டக்கூடியதாக உள்ளது. "எல்லாம் கடவுள் சங்கல்பத்தின்படியே நடக்கும்" (பக்கம் 72) என்ற உண்மையறியாமல் இக்கால மக்கள், அதிலும் மேல்தட்டு மனிதர்கள் "கோடியும் அல்ல பல

கருதி'' அல்லல் உழல்வது வேண்டாம் என்பதை இக்கதை நமக்குத் தெளிவுறுத்துகிறது. இத்தெளிவு நமக்கு இருக்கிறதா? இல்லையானால் நமக்கு வேண்டாமா? வேண்டுமானால் இக்கதை கூறுவதுபோல் கடமையைப் பற்றின்றி செய்ய முயலுவோம்; பயனைக் கடவுள் பார்த்துக்கொள்வார். 'வீணாக அலைய வேண்டாம்' என்ற கருத்து வெறும் வேதாந்தமன்று; இன்றைய வாழ்க்கையில் உள்ள ஒவ்வொருவர்க்கும் தேவையானது.

மக்களின் முழுமைக்கும் பயன் தரக்கூடிய இந்த நீதிக் கதைகளை ஆராய்ந்து, தொகுத்துத் தமிழ் மனங்களுக்குப் புதுத்தென்பு ஊட்டும் பணியைச் செய்த ஸ்ரீராமகிருஷ்ண மடத்தார் பெரிதும் பாராட்டுக்குரியவர்கள். வாழ்க அவர்தம் அன்புத்தொண்டு.



# ஆறுதல் மொழிகள்

**தூய அன்னை ஸ்ரீ சாரதா தேவியார்**

> சீடர் ஒருவரின் கேள்விகளுக்கு, ஸ்ரீ அன்னையார் அளித்த பதில்கள் 'ஆறுதல் மொழிகள்' என்னும் தலைப்பில் இடம் பெறுகின்றன.

''அம்மா, நான் எப்படி வாழ வேண்டும்?'' என்று அன்னையைக் கேட்டேன்.

''இப்போது எப்படிச் செய்கிறாயோ அப்படியே செய். எப்போதும் பகவானைத் தாபத்துடன் (அருள் தாகத்துடன்) விடாமல் நினைத்து, தியானித்து, பிரார்த்தித்து வா'' என்று அன்னையார் பதில் சொன்னார்.

''அம்மா, மகாபுருஷர்களும் கூட லட்சியத்திலிருந்து நழுவி விடுவதைப் பார்க்கும்போது எனக்குப் பயமாக இருக்கிறது.''

''போகப் பொருள்களுக்கிடையிலேயே ஒருவன் வாழ்வானாகில் அவன் அவைகளால் கவரப்படுவது இயல்பே. பெண்ணுருவில் உள்ள ஒரு மரப்பாச்சி பொம்மையின்மீது கூட உன் பார்வையைச் செலுத்தி விடாதே. அதன் அருகிலும் போகாதே.''

''ஆனால், மனிதனின் எந்தச் செயலையும் தூண்டுவதும் ஆண்டவனே என்பது உண்மை தானா?''

''ஆம், அது உண்மைதான். ஆனால் மனிதன் அதை உணர்ந்து வாழ்கிறானா? குருட்டு மோகத்தினால், தானே கர்த்தா என்று எண்ணிக் கொண்டிருக்கிறான். பகவானைச் சார்ந்து நில்லாமலே இருக்கிறான். இறைவனிடம் எவனொருவன் சரணாகதி செய்தாலும் அவன் மீட்கப்படுகிறான்.

''ஒரு சாதுவானவன் எப்போதும் விழிப்புடன் (ஜாக்கிரதையாக) இருக்க வேண்டும். அவனுடைய பாதை மிகவும் வழுக்கி விடுவதாகும். வழுக்குப் பாதையில் மிகமிக கவனத்துடன் தான் அடியெடுத்து வைத்து முன்னேற வேண்டும். சன்னியாசியாக இருப்பது என்பது தமாஷா என்ன? அவன் பெண்களைப் பார்க்கவும் கூடாது. தெருவில் செல்லும்போது அவனது பார்வை தனது கால் கட்டை விரல்களின் மீதே பதிந்திருக்க வேண்டும். வீட்டு நாயைத் தெரு நாயாக நினைத்து எவரும் கொல்லாமலிருக்க அதன் கழுத்துப்பட்டை காப்பாக இருப்பது போல சன்னியாசியை, அவனது காவியுடை தீங்கிலிருந்து காக்கிறது. அவனுடையதே ராஜமார்க்கம். அதில் எவரும் குறுக்கே வராமல் அவனுக்கு வழிவிடுகிறார்கள்.

''மனம் இயற்கையாகத் தீமைகளை நோக்கித் தான் செல்கிறது. நல்லதைச் செய்ய அது விரும்புவதில்லை. அதிகாலையிலேயே விழித்தெழுந்து தியானம் செய்வதை நான் பழக்கமாக்கிக் கொண்டிருந்தேன். ஒருநாள் உடல்நலக் குறைவால் அவ்வளவு அதிகாலையில் எழ முடியாமல் தவறி விட்டேன். மனதின் இயல்பை, அதன் இயல்பான சோம்பல்தனத்தை (ஆலஸ்யத்தை)ப் பாருங்கள்– அன்றிலிருந்து பல நாட்கள் நேரமான பின்பே எழுந்திருக்கலானேன். அதனால் நீங்கள் நல்லதாக, பெரியதாக எதையாவது சாதிக்க விரும்பினீர்களானால் மனதை நிமிர்த்திக்கொண்டு சுறுசுறுப்புடன் காரியங்

களைச் செய்து வர வேண்டும்.

''தட்சிணேஸ்வரத்து நஹபத்தில்* நான் வாழ்ந்த காலத்தில், கங்கையின் அமைதியான நீர்ப் பெருக்கில் வெள்ளிநிலா பிரதிபலிப்பதைப் பார்ப்பேன். பார்க்கையில் கண்ணீர் விட்டு பகவானைப் பிரார்த்திப்பேன்: 'ஹே பிரபோ! அதோ தெரியும் அந்த சந்திரனிலும் கூடக் களங்கங்கள் உள்ளன. என் மனம் முற்றிலும் களங்கத்திலிருந்து விடுபட்டிருக்கட்டும்!''

''நீ ஒரு கல்கத்தா நகரத்துப் பையன்; நீ கல்யாணம் பண்ணிக்கொண்டு சுலபமாக வசதியாக வாழ்ந்திருக்கலாம். ஆனால் நீ எல்லாவற்றையும் துறந்து விட்டாய். உன் மனம் ஏன் இப்போது இம்மாதிரி எண்ணங்களுக்குத் திரும்ப வேண்டும்?''

''அம்மா, பிராணாயாம அப்பியாசமும் ஆசனங்களும் உதவியானவைகள்தானா?''

''இவைகளைப் பழகுவதால் ஒருவருக்கு அஷ்ட சக்திகள் கைகூடுகின்றன. இந்தச் சக்திகள் ஒருவனை வழி தவறிச் செல்ல வைக்கின்றன.''

''சாது ஒருவர் புண்யஸ்தலங்களுக்குச் செல்ல வேண்டுவது அவசியம்தானா?''

''எதற்காகச் செல்ல வேண்டும்? நிலையாக ஓர் இடத்திலேயே அவன் அமைதியையும், சாந்தியையும் உணர்வானாகில் எதற்கு யாத்திரை செல்ல வேண்டும்?''

''எனக்கு மன ஒருமைப்பாடு உண்டாவதே இல்லை. கிருபை கூர்ந்து என் குண்டலினியை விழித்தெழச் செய்யுங்கள்.''

''அவள், (குண்டலினி) தன்னால் விழித்தெழுவாள் என்று நிச்சயப்படுத்திக்கொண்டு அமைதியாய் இரு. இதனால் (நாம் ஒன்றும் செய்யாமல்) அவளாகத் தன்னை எழுப்பிக் கொள்வாள் என்று அர்த்தமில்லைதான். நீ சாதனை செய்ய வேண்டும். விடாமல் தியானம் பழகி வா. நாளடைவில் உன் மனம் மெல்ல மெல்ல அடங்கி அமைதியாகி நிலைத்து நிற்கும். அந்த நிலையில் தியானத்திலிருந்து விலகி நிற்பது உனக்குச் சிரமமாக இருக்கும். ஆனால் தியானம் என்பதை வலுக்கட்டாயப்படுத்திக் கொண்டு பயிலக்கூடாது. என்றைக்காவது ஒரு நாள் உனக்கு தியானம் செய்வது சிரமமாக இருந்தால், பகவானுக்கு நமஸ்காரங்களைப் பண்ணிவிட்டு தியானத்தை நிறுத்தி விடு. மற்ற நாட்களில் தியானம் தானே சுகமாக சுலபமாக வரும்.''

''எதனால் என் மனதை அமைதியாக்கி ஒருமுகப்படுத்த முடியாமல் போகிறது? தியானத்தின்போது மனம் பல சிந்தனைகளால் அலைப்புறுவதைக் காண்கிறேனே!''

''உண்மைதான். மனமானது பணத்தையும் மனைவி மக்களையும் பற்றியே நினைக்குமானால், அது நல்லதில்லைதான். ஆனாலும் அவரவருக்கும் தங்கள் வேலையைப் பற்றிய எண்ணம் இருந்து கொண்டிருப்பது இயற்கை. சரி, உன்னால் தியானம் செய்ய முடியாவிட்டால் கடவுளின் நாமத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே இரு. **ஜபாத் ஸித்திஃ** அதாவது பகவத் நாம உச்சாரணத்தாலேயே கடவுளின் சாட்சாத்காரம் கிடைக்கும். ஆமாம். நாளடைவில் ஜபமே ஆத்மானுபூதி தரும். நீ தியானம் செய்ய முடிந்தால் மிகவும் நல்லது தான். முடியாவிட்டாலும் பரவாயில்லை. நீ அதைக் கட்டாயப்படுத்த வேண்டாம்.''

''அம்மா நான் வாராணஸி (காசி) மடத்தில் இருந்துகொண்டு சாதனை செய்யட்டுமா, அல்லது தனிமையான இடத்தை நாடி எங்காவது சென்று விடட்டுமா? இரண்டில் எது சிறந்தது?''

''முதலில் ஹ்ருஷீகேசம் போன்ற ஓர் ஏகாந்தமான இடத்தில் சிறிது காலம் சாதனை செய். இதனால் உனது மனதில் ஒரு பலம் உண்டாகும். அந்த பலமானது, அதன்பின் எந்த இடத்தில் எப்படிப்பட்ட ஸங்கத்தில் நீ இருந்தாலும் உன் மனத்தை பாதிப்புறாமல் வைத்திருக்கும். ஒரு சிறு செடியை ஆடும் மாடும் மேயாமல் வேலியிட்டுக் காக்க வேண்டியதாகிறது. ஆனால், வளர்ச்சியுற்ற மரத்துக்கு ஆடு மாடுகளிடமிருந்து பயமில்லை. நீ ஞானத்தை விரும்பிய போதிலும், உன்னுடைய மனம் விரும்பத்தகாத எண்ணங்களால் கிளறி விடப்படும் போது பகவானிடம் மனமாரப் பிரார்த்தனை செய். அவன் உன் சித்தத்தைச் சுத்தம் செய்வான். உன் சந்தேகங்களைத் தெளிவிப்பான்.''

* தட்சிணேஸ்வர ஆலயத்தில் இசை வழிபாட்டுக்கான அறை. தூய அன்னையார் இங்குதான் தங்கி வந்தார்.



## அன்பு நெஞ்சங்களுக்கு இம்மலர் காணிக்கை

பாரத நாட்டுத் தத்துவ ஞானத்தைப் பாரெங்கும் பரப்பிய நவயுக நாயகரும், தெய்வத் தொண்டையும் மக்கள் தொண்டையும் இணைத்துப் புதிய சகாப் தத்திற்கு வித்திட்ட வீரத் துறவியுமான விவேகானந்த வள்ளலைப் பின்பற்றி வாழும், வாழ முயலும் அன்பு நெஞ்சங்கள் அத்தனைக் கும் இந்த ஆண்டு விஜயம் சிறப்புமலர் பணிவன்போடு காணிக்கையாகச் சமர்ப்பிக்கப் படுகிறது.

— ஆசிரியர்



தாயகத்தின் காவல் தெய்வம்



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

(16—7—77 முதல் 15—8—77 வரை)

**ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணானந்தர் ஜயந்தி: பொதுக்கூட்டம்**

*17—7—77 ஞாயிறு :* தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்

*மாலை 5 மணி முதல் 7 மணி வரை* சொற்பொழிவாளர்: சுவாமி ஆத்மானந்தர்
ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆஸ்ரமம், ராய்ப்பூர் (ஆங்கிலம்)
திரு தி. சு. அவிநாசிலிங்கம்
ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலயா,
கோயம்பத்தூர் (தமிழ்)

**சத் சங்கம்: ஞாயிறுதோறும்** மாலை 4 மணி முதல் 8 மணி வரை

*மாலை 4 முதல் 4.20 வரை* ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (24—7—77 & 7—8—77)
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (31—7—77 & 14—8—77)

*மாலை 4.20 முதல் 4.30 வரை* தியானம்

*மாலை 4.30 முதல் 5.30 வரை* சொற்பொழிவு (தமிழ்)
1. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்
   திரு V. R. கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (24—7—77)
2. ஸ்ரீமத் பாகவதம்-திரு 'அண்ணா' சுப்ரமண்யம் (31-7-77 & 7-8-77)
3. ஸ்ரீமத் ராமாயணம்
   டாக்டர் என். வீழிநாதன் (14—8—77)

*மாலை 5.35 முதல் 6.30 வரை* சொற்பொழிவு (ஆங்கிலம்)
ஸ்ரீமத் பகவத்கீதை—சுவாமி கபீரானந்தர்

**சிறப்புச் சொற்பொழிவுகள்:**

*சனிக்கிழமை மாலை 5.45மணிக்கு*
1. ஸ்ரீமத் பாகவதம்
   சுவாமி கோலோகானந்தர் (23—7—77 & 30—7—77)
2. இராமாயணத்தில் ஆராய்ச்சி
   திரு பி. ராமகிருஷ்ணன் (6—8—77)
3. நாராயணீயம்—திரு க. கோதண்டராமன் (13—8—77)

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்**—*(மாலை 5-45)*

*திங்கள்:* (ஆங்கிலம்) ஸ்ரீ ராமகிருஷ்ண கதாம்ருதம்
—சுவாமி அம்ருதானந்தர்

*செவ்வாய்:* (ஆங்கிலம்) ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்
—சுவாமி கபீரானந்தர்

*புதன்:* (தமிழ்) மகாபாரதம்—திரு 'அண்ணா' சுப்ரமண்யம்

*வியாழன்:* (ஆங்கிலம்) ஸ்ரீமத் பாகவதம்—சுவாமி கோலோகானந்தர்

*வெள்ளி:* (தமிழ்) ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்
—பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

*வெள்ளி:* (ஆங்கிலம்) ஸ்ரீமத் பகவத்கீதை மாலை 6-30
சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம் 18, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி.)

**விசேஷ தினங்கள்:** அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (24—7—77)
ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்: ஏகாதசி தினங்களில்
ஆரதிக்குப் பிறகு (27—7—77, 10—8—77)

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்

தலைவர்,
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

தொலைபேசி: **71231**

A—1